உ

சிவமயம்

# தக்ஷிணகைலாச புராணம்

## பகுதி 11


ஆக்கியோன்

யாழ்ப்பாணத்து நல்லூர்

மகா வித்துவான் சிங்கைச் செகராசசேகரன்

பொருளாக்கம்

பண்டிதர் கா. செ. நடராசா

பதிப்பாசிரியர்

பேராசிரியர் சி. பத்மநாதன்



வெளியீடு

இந்து கலாசார அலுவல்கள் திணைக்களம்

கொழும்பு – 07

இலங்கை.

# தக்ஷிணகைலாச புராணம்

# பகுதி 11

ஆக்கியோன்
யாழ்ப்பாணத்து நல்லூர்
மகா வித்துவான் சிங்கைச் செகராசசேகரன்

பொருளாக்கம்
*யாழ்ப்பாணத்து இணுவையூர்*
*பண்டிதர் கா.செ. நடராசா*
*சிறப்புக் கலைமாமணி (தமிழ்)*

பதிப்பாசிரியர்
*கலாநிதி சி. பத்மநாதன்*
*வரலாற்றுத் துறைப் பேராசிரியர்*
*பேராதனைப் பல்கலைக்கழகம்*
பிரதித் தலைவர், பல்கலைக்கழக மானியங்கள் ஆணைக்குழு

வெளியீடு
*இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம்,*
*98, வோட் பிளேஸ்,*
*கொழும்பு-07*

## நூல் விளக்கக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | – | தக்ஷிணகைலாச புராணம் பகுதி II |
| பதிப்பாசிரியர் | – | பேராசிரியர் சி. பத்மநாதன் |
| பொருளாக்கம் | – | பண்டிதர் இணுவையூர்<br>கா.செ. நடராசா<br>சிறப்புக்கலைமாணி (தமிழ்) |
| வெளியிட்டோர் | – | இந்துசமய கலாசார அலுவல்கள்<br>திணைக்களம் கொழும்பு |
| நூல் பதிப்பு | – | டிசம்பர் 1995 |
| நூல் வடிவம் | – | 1/8 |
| அச்சுத்தாள் | – | 70 கிராம் வெள்ளைக் கடதாசி |
| அட்டை | – | ஆர்ட் போட் |
| எழுத்துக்கள் | – | ஒவ்செட் |
| மொத்தப் பக்கங்கள் | – | I - 48 + 149 |
| பிரதிகள் | – | 1000 |
| பைன்டிங் | – | செக்ஷன் |
| விலை | – | ரூபா 100/- - |
| அச்சிட்டோர் | – | யுனி ஆர்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்<br>48,B புளூமென்டால் வீதி கொழும்பு -13 |

வெளியீடு:

இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம்,

98, வோட் பிளேஸ்

கொழும்பு-7

இலங்கை.

1995

# வெளியீட்டுரை

தக்ஷிண கைலாச புராணத்தின் முதல் நான்கு சருக்கங்களையும், கொண்டதாய் நூலின் முதலாம் பாகம் இவ்வருடம் மார்ச் மாதத்தில் வெளியிடப்பட்டது. நூலின் இரண்டாவது பாகம் இப்பொழுது வெளியிடப்படுகிறது. இலங்கையின் இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெறும் இந்நூல் கிடைப்பதற்கு அரியதாயிருந்தது. இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம் இதனை மூன்றாவது பதிப்பாக வெளியிடுவதன் மூலம் இவ்வரிய நூலினை யாவரும் பெற்றுப் பயன் பெற வழி செய்துள்ளது. இப்பணியில் எமக்கு உதவிய புண்டிதர் கா.செ.நடராஜா, பேராசிரியர் சி. பத்மநாதன் ஆகியோருக்கு என் மனமுவந்த நன்றி.

இந்துசமய கலாசார அலுவல்கள்
திணைக்களம்,
98, வோட் பிளேஸ்
கொழும்பு– 07.

க. சண்முகலிங்கம்
பணிப்பாளர்,

# என் கருத்து

*படிப்பவர்க்கு:*

தட்சண கைலாச புராணம் 1ம் பகுதி வெளியிடப்பட்ட போது 'என்கருத்து' என்ற தலைப்பில் இப்புராணத்தின் உண்மைத் தகவல்கள் கொடுக்கப்பட்டன. அத்தோடு பேராசிரியர் சி. பத்மநாதன் அவர்கள் வரலாற்றுத் தரவுகள் கொண்ட நீண்ட முன்னுரை ஒன்றும் கொடுத்துள்ளார். எனவே மீண்டும் அவற்றினைக் கூறுதல் வேண்டாம்.

தட்சண கைலாச புராணம், புராண வரலாற்றில் சிறப்பிடத்தினைப் பெறுகின்றது. அது; இலங்கையில் வளர்ந்த தமிழுக்கும், அத்தமிழின் செழுமைக்கும் ஓர் உரைகல். இவ்வுரைகல்லின் மூலம், தமிழின் மாற்று விடாத் தன்மையைப் பெரும்புலவர் மகாவித்துவான் சிங்கைச் செகராச சேகரன் நிலைப்படுத்தியுள்ளார். சங்க காலம் தொட்டு இற்றைவரை வாழ்ந்த தமிழ்ப்புலவர்களில் புரவலரான மன்னர்களும் வேளிர்களும் வள்ளல்களும் இடம்பெற்றுள்ளனர். அப்பட்டியலின் யாழ்ப்பாணத்து நல்லூர் மகாவித்துவான் சிங்கைச் செகராச சேகர மன்னருக்கும் சிறப்பிடம் ஒன்றுண்டு,

மன்னர் தம் புலமைத் திறத்தால், இலங்கையின் மண்வளத்தையும் மொழி வளத்தையும் விளக்கமுறச் செய்துள்ளார். சிலம்பின் மொழிச் சுவையும் – கம்பனின் கவிச் சுவையும் – மூலரின் சிவ தத்துவச் சுவையும், சேக்கிழாரின் அருட்சுவையும், அருணகிரியின் இசைச்சுவையும் ஒருங்கு அமையப் பெற்றதே தட்சண கைலாச புராணம். இக்கூற்று மண்ணின் பற்றால் வந்த வியப்புரை அன்று. உரை எழுதிய பொழுது அனுபவித்து உணர்ந்த கருத்துரை. இதனை படிக்கும் பொழுது உணர்வீர்கள். எனவே எனது உரை முடிந்த முடிபன்று. இப்புராணம் நவில் தோறும் நயம் பயப்பது. அந்த நய உணர்வினை நீங்கள் பெறுவதற்கு என் உரை துணை புரிந்தால் அதுவே நான் பெற்ற பெருநலம்.

இந்நூலை வெளியிடுவதற்கு இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களப் பணிப்பாளர் திரு. க. சண்முகலிங்கம் அவர்கள் தலைமையில் செயற்பட்ட பிரதிப்பணிப்பாளர் திருமதி சாந்தி நாவுக்கரசன், உதவிப்பணிப்பாளர்கள் திரு.வீ.விக்கிரமராஜா, திரு. சீ. தெய்வநாயகம் ஆகியோர் நினைவுகூரத் தக்கவர். அவர்களின் கூட்டு முயற்சியும் அச்சகத்தாரின் தொழிற்பாடும் நலமுற அமைந்ததால் இந்நூல் நல்ல முறையில் வெளிவந்துள்ளது. இவர்கள் அனைவரும் என்னை இப்பணியில் ஊக்கி நின்றதன் பயனாக இராமரணைக்கு அணிற்பிள்ளை மண் நிரப்பியது போன்று என் பங்களிப்பினையும் செய்துள்ளேன். இராம காவியத்தில் அணிற்பிள்ளை இடம்பெற்றது போல் தமிழ் இலக்கிய வரலாற்றில் எனக்கும் ஓர் சிற்றிடத்தைப் பெற்றுத் தந்த இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்கள மேலாண்மை உடையோர் அனைவர்க்கும் எனது நன்றி.

கா.செ. நடராசா.
*"கார்த்திகேயம்"*
யாழ்ப்பாணம்,
இலங்கை.

## பொருள் வேட்டல்

*கற்றமிழால் இன்சுவையை*
*ஊட்டிடவே இவ்வுலகில்*
*பொன்திகழும் ஈழத்துப்*
*பெரும்புலவர் செய்த பணி*
*மண்திகழும் இவ்வுலகில்*
*நின்று நிதம் நிலவுவதால்*
*அன்னவர்க்கே என்னுரையை*
*மனம்மகிழ்ந்து வேட்கின்றேன்*

உரை ஆசிரியன்,
கா.செ. நடராசா.

# பொருளடக்கம்

# திருகோணமலையிற் சோழ இலங்கேஸ்வரன்

## 1) இலங்கையிற் சோழ இலங்கேஸ்வரன்

பத்தாம் நூற்றாண்டின் முடிவிலே, அருண்மொழி வர்மனாகிய முதலாம் இராஜராஜ சோழனின் ஆட்சியில் (985–1016), அயலிலுள்ள இராச்சியங்கள் பலவற்றைக் கைப்பற்றி வலிமைமிக்க பேரரசொன்றைச் சோழர்கள் அமைத்தார்கள். அவனுடைய ஆட்சியின் ஆரம்பத்திற் பாண்டிநாடு, சேரநாடு, இலங்கை, கொல்லம், கங்கபாடி, நுளம்பபாடி, வேங்கி ஆகியவற்றையும், மேற்கிலுள்ள தீவுக்கூட்டங்கள் சிலவற்றையுஞ் சோழர் கைப்பற்றிக் கொண்டனர். [1]

தமிழகத்திற்கு வடக்கிலுள்ள இராச்சியங்கள் மீது சோழர் நடாத்திய படையெடுப்புகளுக்கு, இளவரசனான மதுராந்தகன் தலைமை தாங்கிச் சென்றான். அவன் போர்களில் ஈட்டிய சாதனைகளும் இராஜராஜன் காலத்தில் ஏற்பட்ட சோழரின் ஆதிக்கப் படர்ச்சிக்கு ஏதுவாயிருந்தன. மதுராந்தகன் கங்கபாடி, வேங்கி என்னும் மண்டலங்களுக்குப் பொறுப்பான தண்டநாயகனாக நியமனம் பெற்றிருந்தான். அவன் துளுவம், கொங்கணம் ஆகிய நாடுகளையும் கைப்பற்றியதோடு சேரனை அவனுடைய நாட்டிலிருந்தும் துரத்தினான்.[2]

மதுராந்தகனை கி.பி.1012 ஆம் ஆண்டிலே துணையரசனாக முடிசூட்டினார்கள். அதன் பின் அவனுக்கு இராஜேந்திரன் என்னும் பட்டப்பெயர் உரியதாகியது. இராஜராஜன் இறந்தபின் கி.பி.1016 ஆம் ஆண்டிலே இராஜேந்திரன், சோழச் சக்கரவர்த்தியாக முடி சூடிக் கொண்டான். அவனுடைய ஆட்சியிற் சோழராதிக்கம் உன்னத நிலையினை அடைந்தது. செல்வவளத்திலும், ஆட்சித் திறனிலும், கலாசார மேம்பாட்டிலுஞ் சோழப்பேரரசு பரத கண்டத்திலே முன்னணியில் இருந்தது. [3]

இராஜேந்திரனின் கங்கைப் படையெடுப்பு, கடாரப் படையெடுப்பு ஆகியன கவிவாணரினாலும் அரண்மனை அதிகாரிகளினாலுஞ் சிறப்புமிக்க சாதனைகளாக நெடுங்காலம் போற்றப்பட்டன. அவற்றின் காரணமாக முறையே கங்கை கொண்ட சோழன், கடாரங்கொண்ட சோழன் என்னுஞ் சிறப்புப் பெயர்கள் அவனுக்குரியனவாகின. கங்கைப் படையெடுப்பினைத் திக்குவிசயம் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் வருணிக்கின்றன. கங்கைப்

படையெடுப்பின் விளைவாக ஓங்கி உயர்ந்த தன் புகழைப் பரத கண்டத்தவர்க்கு உணர்த்தும் வண்ணமாகக் கங்கைகொண்ட சோழபுரம் என்னும் புதியதோர் இராசதானியை இராஜேந்திரன் அமைத்தான். அத்துடன் சோழகங்கம் என்னும் பெருந் தடாகத்தினையும் அவன் அமைத்தான். அதனை 'ஜலமயமான ஜயஸ்தம்பம்' என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் வர்ணிக்கின்றன.

சோழப்பேரரசு சோழமண்டலம், ஜயங்கொண்ட சோழ மண்டலம் (தொண்டை நாடு), இராஜராஜப் பாண்டி மண்டலம், மலைமண்டலம் (சேரநாடு), அதிராஜராஜ மண்டலம் (கொங்கு தேசம்), முடிகொண்ட சோழமண்டலம் (கங்கபாடி), நிகரிலிச் சோழ மண்டலம், (நுளம்பபாடி,) ஈழமான மும்முடிச் சோழ மண்டலம், வேங்கி மண்டலம் என்னும் 9 பிரிவுகளைக் கொண்டிருந்தது.[4] வேங்கியிற் சோழரின் ஆதரவுடன் கீழைச் சாளுக்கிய மரபினரான சக்திவர்மன், விமலாதித்தன் என்போரும் அவர்களின் வழியினரும் ஆட்சி புரிந்தனர். ஏனைய மண்டலங்கள் எட்டும் சோழரின் ஆட்சியின் கீழ் அமைந்திருந்தன.

அவற்றுள் ஒவ்வொன்றும் இராஜராஜனின் காலத்தில் அவனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்றினால் வழங்கியது. மண்டலங்கள் முன்பு தனித்தனி இராச்சியங்களாய் இருந்தமையும் குறிப்பிடத் தகுந்தது. இராஜேந்திர சோழன் மண்டலங்கள் சிலவற்றின் இராஜப்பிரதிநிதிகளாக இள்வரசரிற் சிலரை நியமித்தான். அத்தகைய இளவரசர் அரசர்க்குரிய பட்டாபிஷேகம் பெற்று முடி சூடிக் கொண்டனர். அவர்களுள் ஒவ்வொருவரும் தாம் அதிகாரஞ் செலுத்திய நாட்டு வழமைகளுக்கு ஏற்பப் பட்டங்களைச் சூடிக் கொண்டனர்.

இராஜேந்திரனின் மகனாகிய சுந்தரசோழன் மதுரைக்குச் சென்று, அங்கு தங்கியிருந்து பாண்டி நாட்டின் மீது அதிகாரஞ் செலுத்தினான். அவனுடைய காலத்தில் மதுரை, இராஜேந்திர சோழபுரம் என்னும் புனர்நாமத்தைப் பெற்றது. அங்கு புதிதாக அமைக்கப்பெற்ற அரண்மனையில் அவன் தங்கியிருந்தான். அவனைச் சோழபாண்டியன் என்று குறிப்பிட்டனர். பாண்டிய மன்னர்களின் மாறிவரும் பட்டப்பெயர்களில் ஒன்றான ஜடாவர்மன் என்பதை அவன் சூடிக்கொண்டான். சோழபாண்டியரின் ஆட்சி, பாண்டி நாட்டில் முதலாங் குலோத்துங்க சோழனின் காலம் வரை ( 1070–1122) நிலைபெற்றது.[5]

இராஜேந்திர சோழனின் மக்களுள் வேறொருவனாகிய மதுராந்தகன் கங்கபாடியான முடிகொண்ட சோழமண்டலத்திலே இராசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். அவன் அங்கு அதிகாரம் பெற்று முடிசூடிக்கொண்ட போது சோழகங்கன் என்னும் பட்டப்பெயரை அவனுக்கு வழங்கினார்கள்.

இராஜேந்திரனின் குமாரர்களுள் ஒருவன் இலங்கைக்குச் சென்றிருந்தான். அவன் அங்கு அரசனாக முடிசூடிய பொழுது சோழ- இலங்கேஸ்வரன், சங்கவர்மன் என்னும் பட்டங்களைப் பெற்றான். திருகோணமலை மாவட்டத்திலுள்ள மானாங்கேணி, கந்தளாய் என்னும் ஊர்களில் மட்டுமே அவனுடைய காலத்துச் சாசனங்கள் கிடைத்துள்ளன.

இராஜராஜ சோழனின் காலம் முதலாகச் சோழர், பாண்டி நாட்டு வழமையினைப் பின்பற்றிப் பெருநிலப் பிரிவுகளைத் தங்கள் ஆவணங்களிலே வளநாடு என்று குறிப்பிட்டார்கள். நாடு என்னும் பல பிரிவுகளை உள்ளடக்கியதே வளநாடு என்பதாகும். வளநாடுகளுக்குப் பெயரிடுமிடத்து அவற்றுக்கு அரசரின் பெயர்களையும் பட்டப் பெயர்களையும் வழங்கினார்கள். அத்தகைய வளநாடுகள் பல ஈழமான மும்முடிச் சோழமண்டலத்திலும் இருந்தன.[6]

தமிழகத்து நாடுகள் பெரும்பாலானவற்றில் ஊர், தனியூர், சதுர்வேதிமங்கலம், நகரம் என்ற பிரிவுகள் இருந்தன. அவற்றுள் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட எல்லைகளினுள் அமைந்த நிலப்பகுதியில் நிர்வாக அதிகாரங் கொண்டிருந்தது. நிலம், நீர்விநியோகம், கோயில், தேவதானம், அறநிலையம் முதலியன பற்றிய நடவடிக்கைகளை அவை கவனித்து வந்தன. புரவு, வரிப்பொத்தகம் என்ற வகைகளுக்குரிய ஆவணத் தொகுதிகள் அவற்றின் வசமிருந்தன. ஊரிலுள்ளவர்களைப் பற்றியும் நிலங்களைப் பற்றியுஞ் சில விபரங்கள் அவற்றில் எழுதப்பட்டிருக்கும்.

சோழப் பேரரசின் பல பாகங்களிலுஞ் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்களைப் பின்பற்றியவர்கள் வாழ்ந்தனர். தமிழகத்திற் சமணம், பௌத்தம் ஆகியவற்றின் செல்வாக்கு அருகி வந்தது. அவற்றைச் சேர்ந்த நிலையங்கள் அங்கும் இங்குமாகச் சில ஊர்களிலே காணப்பட்டன. சைவாபிமானிகளாய் விளங்கிய சோழர், சமணப் பள்ளிகளையும் பௌத்த விகாரங்களையுஞ் சில சமயங்களிலே கட்டியதோடு அவற்றுக்கு நிலங்களையும் வேறு பொருள்களையும் நன்கொடையாக வழங்கியுள்ளனர்.

சோழப் பேரரசர் காலத்துக்குரிய சிறந்த தமிழ் நூல்களிற் சில சமண, பௌத்த நூல்களாகும். சீவகசிந்தாமணி என்னும் பெருங் காப்பியமும், சூளாமணியும், நீலகேசியும், வளையாபதியும் இலக்கண நூல்களில் ஒன்றான நன்னூலுஞ் சமணரால் எழுதப்பெற்றவை. குண்டலகேசி என்னும் காவியமும் வீரசோழியம் என்னும் இலக்கணமும் பௌத்தரால் எழுதப்பெற்றவை. சோழ மன்னர் பலரைப் பற்றிய பாடல்கள் வீரசோழியத்தில் உள்ளன.

வைணவம் சோழராட்சியிலே தமிழகத்திற் சிறப்புற்று விளங்கியது. தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் வைணவத் தலங்களும், பிற வைணவ நிறுவனங்களுஞ் சீரான நிலையிற் காணப்பட்டன. ஆழ்வார்களின் பாடல்பெற்ற தலங்களிலும் பிறவிடங்களிலும் அமைந்திருந்த கோயில்கள், புனர்நிர்மாணமும் விரிவாக்கமும் பெற்றன. புதிய வைணவக் கோயில்களை அமைப்பதற்கும் பழைய கோயில்களிற் புதிய மண்டபங்களையும், கோபுரங்களையும், பிராகாரங்களையும் நிர்மாணிப்பதற்கும் சோழர் பல வழிகளிலும் ஆதரவு புரிந்தனர். [7]

நாத முனிகள் என்னும் ஆச்சாரியார் ஆழ்வார்களின் பாடல்களைத் தேடிப்பெற்று அவற்றை நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்னுந் திரட்டாகப் பத்தாம் நூற்றாண்டிலே தொகுத்தனர். ஆழ்வார்களின் பாசுரங்களையும் திருப்பாவையினையும் வைணவக் கோயில்களில் ஓதுவது வழமையாகியது. நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் முதலியோரின் படிமங்களைக் கல்லிலும் உலோகத்திலும் உருவாக்கி அவற்றை விண்ணகரங்களிலே தாபனஞ் செய்து, அவற்றுக்கு வழிபாடு நிகழ்த்தினார்கள். இராமாவதாரத்தின் மகிமையினையும், வைணவங் கண்ட வாழ்க்கை நெறியினையும், ஈடும் எடுப்புமற்ற வகையிற் செப்புவதான கம்பராமாயணம் பன்னிரண்டாம் நூற்றாண்டிலே தோன்றியது. இக்காலத்தவரான ஸ்ரீ இராமானுஜர் ஆழ்வார்களின் பக்திநெறியினை அடிப்படையாகக் கொண்டு வேதாந்தத்திற்குப் புதியதோர் வடிவஞ் செய்தனர். அவர் பரதகண்டத்தின் பல பாகங்களுக்குஞ் சென்று சமயவாதம் புரிந்து வைணவ சம்பிரதாயம் மேன்மைபெறச் செய்தார்.

சோழப் பெருமன்னர் காலத்திற் சைவமே தமிழகத்து மக்களிற் பெரும்பான்மையோரின் சமயமாக விளங்கியது. வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந்தவர்களையும், பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்த சமுதாயப் பிரிவுகளையும், இணைக்குஞ் சக்தியாகவும் அது தொழிற்பட்டது. அரசர்களும் அரச குடும்பத்தைச் சேர்ந்த பிறரும் ஆலயங்களைப் புனரமைத்தும், புதிதாக அவற்றை நிர்மாணித்தும், அவற்றிலே நாள்வழிபாடுகளும் விழாக்களும் நடைபெறுவதற்கென நிவந்தங்களைச் செய்தும் சைவசமயத்தை ஆதரித்தனர். அவர்களின் முன்மாதிரியைப் பின்பற்றி ஆட்சியதிகாரிகளும், குறுநில மன்னரும், வணிகரும் வேறு பலருந் திருப்பணிகள் பலவற்றை மேற்கொண்டனர்.

சோழ மன்னரின் முயற்சியால் அமைக்கப்பெற்ற ஈஸ்வரங்கள் நூற்றுக்கணக்கானவை. கோயில்களைக் கற்றளிகளாக அமைக்கும் முறையினைச் சோழர்களே தமிழகமெங்கும் வழமையாக்கினார்கள். அதற்கு முன்பு மாமல்லபுரம், காஞ்சிபுரம் போன்ற சில நகரங்களில் மட்டுமே கற்றளிகள்

அமைந்திருந்தன. சோழரின் ஆட்சியிற் கோயிலமைப்புப் பெரிதும் வளர்ச்சி பெற்றது. ஓங்கியுயர்ந்த விமானங்கள், சித்திர வேலைப்பாடுள்ள தூண்கள் பொருந்திய மண்டபங்கள், கோபுர வாயில்கள், திருநடமாளிகைகள் முதலியன பொருந்திய கலைவனப்பு மிக்க கோயில்கள் பலவற்றைச் சோழப்பெருமன்னர் அமைத்தனர். அத்தகைய கோயில்களில் முதலாம் இராஜராஜன் (985–1016), முதலாம் இராஜேந்திரன் (1012–1044), இரண்டாம் இராஜராஜன் (1146–1163), மூன்றாங் குலோத்துங்கன் (1178–1218). என்போரால் முறையே அமைக்கப் பெற்றவையான தஞ்சைப் பெருவுடையார் கோயில், கங்கை கொண்ட சோழேஸ்வரம், ஐராவதேஸ்வரம் என்னும் இராஜராஜேஸ்வரம், திரிபுவன வீரேஸ்வரம் என்னுங் கம்பஹாரேஸ்வரம் ஆகியவை மிகப் பிரதானமானவை. வனப்பில் இவற்றுக்கு நிகரான வேறு கோயில்கள் தென்னிந்தியாவில் அரிதாகவே உள்ளன.

சோழர் காலத்தில் நாயன்மார்களின் பாடல்பெற்ற தலங்களிற் கோயில்கள் புனரமைக்கப்பட்டன. சிதம்பரம், காஞ்சி, திருவாரூர், திருவிடைமருதூர், திருவையாறு முதலிய தலங்களில் விமானங்களும், பரிவாரதேவர் கோயில்களும், மண்டபங்களும் கற்றளிகளாக அமைக்கப்பட்டன. கோயில்கள் பலவற்றில் அமைக்கப்பட்ட மண்டபங்களும், மடங்களும், அறச்சாலைகளும் பெரும்பாலுஞ் சோழமன்னர்களின் பெயர்களால் வழங்கி வந்தன. தமிழகத்துக் கோயில்களிற் பெரும்பாலானவற்றுட் காணப்படும் சாசனங்கள் வழிபாடு, கோயில் நிர்வாகம், நிவந்தங்கள், தேவதானங்கள் என்பன பற்றிய விபரமான செய்திகளைக் கொண்டுள்ளன.

சோழர் காலத்திற் சைவசமயத்தில் ஏற்பட்ட பிரதான வளர்ச்சிகளுள் ஒன்று நாயன்மார் வழிபாடு ஏற்பட்டமையாகும். சமயகுரவரான நாயன்மார்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என்றும், வழிபாட்டுக்கு உரியவர்கள் என்றும், சைவர்கள் கருதினார்கள். நாயன்மார்களின் படிமங்களைக் கல்லிலும் உலோகத்திலும் உருவாக்கி அவற்றைக் கோயில்களிலே தாபனஞ் செய்து வழிபடும் வழக்கம் தோன்றியது. முதலாம் இராஜராஜன் தஞ்சையில் அமைத்த இராஜராஜேஸ்வரத்தில் நாயன்மார் பலரின் படிமங்கள், அரச குடும்பத்தவராலும் பிறர் பலராலுந் தாபனஞ் செய்யப்பட்டன. சண்டேஸ்வரரின் திருவுருவம் ஈஸ்வரங்களில் வழிபாடு செய்தற்பொருட்டுத் தாபனம் பண்ணப்பட்டது. சில தலங்களிற் சமய குரவருக்குத் தனிக்கோயில்கள் அமைக்கப்பெற்றன.

நாயன்மார் வழிபாடு வளர்ச்சி பெற்ற காலத்தில் அவர்களைப் பற்றிய தனியான இலக்கிய மரபொன்று உருவாகியது. சுந்தரமூர்த்தி நாயனாரின் திருத்தொண்டர்த் தொகையினை அடிப்படையாகக் கொண்டு நம்பியாண்டார் நம்பி

திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் பனுவலைப் பாடினார். அவரது காலத்தில் நாயன்மார்களைப் பற்றி உருவாகியிருந்த ஐதிகங்களும் மரபுகளும் நம்பியின் மூலமாக இலக்கிய வடிவம் பெற்றன. *திருச்சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை* முதலிய நூல்களிலே திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் சிறப்புகளை நயம் பொருந்திய வண்ணம் பாடியுள்ளார். *திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை* என்னும் பனுவலொன்றையும் அவர் இயற்றினார்.

பன்னிரண்டாம் நூற்றாண்டிலே சேக்கிழாரார் பாடப்பெற்றதான பெரியபுராணம், நாயன்மார் வழிபாடு விருத்தி பெற்றிருந்த காலத்துப் பேரிலக்கியமாகும். தமிழகத்துச் சைவசமய வளர்ச்சியிலே திருத்தலங்களும், திருத்தொண்டரும், அருள்நெறியான பக்திநெறியும் பெற்றிருந்த ஈடிலாச் சிறப்பினை உவமையிலாத வண்ணமாகச் செப்புகின்ற இலக்கியமாக அது விளங்குகின்றது.

சோழர் நிர்வாகத்தில் உயர்பதவியிலிருந்த *வரிப்பொத்தகம் சேக்கிழார்* மரபில் வந்தவரும் அரசசேவை புரிந்தவருமான சேக்கிழார், தமிழகத்து ஊர்கள், தலங்கள், சமூகப்பிரிவுகள், நாட்டு வளம், வழமைகள், காலபருவங்கள் என்பவற்றை நன்கறிந்தவராக விளங்கினார். இலக்கண இலக்கியங்களிலும் யாப்பு, அணி இலக்கணங்களிலும் புலமை மிக்கவரான அவர், சைவசமய தத்துவங்களைப் பற்றியும் ஆசாரங்களைப் பற்றியும் ஆழமான அறிவினைக் கொண்டிருந்தார். நாயன்மாரின் சிறப்புகளைச் சைவசமய மரபுகளோடும் சமுதாய நிலைகளோடும் இணைத்து, எளிமையுந் தெளிவும் இனிமையுங் கலந்த கவிநடையிற் கூறுந் தனிப்பெரும் காப்பியமாய் அமைந்தது பெரியபுராணம்.

சோழர் காலத்துச் சைவசமய இலக்கியங்களிலே பக்திப் பாடல்களுங் குறிப்பிடத்தக்கவை. சேந்தனார், திருமாளிகைத் தேவர், கருவூர்த்தேவர், திருத்தக்கதேவர், பட்டினத்துப் பிள்ளையார் முதலியோர் பாடிய இனிமையுங் கனிவுஞ்செறிந்த பாடல்கள் அக்காலத்துப் பக்திநெறி சார்ந்த இலக்கியப் பாங்கினைப் பிரதிபலிக்கும் கருவூலங்களாகும்.

ஒன்பதாம் நூற்றாண்டிலே தேவாரப் பாடல்களைக் கோயில்கள் சிலவற்றில் ஆராதனைக் காலங்களிற் படிப்பதற்கென அறக்கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. பத்தாம் நூற்றாண்டு முதலாகத் தேவாரங்களைக் கோயில்களிற் பாடுவது பொது வழக்காகியது. கோயில்களில் ஓதுவார் பணிகளைக் கவனிப்பதற்கெனத் *தேவாரநாயகம்* என்ற அதிகாரி ஒருவன் நியமிக்கப் பெற்றிருந்தான் என்பதை முதலாம் இஜேந்திர சோழன் காலத்துச் சாசனங்கள் மூலமாக அறிய முடிகின்றது.[8] கோயில்களிற் படிப்பதற்கும், ஓதுவார்க்குப் பயிற்சி

அளிப்பதற்கும், தேவாரங்களைக் காலாகாலம் புதிய ஏடுகளில் எழுதி வைக்க வேண்டியிருந்தது. இப்பணியை மேற்கொண்ட போது பழைய ஏடுகளைப் பெற்றுக் கொள்வது சிரமமாயிருந்தது. கிடைக்கக் கூடிய ஏடுகளும் செல்லரித்துஞ் சிதைந்துங் காணப்பட்டமையாலே தேவாரப்பதிகங்கள் நாளடைவிற் கிடைக்கப் பெறாது ஒழிந்துவிடும் என்ற அச்சம் ஏற்பட்டிருத்தல் கூடும். அதன் விளைவாகவே தேவாரப் பதிகங்களை எழுதி வைத்துள்ள ஏடுகளைப் பரிசோதிக்கலாயினர். திருமுறைத் தொகுப்புக்குத் தேவையான அடிப்படை வேலைகள் பலரின் நீண்டகால முயற்சியாக அமைந்திருத்தல் வேண்டும். ஆயினும் திருமுறைகண்ட புராணம், இராசராசன் என்னும் அரசனும், திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் கோயில் அர்ச்சகரான நம்பியாண்டார் நம்பியும் இதற்குப் பொறுப்பாகவிருந்தனர் எனக் குறிப்பிடுகின்றது. முதலாம் இராஜராஜனின் காலத்தில், அவனுடைய ஆதரவுடன், நம்பியின் தலைமையிலான குழுவொன்று திருமுறைகளைத் தொகுக்கும் பணியினை நிறைவேற்றியது என்று கொள்வது ஒரு பொருத்தமான முடிபாதல் கூடும். முதலேழு திருமுறைகளே இவர்களாலே தொகுக்கப்பட்டன என்ற கருத்து அறிஞர் பலராலும் இந்நாட்களிலே வற்புறுத்தப்படுகின்றது. காலப்போக்கில் திருமுறைகள் பன்னிரண்டு ஆகின.

## 2. இலங்கையிற் சோழர்

முதலாம் இராஜராஜனது 8ஆம் ஆண்டளவில் இலங்கையின் வட பகுதியைச் சோழர் கைப்பற்றிக் கொண்டனர். மாதோட்டம், பதவியா, திருகோணமலை ஆகிய இடங்களிலுந் தஞ்சைப் பெருவுடையார் கோயிலிலுமுள்ள அவனுடைய காலத்துச் சாசனங்கள் இலங்கையின் வடபகுதியில் இராஜராஜனின் ஆட்சி நிலவியதற்குச் சான்றாயுள்ளன[9] சோழராலே கைப்பற்றப்பட்டிருந்த இலங்கையின் பகுதியினை ஈழமான மும்முடிச் சோழமண்டலம் என்று சோழர் குறிப்பிட்டனர். இராஜராஜனின் ஆட்சியில் ஈழமான மும்முடிச்சோழ மண்டலம் வளநாடு என்ற பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்தது. அவற்றிலே நிர்வாகப் பொறுப்புக்களை மேற்கொண்டிருந்த சோழப் பிரதானிகளும், வணிகரும், படையாரும் கோயில்களை அமைத்து அவற்றுக்கு நிவந்தங்களை வழங்கியிருந்தனர்.

முதலாம் இராஜேந்திர சோழனின் 5 ஆம் ஆண்டிலே (1017) ஐயங்கொண்ட சோழ மூவேந்தவேளான் என்னுஞ் சேனாதிபதி தென்னிலங்கையிலே தங்கியிருந்த மகிந்த மன்னனையும் அவனது தேவியையும், அவர்களின் முடி முதலான அணிகலன்களையும், முன்பு ஒரு நூற்றாண்டுக்கு முன்பாகத் தென்னவனான இராஜசிம்மன் சிங்கள மன்னரிடம் அடைக்கலமாக வைத்திருந்த பாண்டியரின் முடி

முதலான அணிகலன்களையுங் கைப்பற்றிக் கொண்டு போய்ச் சோழ மன்னனிடம் ஒப்படைத்தான்.[10] அப்படையெடுப்பின் விளைவாக இலங்கையிற் சோழராதிக்கம் விரிவு பெற்றது. தக்கிண தேசத்தின் வடபகுதியிலும் உறுகுணையின் கிழக்குக் கரையோரப் பகுதியிலுஞ் சோழரின் ஆதிக்கம் ஏற்படலாயிற்று. இவ்விதமாக வளர்ந்த சோழரின் ஆதிக்கம் கி.பி.1070 ஆம் ஆண்டளவில் முதலாங் குலோத்துங்க சோழன் அரசனாகும் வரை இலங்கையில் நிலைபெற்றது.

தென்னிந்தியச் செல்வாக்கு முன்னொரு காலத்திலும் காணப்படாத அளவில் இலங்கையில் ஏற்பட்டது. சோழர் அமைத்த நிர்வாக நிலையங்களிலும் படைத்தளங்களிலும் பெருமளவிலே நிர்வாக சேவையாளரும் படையினரும் சென்று தங்கியிருந்தனர். நானாதேசி வணிகர் அக்காலத்தில் இலங்கையின் உள்நாட்டு வாணிபத்திலும், அயல்நாட்டு வாணிபத்திலும் பெரும்பங்கு கொண்டிருந்தனர். அவர்களால் அமைக்கபெற்றப் வணிக நிலையங்களும் அவற்றைச் சூழ்ந்த குடியிருப்புக்களுங் காலப்போக்கில் நகரங்களாக வளர்ச்சி பெற்றன. அவற்றிலே தென்னிந்தியாவிலிருந்துஞ் சென்ற பல்வேறு வணிகர் குழாங்களும் போர்வீரர்களும் உற்பத்தியாளரும் கூடி வாழ்ந்தனர். இத்தகைய வளர்ச்சிகளினால் இலங்கைச் சமுதாயத்திற் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டன. சோழராட்சியில் இவ்விதமாக இலங்கையில் ஏற்பட்ட குடியேற்றங்கள் அங்குள்ள பூர்வீகத் தமிழ்க் குடிகளோடு சங்கமமாகின. சோழப்பெருமன்னர் காலத்திலே தென்னிந்தியாவில் வளர்ச்சிபெற்ற சமய, கலாசார மரபுகள் இலங்கையிற் பரவலாயின. பத்தாம் நூற்றாண்டு முதலாகத் தமிழகத்தில் வழக்கிலிருந்த ஆலய வழிபாட்டு நெறிகளையும் கட்டிட- சிற்ப முறைகளையும், இலக்கிய மரபுகளையும் சோழர் காலத்திற் சென்று இலங்கையிற் குடிபுகுந்தவர்கள் அங்கு அறிமுகஞ் செய்தனர். அதன் பயனாக இலங்கையில் வளர்ச்சி பெற்ற இந்து கலாசாரத்தை அக்காலத்துக் கோயில்கள் பிரதிபலிக்கின்றன.

## 2.1 மாதோட்டமான இராஜராஜபுரத்துக் கோயில்கள்

அருண்மொழித்தேவ வளநாட்டு மாதோட்டமான இராஜராஜபுரத்தில் இராஜராஜ- ஈஸ்வரம், திருவிராமீஸ்வரம் என்னுமிரு கோயில்கள் அக்காலத்தில் அமைக்கப்பட்டிருந்தன. இலங்கையிலிருந்த சோழப் பிரதானிகளில் ஒருவனான சோழமண்டலத்துச் ஷத்திரிய சிகாமணி வளநாட்டு வேளார்நாட்டுச் சிறுகூற்றநல்லூர் கிழவன் தாழிகுமரன் என்பவனால் இவற்றுள் முதலாவது கோயில் அமைக்கப்பட்டது. அதற்கு இறையிலித் தேவதானமாக மாதோட்டத்தில் நிலம் வழங்கப்பட்டது. அந்நிலம் இராஜராஜப் பெருந்தெருவுக்குக் கிழக்கிலும் கம்மாணச்சேரிக்குத் தெற்கிலும் அமைந்திருந்தது. ' இவ்வூர்க்குடி குன்றன் தாமன்

இருந்த மாளிகையும் வீடும் தோட்டமும் நீங்கலாக' வே நிலம் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டது. அத்துடன் அரசாங்கத்துக்குரிய வருமானங்களும் நிவந்தமாகத் தாழிகுமரனாற் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டன. மாதோட்டத்தில் நெசவாளரிடமிருந்து மாதந்தோறுந் தறியொன்றினுக்கு அரைக்கால் அக்கம் வரியாகக் கொள்ளப்பட்டது. வாணிபத்தில் விற்பானிடத்துங் கொள்வானிடத்தும் ஒவ்வொரு காசு பெறுமதியான பொருளுக்கும் ஒவ்வொரு வட்டமாக வரியிறுக்கப் பெற்றது. அரசாங்கத்துக்குரிய இவ்வரிகளைக் கோயிலுக்குக் கொடுக்க வேண்டுமென்று தாழிகுமரன் பிரகடனஞ் செய்தான் [11].

கோயிலுக்கு வழங்கப்பெற்ற நன்கொடைகளினின்றும் வரும் வருமானத்தைக் கொண்டு ஒவ்வொரு காலத்துக்கும், மூன்று நாழியரிசியாக நாள்தோறும் ஆறுநாழி அரிசியும் திருவமிர்து அடுவிக்கும் பிராமணர் இருவருக்கு நாள்தோறும் எட்டுநாழி நெல்லும் கொடுக்க வேண்டுமென்றும், "வைகாசி விசாகம் ஏழு நாளும்" விழா எடுத்துத் தீர்த்தம் ஆட்டுவிக்க வேண்டுமென்றும் தாழிகுமரன் அறக்கட்டளை ஏற்படுத்தியிருந்தான். இவற்றைக் குறிப்பிடும் சாசனம் திருக்கேதீஸ்வரத்திற் காணப்பெற்றதாலும் இராஜராஜ –ஈஸ்வரம் மாதோட்டத்தில் இருந்ததென்று சாசனங் கூறுவதாலும் பாடல்பெற்ற தலமான திருக்கேதீஸ்வரத்திற் புதிய கோயிலொன்றைத் தாழிகுமரன் அமைத்தானென்று சிந்திக்கலாம்.

திருவிராமீஸ்வரம் என்னும் சிவாலயமொன்றும் மாதோட்டத்தில் அமைந்திருந்தது. இராஜேந்திர சோழனின் 'பெருந்தனத்துப் பணி மகன்' சிறுகுளத்தூருடையான் தேவன் அக்கோயிலிற் சந்தி விளக்கு எரிப்பதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தான். அத்தர்மத்தின் பொருட்டு மூன்று வணிக கணங்களிடம் அவன் காசினை ஒப்படைத்திருந்தான். [12] நகரத்தார் என்போரின் ஒரு பிரிவினரான சங்கரபாடியரிடம் இரண்டு காசும், வெற்றிலை வாணியரிடம் ஒரு காசும், வாழைக்காய் வாணியர் வசம் ஒரு காசும், முதலிருப்பாக அவனாற் கொடுக்கப்பட்டன. தாம் பெற்றுக்கொண்ட காசின் வட்டியினைக் கொண்டு கோயிலிற் சந்திவிளக்கு எரிப்பதற்கு வணிக கணங்கள் மூன்றும் பொறுப்பேற்றன. மாதோட்டத்திலிருந்த வணிகர் கோயில் விவகாரங்களோடு நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருந்தமை கவனித்தற்குரியது.

## 2.2 உத்தமசோழ ஈஸ்வரம், பண்டிதசோழ ஈஸ்வரம்

உத்தமசோழ – ஈஸ்வரம் என்னுஞ் சிவாலயத்தைப் பற்றி வடமத்திய மாகாணத்துக் கடவத்கோறளையிலுள்ள ஆதகட என்னும் ஊரிற்

கண்டெடுக்கப்பெற்ற கல்வெட்டினால் அறியமுடிகின்றது. அது இராஜராஜனுக்கு முன்பு அரசனாயிருந்த உத்தமசோழனின் பெயரால் வழங்கியது. அக்கோயிலைப் 11 ஆம் நூற்றாண்டில் இலங்கையிலிருந்த தமிழ்ப்பிரதானிகள் அமைத்தனர். அரங்கன் இராமேசன் என்பான் கோயிலுக்கு ஒரு வேலி நிலமும் நந்தா விளக்கொன்றினை எரிப்பதற்கு 20 பசுக்களையும் 5 சந்தி விளக்கெரிப்பதற்கு 50 தென்னைகளையும் தானமாகக் கொடுத்தான்.[13] உத்தமசோழன் மண்டபம் என்ற பெயருடைய கட்டிடமொன்று பொலநறுவையிலுள்ள கோயிலொன்றில் இருந்தது. நந்தி கிரிஞ்சதன் என்பவனுடைய கட்டளைப்படி மாதேவன் என்ற வேளைக்காறன் அதனைக் கட்டுவித்தான். [14]

மண்டலகிரி (மதிரிகிரி) யான நித்தவிநோத புரத்திற் பண்டிதசோழ – ஈஸ்வரம் என்னும் சிவாலயமொன்று அமைந்திருந்தது. இளைய மும்முடிச்சோழ அணுக்கர் என்ற படைப்பிரிவைச் சேர்ந்த ஒருவன் தன்மகன் நாராயணன் பேரிலான தர்மமாக எரிப்பதற்கு நந்தா விளக்கொன்றினையும் 26 பசுக்களையுந் தானம் பண்ணியமை பற்றி இராஜேந்திர சோழனின் காலத்துக் கல்வெட்டொன்றினால் அறியமுடிகின்றது. [15]

## 2.3 வானவன் மாதேவீஸ்வரம்

புலத்திநகரமான பொலநறுவை, ஜனநாத மங்கலம் என்னும் புனர்நாமம் பெற்றுத் தலைமை நிர்வாக நிலையமாக விளங்கியது. அங்கு இந்து கலாசாரத்தின் செல்வாக்கு குறிப்பிடத் தக்க அளவில் ஏற்பட்டது. தென்னிந்தியாவிலிருந்து சென்ற நிர்வாக அதிகாரிகளும், படையினரும், நானாதேசி வணிகரும், தொழில் வினைஞரும், அந்தணரும் வேறு பல சமூகப்பிரிவினரும் அங்கு வாழ்ந்தனர். அத்தகையோரின் வழிபாட்டுத் தேவைக்கெனப் பல கோயில்கள் அமைக்கப்பட்டன. இருபதுக்கும் மேலான சைவ, வைணவக் கோயில்கள் பொலநறுவையில் இருந்தமைக்கான சான்றுகள் கிடைத்துள்ளன. அவற்றுட் சில சோழராட்சிக் காலத்தில் அமைக்கப்பட்டவை; ஏனையவை பிற்காலத்தவை.

தொல்லியலாளர் இரண்டாம் சிவாலயம், ஐந்தாம் சிவாலயம், ஆறாம் சிவாலயம் என்று வர்ணித்த கட்டிடங்களிற் சோழர் காலத்துத் தொல்பொருட் சின்னங்கள் கிடைத்துள்ளன. இரண்டாம் சிவாலயமான வானவன் மாதேவீஸ்வரம் அழிவுறாது இன்றும் சீரான நிலையிலுள்ளது. இலங்கையிலுள்ள, இன்றுவரை நிலைபெறும் இந்துக் கோயில்களின் கட்டிடங்களிலே இதுவே மிகப் பழைமையானதாகும். அழகும் உறுதியுங் கொண்ட கற்றளியாக அமைக்கப்பெற்றதான இக்கோயில் சோழர் கலைப்பாணியின் சீரிய பண்புகளுக்குச்

சிறந்தவோர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. அதில் முதலாம் இராஜேந்திர சோழனின் சாசனங்கள் இரண்டும் அதிராஜேந்திரன் காலத்துச் சாசனங்கள் இரண்டுங் காணப்படுகின்றன. [16] அவற்றுள் இராஜேந்திரன் காலத்தவை மிகவுஞ் சிதைவடைந்துள்ளன. அதிராஜேந்திரனின் சாசனங்களுள் ஒன்று மெய்கீர்த்திப் பகுதியினை மட்டுமே கொண்டுள்ளது. மற்றையது, குறிப்பிடத்தக்களவு நீளமானது. அதிலே 23 வரிகள் உள்ளன. எழுத்துக்களுஞ் சொற்றொடர்களும் இடையிடையே சிதைந்துள்ள போதும் சாசனத்தின் பெரும்பகுதி வாசித்தறிந்து கொள்ளக்கூடிய நிலையிலுள்ளது. சோழராட்சிக் காலத்துக் கோயிலொன்றின் நிறுவன அமைப்பினைப் பற்றிய விபரங்கள் சிலவற்றைப் பதிவு செய்துள்ள ஆவணம் என்ற வகையில் அது மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது.

அதிலே குறிப்பிடப்படுங் கோயில் வானவன்மாதேவி என்னும் அரசியின் பெயரினைக் கொண்டு வானவன்மாதேவீஸ்வரம் என வழங்கியது. இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரசோழன் (957–970), முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன் ஆகியோரின் பட்டத்தரசிகள் வானவன் மாதேவி என்னும் பெயரைக் கொண்டிருந்தனர். இம்மூவருள்ளும் சுந்தரசோழனின் தேவியும் இராஜராஜனின் தாயாருமாகிய வானவன் மாதேவி அதிக பாராட்டினைப் பெற்றிருந்தாள். அவளுடைய படிமமொன்று மகளாகிய குந்தவைப் பிராட்டியினாலே தஞ்சைப் பெருங்கோயிலிற் பிரதிட்டை செய்யப் பெற்றிருந்தது. [17] சுந்தர சோழனுடைய பட்டத்தரசியின் பெயராற் பொலநறுவையிலுள்ள வானவன் மாதேவீஸ்வரம் அமைக்கப்பெற்றிருத்தல் கூடும்.

அங்குள்ள அதிராஜேந்திர சோழனுடைய கல்வெட்டின் மூலம் தென்னிந்தியக் கோயில்களிற் போல இலங்கையிலுள்ள சில சைவக் கோயில்களிலும் கோயில் நிர்வாக முறை சோழரால் ஏற்படுத்தப்பட்டிருந்தது என்பது தெளிவாகின்றது. பன்மாகேஸ்வரர் என்ற சிவனடியார் கூட்டம் பற்றி அதிலே கூறப்படுகின்றது. தானதருமங்களையும் கோயில் விவகாரங்களையும் மேற்பார்வை செய்தல் பன்மாகேஸ்வரரின் மரபுவழியான உரிமையாகும். *பன்மாகேஸ்வரர் ரக்ஷை* என்ற தொடர் கோயிற் சாசனங்களின் இறுதியிற் காணப்படுகின்றமையுங் குறிப்பிடற்குரியது.

பதிபாதமூலப் பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகன்மிகள் என்ற குழுவினர் வானவன் மாதேவீஸ்வரத்தில் இருந்தனர். மூலஸ்தானத்தில் ஆராதனை முதலான கருமங்களைப் புரிகின்ற அந்தணரை அவ்வாறு அழைத்தனர். கோயிற் பணிகளைச் செய்கின்ற *பரிசாரகர்* என்னும் பணிமக்களும் அக்கோயிலிற் கடமை புரிந்தனர். *மாணிக்கம்* என்னும் பட்டம் பெற்ற தேவரடியார் பலர் வானவன்மாதேவீஸ்வரத்தில் இருந்தனர். கங்கை கொண்ட சோழ மாணிக்கம்,

காமந்திருவியான கோதுகுல மாணிக்கம், கோவிந்தன் ஆடவல்லானான நாற்பத்தெண்ணாயிர மாணிக்கம், தேவன் காமியான இராஜேந்திர சோழ மாணிக்கம், தேவன் உய்யவந்தானான முடிகொண்ட சோழ மாணிக்கம் என்னும் தேவரடியாரை அங்குள்ள சாசனங் குறிப்பிடுகின்றது.

அக்கோயிலில் விளக்கெரிப்பதற்குச் சோழமண்டலத்து விற்பேட்டுநாட்டு மங்கலப்பாடி வேளான் சோழ பல்லவரையன் என்னும் பிரதானி ஏற்பாடு செய்திருந்தான். அதற்கென 5 காசும் 'இரு சாணே நால்விரல் நீழத்துத் தாராநிலை விளக்கு' ஒன்றும் அவனால் வழங்கப்பட்டன. திருவாராதனை செய்வாரும் பரிசாரகரும் பன்மாகேஸ்வரக் கண்காணி செய்வாரும் நாட்டவரும் தேவரடியாரும் என்றென்றும் இடையறாது விளக்கெரிப்பதாகச் சம்மதித்துக் காசினைப் பொறுப்பேற்றனர். [18]

பொலநறுவையிற் சோழரமைத்த பிற கோயில்களின் பெயர்கள் தெரியவில்லை. அங்குள்ள 5ஆம் சிவாலயத்தின் அழிபாடுகளிடையே சோழப்பிரதானிகள் சிலரின் பெயர்களைக் குறிப்பிடும் கல்வெட்டுகள் காணப்பெற்றன. அவற்றின் மூலமாக அக்கோயிலும் சோழராட்சிக் காலத்திற்குரியது என்பது தெளிவாகின்றது. பொலநறுவையிலிருந்த இந்துக் கோயில்களுள் அதுவே மிகப் பெரியதாக விளங்கியது. அதன் அழிபாடுகளுஞ் சுற்றுப்புறங்களும் அகழ்ந்தாராயப்பட்ட போது கல்லிற் செதுக்கப்பட்ட 8 படிமங்களும் 19 வெண்கலப் படிமங்களும் கண்டெடுக்கப் பெற்றன. நடராஜர், தஷிணாமூர்த்தி, கணேசர், விஷ்ணு, காளி, சப்தமாதர் ஆகியோரின் படிமங்களும் நாயன்மார் சிலரின் படிமங்களும் அவற்றிடையே காணப்பட்டன.[9] 6 ஆம் சிவாலயத்தின் அழிபாடுகளுக்கிடையிலும் சோழர் கலைப்பாணியிலமைந்த நடராஜரின் வெண்கலப் படிமமொன்றும் அக்காலத்துக்குரிய வரிவடிவங்களிலான ' ஸ்ரீ ஆண்பிள்ளை பெருமாள், என்ற பெயர் பொறிக்கப்பட்ட மணியொன்றுங் கிடைத்தன.[20]

வடகிழக்கிலங்கையிலுங் குறிப்பாகக் கோணேஸ்வரத்திலுஞ் சோழர் மேற்கொண்டிருந்த சைவசமயந் தொடர்பான நடவடிக்கைகளைப் புரிந்து கொள்வதற்கு இதுவரை கவனித்த விபரங்கள் அடிப்படையானவை.

## 3. சோழ இலங்கேஸ்வரனும் கோணேஸ்வரமும்

இலங்கையின் வடகிழக்குப் பகுதியிலே, திருகோணமலை, கந்தளாய், பதவியா என்பவற்றை உள்ளடக்கிய முக்கோணத்திலே, சோழராட்சிக் காலத்திற்குரிய தொல்பொருட் சின்னங்கள் பல கண்டெடுக்கப் பெற்றுள்ளன. இலங்கையில்

இதுவரை கிடைத்துள்ள சோழர் காலத்துச் சாசனங்களிற் பெரும்பாலானவை இப்பகுதியிற் கிடைத்துள்ளன. ஈழமான மும்முடிச்சோழ மண்டலத்திலுள்ள ஆறு வளநாடுகளைப் பற்றி மட்டுமே சாசனங்கள் மூலம் அறியமுடிகின்றது. அவற்றுள் நான்கு பிரிவுகள் இப்பிராந்தியத்தைச் சேர்ந்தனவாகும். கணக்கன் கோட்டியாரமான விக்கிரம சோழ வளநாடு, மாப்பிசும்பு கோட்டியாரமான இராஜராஜ வளநாடு என்னும் பிரிவுகள் கோட்டியாரம் பற்றில் இருந்தன. [21] கந்தளாய்ப் பிரமதேயமான இராஜராஜ சதுர்வேதிமங்கலமும் திருகோணமலை நகரமும் இராஜேந்திர சோழ வளநாட்டில் அடங்கியிருந்தன. இராஜவிச்சாதிர வளநாடு, மும்முடிச்சோழ வளநாடு என்பன அதன் மறுபெயர்களாகும். இராஜராஜப் பெரும்பள்ளியான வெல்காமத்து விகாரம் அமைந்திருந்த மானாவத்துளா நாடு, அபயாஸ்ரய வளநாடு என்பதன் பிரிவாயிருந்தது. அதனை இராஜேந்திரசிங்க வளநாடு, வீரபரகேசரி வளநாடு என்னும் பெயர்களாலுங் குறிப்பிட்டனர்.[22] அது பிற்காலத்திற் கட்டுக்குளம்பற்று என வழங்கிய பிரிவின் பகுதிகளை உள்ளடக்கியிருந்தது.

பதவியா, திருகோணமலை, கந்தளாய் ஆகிய மூன்றும் நகரங்களாய் விளங்கின. இந்து கலாசார நிலையங்கள் அவற்றிலே குறிப்பிடத்தக்க அளவில் வளர்ச்சி பெற்றிருந்தன. அங்கு சோழர் அமைத்த படைநிலைகளும், நானாதேசி வணிகர் உருவாக்கிய வணிக நிலையங்களும் பதவியா பதினோராம் நூற்றாண்டிலே நகரமாக வளர்ச்சி பெறுவதற்கு வழிவகுத்தன. அது மத்திய காலத்தில் அரண்கள் பொருந்திய நகரமாய் விளங்கியதென்பதைத் தொல்பொருட் சின்னங்கள் மூலம் அறிய முடிகின்றது. இலங்கைத் தொல்பொருட்டிணைக்களத்தினர் பதவியாவில் ஐந்து சிவாலயங்களின் அழிபாடுகளை அடையாளங் கண்டுள்ளனர். அவற்றுள் முதலாஞ் சிவாலயத்தின் அழிபாடுகளிடையே சோழராட்சிக் காலத்திற்குரிய 5 கல்வெட்டுகள் காணப்பெற்றன. அக்கோயிலின் பெயர் இரவிகுலமாணிக்க-ஈஸ்வரம் என்று அவற்றுளொன்றிற் கூறப்பட்டுள்ளது. அதன் அத்திவாரக் கற்களில் மேல்வருஞ் சாசனங்கள் உள்ளன. [23]

1. நாராயணன் திருச்சிற்றம்பலமுடையான் இட்ட கல்லு.

2. ஸ்வஸ்தி ஸ்ரீ இக்கல்லு வருதன் திருமால் இட்டது.
   இக்கல்லு அழகன் வத்தரமாராஸ்வயன் இட்டது.

3. ஸ்வஸ்தி ஸ்ரீ இக்கல்லு அழகன் வத்தமானான தேசியாயத் துணைச் செட்டி இட்டது.

4. ஸ்வஸ்தி ஸ்ரீ இக்கல்லு (பதியில்) வணிகன் தனி அப்பன் இட்டது.

கோயிலுக்கு அத்திவாரக் கற்களை இட்டவர்களின் பெயர்களை இச்சாசனங்கள் குறிப்பிடுகின்றன என்பது அவற்றின் வாசகங்களினாலே தெளிவாகின்றது. இரவிகுலமாணிக்க ஈஸ்வரத்தை அமைத்தவர்களில் நாராயணன் வருதன் திருமால், அழகன் வத்தரமாராஸ்வயன், அழகன் வத்தமான், தனி அப்பன் ஆகிய ஐவரும் பிரதானமானவர்களாவர். அவர்களில் இருவர் வணிகர். அவ்விருவருள்ளும் அழகன் வத்தமான் என்பான் நானாதேசி வணிகன். நாராயணன் சிற்றம்பலமுடையான் நிர்வாக அதிகாரிகளில் ஒருவனாதல் கூடும். இரவிகுலமாணிக்க ஈஸ்வரமானது இராஜராஜனது காலத்திலே பதவியாவிலிருந்த நானாதேசி வணிகராலும் நிர்வாக அதிகாரிகளினாலும் அமைக்கப்பெற்றது என்பது அதன் அழிபாடுகளிற் காணப்படும் சாசனங்களினால் உணரப்படுகின்றது.

அவனுடைய காலத்தில் நிர்வாக அதிகாரிகளும், படையினரும், நானாதேசி வணிகரும் கோயிலுக்குப் பல நன்கொடைகளை வழங்கியிருந்தனர். தானங் கொடுத்தோருள் உடையான் என்னும் பதவிப் பெயரைக் கொண்ட பலரிருந்தனர். பாலைப்பாக்கமுடையான் பட்டமொன்றும் பொற்காசுங் கொடுத்தான். மருங்கூருடையான் கோயிலுக்குத் தானமாகப் பொன் கொடுத்தான். நானாதேசியான கொண்ணாவில் வெண்காடன் வெண்கல எறிமணி ஒன்றினையும் வெண்கல மணியொன்றினையுந் தானம் பண்ணினான். சமகாலத் தென்னிந்தியச் சாசனங்களில் வழமையாக வரும் நக்கன், தேவன், சாத்தன் என்னும் பெயர்கள் பதவியாவிலுள்ள இராஜராஜனின் 26 ஆம் ஆண்டுச் சாசனத்தில் உள்ளமை குறிப்பிடத் தகுந்தது.

கந்தளாயிலுந் திருகோணமலையிலும், சமய நிறுவனங்களையும் கோயில்களையும் அமைப்பதிலும் பராமரிப்பதிலுஞ் சோழர் ஈடுபட்டிருந்தனர். இற்றைக்கு 20 வருடங்களுக்கு முன் திருகோணமலை மாவட்டத்தில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சாசனங்கள் சில ந.தம்பிராசா, செ.குணசிங்கம் என்போராற் கண்டுபிடிக்கப் பெற்றன. அவற்றுள் இரண்டு சாசனங்கள் சோழ இலங்கேஸ்வரன் என்னும் அரசனின் காலத்தவை. பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியிலே சோழவம்சத்து இளவரசனொருவன் இலங்கையிலே அரசனாக முடிசூடியிருந்தான் என்பது அவற்றினால் அறியப்படுகின்றது. மானாங்கேணி, கந்தளாய் என்னுமூர்களிலுள்ள சாசனங்கள் சோழ இலங்கேஸ்வரனைக் கோ என்றும், உடையார் என்றும், சங்கவர்மன் என்றும் வர்ணிக்கின்றன. அத்துடன், அவனுடைய ஆட்சியாண்டுகளையும் அவை குறிப்பிடுகின்றன. எனவே அரசருக்குரிய விருதுகளையும் பட்டப்பெயர்களையும் கொண்டிருந்த சோழ இலங்கேஸ்வரன், பாண்டி நாட்டிலிருந்த சோழ பாண்டியர்களைப் போல, ஈழநாட்டில் முதலாம் இராஜேந்திர சோழனின் காலத்திற் சோழச்சக்கரவர்த்தியின் பிரதிநிதியாகவிருந்து அதிகாரஞ் செலுத்தினான் என்பது தெளிவாகின்றது.

சோழ இலங்கேஸ்வரனின் ஆட்சியாண்டுகளில் எழுதப்பெற்ற சாசனங்கள் இரண்டும் சிதைவுற்ற நிலையிலுள்ளன. மானாங்கேணிக் கல்வெட்டின் ஒரு சிறிய பகுதி மட்டுமே கிடைத்துள்ளது. அத்துடன் சாசனம் பொறிக்கப்பட்ட தூணின் இரு ஓரங்களும் வெட்டப்பட்டுள்ளன. அதனால் ஒவ்வொரு வரியிலுஞ் சராசரியாக 6 எழுத்துகள் மறைந்து விட்டன. இச்சாசனத்தை வாசித்து வெளியிட்டவரான செ. குணசிங்கம் அதன் வாசகத்தை மேல்வருமாறு எழுதியுள்ளார்.[24]

1.... ஸ்ரீ சோழ இல......
2.....தேவற்கு யாண்டெ......
3..... டி சோழ மண்ட.....
4...... *ஐந்த்ர சோழ வள......*
5..... சோழ வளநா.....
6..... மலை ஸ்ரீ மச்சு....
7.... முலஸ்தானமு....
8..... வர முடையார்....
9..... ள மண்டலத்தி.....

இச்சாசனம் தமிழும் கிரந்தமுங் கலந்த எழுத்துக்களில் அமைந்துள்ளது. ஆறாவது வரியிலுள்ள கிரந்த எழுத்துக்களை மச்சு எனக் குணசிங்கம் கொண்டமை பொருத்தமானதாகத் தோன்றவில்லை. சமஸ்கிருத மொழியில் மச்சு என்ற சொல் பொருள் குறிப்பதாக அமையாது, கிரந்த எழுத்துக்களிலுள்ள அச்சொல்லினை *மத்ஸ்ய* என்ற சமஸ்கிருதச் சொல்லாகக் கொள்வதே பொருத்தமானது. அச்சொல்லினைத் தொடர்ந்து ஏகாரத்தைக் குறிக்கின்றதான குறி காணப்படுவதால் மத்ஸ்யகேஸ்வரம் என்ற கோயிலின் பெயரையே சாசனங் குறிப்பிடுகின்றது என்று கொள்ளவேண்டும். மத்ஸ்ய என்ற சொல்லுக்கு முன்பாக *மலை* என்னுஞ் சொல் காணப்படுகின்றமை இதனை உறுதி செய்கின்றது. மலை என்பதற்கு முன்பாக அமைந்திருந்து அழிந்து போன எழுத்துக்கள் *திருகோண* என்றிருத்தல் வேண்டும். ஆகவே மானாங்கேணிக் கல்வெட்டுத் திருகோணமலை மத்ஸ்யகேஸ்வரம் பற்றிக் குறிப்பிடுவதாய் அமைந்ததென்று கொள்வது சாலப் பொருந்தும். இத்தகைய விளக்கமானது நிலாவெளிக் கல்வெட்டில் வரும் ' ஸ்ரீ கோணபர்வதம் திருக்கோணமலை மத்ஸ்யகேஸ்வரமுடைய மஹாதேவர்' என்னுந் தொடரினால் ஆதாரம் பெறுகின்றது. [25]

இச்சாசனத்தின் 5 ஆவது வரியில் வளநாடு ஒன்றின் பெயர் குறிக்கப் பெற்றுள்ளது. அதன் பெயரின் முதலாவது பகுதியில் இறுதியிலுள்ள *டி* என்பதைத் தவிர்ந்த எழுத்துக்கள் எல்லாம் அழிந்துவிட்டன. இங்கு நாம் கவனிக்க வேண்டியது

டி என்பதை இறுதி எழுத்தாகக் கொண்டிருக்கக் கூடிய அடைமொழி யாது என்பதாகும். இத்னைப் பற்றிச் சிந்திக்குமிடத்துக் கருத்திற் கொள்ள வேண்டியது, பொதுவாக வளநாடுகள் எல்லாஞ் சோழப்பெருமன்னர் காலத்தில் அவர்களின் பட்டப் பெயர்களாலும் விருதுப் பெயர்களாலும் வழங்கி வந்தன என்பதாகும்.

இராஜராஜத் தென்னாடான பாண்டி நாட்டில் உத்தமசோழ வளநாடு, முடிகொண்ட சோழ வளநாடு, இராஜேந்திர சோழ வளநாடு என்னும் பிரிவுகள் இருந்தன.[26] சோழ மண்டலம் முதலாம் இராஜராஜனின் காலத்தில் இராஜேந்திரசிங்க வளநாடு, கேரளாந்தக வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு, நித்தவிநோத வளநாடு, இராஜாஸ்ரய வளநாடு, ஷத்திரிய சிகாமணி வளநாடு, இராஜராஜ வளநாடு என்னும் ஒன்பது பிரிவுகளைக் கொண்டிருந்தது.[27] தமிழகத்திலுள்ள வளநாடுகள் மூன்றின் பெயர்கள் இலங்கையிலுள்ள வளநாடுகளுக்கும் உரியனவாய் இருந்தன. சோழரின் சாசன வழக்காறுகள் பற்றிய அனுபவத்தின் அடிப்படையில் டி என்ற எழுத்தில் முடிவதாக இச்சாசனத்தில் அமைந்திருக்கக் கூடிய சொல் மும்முடி என்பதாகும். எனவே இச்சாசனத்தின் 5 ஆவது வரியிற் குறிப்பிடப்படும் வளநாட்டின் பெயர் மும்முடிசோழ வளநாடு என்றிருத்தல் வேண்டும். அது இராஜேந்திர சோழ வளநாடு எனவும் இச்சாசனத்திற் குறிப்பிடப்பட்டுள்ளது.

சோழமண்டலத்து இராஜேந்திர சிங்க வளநாடு என்பது அதன் பிரிவுகளில் ஒன்றான நாடொன்றிலுள்ள ஒரூரைச் சேர்ந்த பிரதானி ஒருவனின் பெயரும் இச்சாசனத்தில் இடம் பெற்றுள்ளன. ஆயினும் கல்வெட்டின் இரு பக்கங்களின் ஓரங்கள் வெட்டப்பட்டுள்ளதாலும் உள்ள சாசனப் பகுதியில் எழுத்துக்கள் சிதைவுற்றுள்ளதாலும் பெயர்களை அனுமானித்தேனும் அறிந்து கொள்ள முடியவில்லை.

அதனைப் பற்றி இதுவரை கவனித்தவற்றை அடிப்படையாகக் கொண்டு மானாங்கேணிச் சாசனத்தின் முதற் பாகம் மேல்வருமாறு அமைந்திருந்ததென்று கொள்ளலாம்.

1. ரான உடையார் ஸ்ரீ சோழ இல(ங்கேஸ்)
2. (வரே) தவற்கு யாண்டெ (டட்டாவது) [28]
3. (மும்மு) டி சோழ மண்ட(லத்து)
4. (இராசே) ஐந்த்ர சோழ வளநாட்(டு)
5. (மும்மு)டி சோழ வளநாட்(டு கோண)
6. (மா)மலை ஸ்ரீ மத்ஸ்யசே (கஸ்வ)

7. (ரமுடையர்) மூலஸ்தானமு(ம்.....
8. ஸ்வரமுடையார் கே (ரயிலும்)
9. (சே) ரழ மண்டலத்து ( இராஜே)
10. (ந்த்ரசி) ங்க வளநாட்டு இ ( ன்னம்)
11. ( பர்) நாட்டு...
12. (வே)வளான் கணபதி

சோழ இலங்கேஸ்வரனின் பத்தாவது ஆண்டுக்கு முற்பட்ட மூன்று ஆண்டுகளுள் ஏதோவொன்றிலே, ஈழமான மும்முடிச் சோழ மண்டலத்து இராஜேந்திர சோழ வளநாட்டுத் திருகோணமலை மச்சகேஸ்வரத்து மூலஸ்தானமும், அதே வளநாட்டிலுள்ள வேறொரு சிவாலயமுந் தொடர்பாகச் சோழ மண்டலத்து இராஜேந்திரசிங்க வளநாட்டுப் பிரதானிகள் மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பதிவு செய்வதாக மானாங்கேணிச் சாசனம் அமைந்ததென்பது தெளிவாயுள்ளது. மச்சகேஸ்வரத்தைப் பொறுத்தவரையில் அதன் மூலஸ்தானத்தைப் புனர்நிர்மாணஞ் செய்தனர் என்று அனுமானித்துக் கொள்ளலாம். இச்சாசனம் கிடைக்கப்பெற்ற தானத்திற் புராதனமான கட்டிட அழிபாடுகள் காணப்படுவதால் அது குறிப்பிடும் இரண்டாவது சிவாலயம் அங்கு அமைந்திருந்தது என்றுங் கருதலாம்.

திருக்கோணேஸ்வரம் பற்றிய வரலாற்று மூலங்களில் நிலாவெளிக் கல்வெட்டு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். அது பத்தாம் நூற்றாண்டுக்குரிய வரிவடிவங்களிலுந் தமிழும் கிரந்தமுங் கலந்த எழுத்துக்களிலும் அமைந்துள்ளது. அதன் முதற்பகுதி வெட்டப்பட்டு அழிந்துவிட்டதால் அரசனின் பெயர் கிடைக்கவில்லை. இலங்கையிற் சோழராட்சி ஏற்பட்டதன் விளைவாகச் சாசனவழக்கில் இடம்பெற்ற வேலி என்னுஞ் சொல் அதிற் காணப்படுவதாலும், வரிவடிவ அமைப்பின் காரணத்தினாலும் நிலாவெளிக் கல்வெட்டு சோழராட்சிக் காலத்தின் முற்பகுதிக்குரியதென்று கருதலாம். திருகோணமலையிலுள்ள மச்சகேஸ்வரம் என்னுங் கோயிலுக்கு நாள்வழிபாட்டுத் தேவைக்கு நிவந்தமாக நிலங் கொடுக்கப்பட்டமை பற்றிய சாசனமாக அது அமைந்துள்ளது. அதன் வாசகம் மேல் வருமாறுள்ளது:.

*'ஸ்ரீ கோணபர்வதம் திருக்கோணமலை மத்ஸ்ய கேஸ்வரமுடைய மஹாதேவர்க்கு நிச்சலழிவுக்கு நிவந்தமாக சந்திராதித்தவற் செய்த உராகிரிகாம, கிரிகண்ட கிரிகாம(த்து) நீர்நிலமும் புன்செய்யும்...*

*தேவாலயமும் மேனோக்கின மரமும் கீழ்நோக்கின கிணறும் உட்பட இந்நிலத்துக்கெல்லை கிழக்குக் கழி எல்லை. தெற்கெல்லை கல்லு குடக்கு எத்தகம்பே எல்லை. வடக்கெல்லை சூலக்கல்லாகும். இவ்விசைத்த பெருநான் கெல்லையில் அகப்பட்ட நிலம் இருநூற்று ஐம்பதிற்று வேலி. இது பன்மயேசுரரக்ஷ* [29].

இச்சாசனத்திலே தலம் பற்றியும், அங்கு நிகழ்ந்த நாள்வழிபாடு பற்றியும், கோயிலுக்கு வழங்கப்பெற்ற தேவதானம் பற்றியுஞ் சொல்லப்படுகின்றது. கோயிலின் பெயர் மச்சகேஸ்வரம் என்பதாகும். கோகர்ணத்துச் சிவாலயமான திருக்கோணஸ்வரம் மச்சகேஸ்வரம் என்னும் பெயராலும் வழங்கியது என்று கைலாசபுராணம் முதலிய நூல்கள் கூறும். அது நாட்டார் வழக்கினாலும் உணரப்படுகின்றமை குறிப்பிடற்குரியது. மச்சகேஸ்வரமானது திருகோணமலையில் உள்ளதென்றுஞ் சாசனங் கூறுகின்றது. திருகோணமலையினை ஸ்ரீ கோணபர்வதமென்று சமஸ்கிருத மொழிப் பெயராலுஞ் சாசனத்தில் வர்ணித்துள்ளனர். திருக்கோணேஸ்வரத்து மகாதேவரைக் ' கோணமாமலை அமர்ந்தாரே' என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் குறிப்பிடுகின்றார். எனவே தேவாரத் திருப்பதிகமும் நிலாவெளிக் கல்வெட்டும் ஒரே தலத்தினையே குறிப்பிடுகின்றன என்பது தெளிவாகின்றது. கோகர்ணத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட சைவத்திருத்தலங்கள் இருந்தமை பற்றி ஐதிகமோ ஆதாரமோ இல்லை.

நிலாவெளிச் சாசனம் மச்சகேஸ்வரத்துக்கு வழங்கப்பெற்ற தேவதானம் பற்றியதாகும். அத்தேவதான நிலம் 250 வேலி அளவினைக் கொண்டது. ஒருவேலி நிலம் பெரும்பான்மையும் 2,000 குழி எனக் கொள்ளப்படுவதால் இச்சாசனங் குறிப்பிடுந் தேவதானம் 1,700 ஏக்கர் நிலப்பரப்பைக் கொண்டது. உராகிரிகாம, கிரிகண்ட கிரிகாம என்னுமிடங்கள் அதில் அடங்கியிருந்தன. கிழக்கிற் கடலும், தெற்கிற் கல்லும், மேற்கில் எத்தகம்பே என்னுந் தானமும், வடக்கிற் சூலக்கல்லும் தேவதானத்தின் எல்லைகளாயிருந்தன. கிழக்கிற் கடல் எல்லை எனப்படுவதால் இந்நிலம் கடலோரமாய் இருந்தது என்பதை உணர முடிகின்றது. உராகிரிகாம, கிரிகண்ட கிரிகாம என்னும் இடப்பெயர்கள் வழக்கில் இல்லை. ஆயினும் கிரிகண்ட என்பதனைப் பற்றிப் புராதனமான பௌத்த நூல்களிலுந் திரியாய்க் கல்வெட்டிலும் குறிப்புகள் காணப்படுகின்றன. [30]

கிரிகண்ட பர்வதம், கிரிகண்ட எனும் பிரதேசம் ஆகியன பற்றி மகாவம்சம் குறிப்பிடுகின்றது. பாண்டுகாபயனின் மாமன்மாருள் ஒருவனாகிய கிரிகண்ட சிவ என்பவன் கிரிகண்ட என்னும் பகுதியை ஆட்சி புரிந்தான் என்று

சொல்லப்படுகின்றது.[31] கிரிகண்ட மகாவிகாரம் என்பதனைப் பற்றிப் புத்தகோஷர் எழுதிய விசுத்திமக்க என்னும் நூலிலும் சூளவம்சத்திலுஞ் கூறப்பட்டுள்ளது. [32] கிரிகண்ட என்னும் மலையிலுள்ள விகாரத்தைக் கிரிகண்ட மகாவிகாரம் என்றனர். சமஸ்கிருத மொழியிலும் கிரந்த வரிவடிவங்களிலும் எட்டாம் நூற்றாண்டளவிலே எழுதப்பெற்றதான திரியாய்க் கல்வெட்டு கிரிகண்டிக சைத்தியம் என்பதைப் புகழ்மொழிகளால் வர்ணிக்கின்றது.

திரியாய்க் கல்வெட்டு திரியாய் என்னும் ஊரின் மேற்கிலே கந்தசாமி மலையிற் காணப்படுகின்றது. அதற்கு 200 அடி தூரத்திற் பௌத்தப் பெரும்பள்ளி ஒன்றின் அழிபாடுகள் உள்ளன. கிரிகண்ட பர்வதம் என்னுந் தானமே கந்தசாமி மலை என வழங்குகின்றது. எனவே கிரிகண்ட கிரிகாம என்பது திரியாயிலுள்ள கந்தசாமி மலையினை உள்ளடக்கியிருந்த ஒரு நிலப்பிரிவு என்று கொள்ள முடிகின்றது

நிலாவெளிக் கல்வெட்டுப்பதிவு செய்துள்ளதும் மச்சகேஸ்வரத்திற்கு வழங்கப்பெற்றதுமான தேவதானம் மாதோட்டமான இராஜராஜபுரத்தில் அமைக்கப்பெற்ற இராஜராஜ– ஈஸ்வரத்திற்குத் தாழிகுமரனாற் கொடுக்கப்பெற்ற தானங்களை ஒத்திருக்கின்றது. இராஜராஜ–ஈஸ்வரத்தில் நெய்வேத்தியம் செய்வதற்கும், ஆராதனை பண்ணும் பிராமணருக்கு வேதனங் கொடுப்பதற்கும், வருடந்தோறும் வைகாசி மாதத்தில் விழா எடுப்பதற்கும், மாதோட்டத்திலிருந்தும் அரசாங்கத்துக்குக் கிடைக்க வேண்டிய வருமானங்களைத் தாழிகுமரன் கோயிலுக்கு நிவந்தமாக விட்டான். மச்சகேஸ்வரத்துத் திருநீலகண்ட மகாதேவர் சந்நிதியில் நித்திய நிவேதனத்துக்கு உராகிரிகாம, கிரிகண்ட கிரிகாம என்னும் இடங்களிலுள்ள 250 வேலி நிலம் வழங்கப்பட்டது. அத்தேவதானத்தை வழங்கியோரின் பெயரினைக் குறிப்பிடும் சாசனப்பகுதி அழிந்து விட்டது. ஆயினும் நிலம் அளவில் மிகப்பெரிது என்பதால் அது குடியானவர்களினால் அன்றித் தாழிகுமரனைப் போன்ற அரசாங்க அதிகாரி ஒருவனால் அல்லது இராசப் பிரதிநிதி ஒருவனால் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

நிலாவெளிக் கல்வெட்டிலுள்ள வேறொரு பிரதான அம்சம் மச்சகேஸ்வரத்துப் பன்மாகேஸ்வரர் பற்றிய குறிப்பாகும். சாசனத்தின் வாசகம் பன்மாகேஸ்வரர் ரக்ஷை என்ற தொடருடன் முடிகின்றது. பொதுவாகத் தமிழ்ச் சாசன வழக்கிற் சிவாலயங்களுக்கு வழங்கப்பெற்ற தானங்கள் தொடர்பாக இம்மொழித் தொடர் பயன்படுத்தப்படுகின்றது. பன்மாகேஸ்வரர் என்பது பொதுவாக மகேஸ்வரனான சிவபெருமானின் அடியார்களான சிவனடியார்களைக் குறிக்கும். ஆலயங்களுக்கு வழங்கப்பெற்ற நிவந்தங்களின்

அறங்காவலராக அவர்கள் விளங்கினர். பன்மாகேஸ்வரர் என்னும் சொல்வழக்கு இலங்கையிற் சோழராட்சிக் காலம் முதலாகவே ஆவணங்களில் இடம்பெற்றது. அக்காலத்திலே பொலநறுவையிலுள்ள வானவன்மாதேவீஸ்வரத்திலும் கோகர்ணத்து மச்சகேஸ்வரத்திலும் ஆலய விவகாரங்களைக் கவனிக்கும் பன்மாகேஸ்வரர் இருந்தமை குறிப்பிடற்குரியது.

திருக்கோணேஸ்வரத்தின் இடிபாடுகளிடையே காணப்பெற்ற சோழமன்னர் காலத்துச் சாசனப் பகுதிகளிற் சில சோழர் அக்கோயிலுடன் நெருங்கிய தொடர்புகளைக் கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகின்றன. முதலாம் இராஜராஜனின் மெய்க்கீர்த்தி அடங்கிய சிலாசாசனத்தின் பகுதியொன்று திருகோணமலையிற் கடலடியிலிருந்து மீட்கப்பெற்றது.

இப்போது அது திருக்கோணஸ்வரத்து மண்டபத்தில் உள்ளது.[13] இச்சிலாசாசனத்தின் முதற் பகுதியும் இறுதிப்பகுதியும் உடைந்து அழிந்துவிட்டன. இராஜராஜனது மெய்க்கீர்த்தியில் வழமையாக வரும் 'இரட்டபாடியேழரை யிலக்கமும் முந்நீர்ப்பழந்தீவு பன்னீராயிரமும்' என்ற தொடர்கள் இச்சிலாசாசனத்து மெய்க்கீர்த்திப் பகுதியிற் காணப்படவில்லை. எனவே, செ. குணசிங்கம் வற்புறுத்திக் கூறியவாறு இக்கல்வெட்டு இராஜராஜ சோழனது ஆட்சியின் ஆரம்ப காலத்திற்குரியது என்று கொள்வது பொருத்தமானதாகும். அரசனின் ஆண்டுகள் மிகுந்து செல்லச் செல்ல அவ்வாண்டுகளில் நிகழுஞ் சாதனைகள் பற்றிய விபரங்கள் மெய்க்கீர்த்தியிற் சேர்த்துக் கொள்ளப்படுவதால் அது நாளடைவில் வடிவத்தில் விருத்தி பெற்றது. இளவரசனாகிய மதுராந்தகன் இரட்டபாடி மீது படையெடுத்துச் செல்வதற்கும், பழந்தீவு முதலான மேற்கிலுள்ள தீவுகளைச் சோழர் கைப்பற்றுவதற்கும் முற்பட்ட காலத்து மெய்க்கீர்த்தியின் வடிவமே இராஜராஜனது கோணேஸ்வரம் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது. திருக்கோணேஸ்வரத் திருப்பணிகளையோ அக்கோயிலுக்கு வழங்கிய தானங்களையோ அச்சாசனம் பதிவு செய்திருந்தது என்று அனுமானித்துக் கொள்ளலாம்.

திருகோணமலை நகரப்பகுதியிலுள்ள சமய நிலையங்களோடு சோழர் கொண்டிருந்த தொடர்புகளுக்கு, அங்கு காணப்படும் இராஜேந்திர சோழனது காலத்துச் சாசனங்களுஞ் சான்றுகளாய் உள்ளன. அவனுடைய மெய்க்கீர்த்தியின் வாசகம் அடங்கிய சாசனங்கள் ஒஸ்ற்றென்பேர்க் கோட்டையிலும் பத்திரகாளியம்மன் கோயிலிலுங் காணப்படுகின்றன. இவற்றுட் கோட்டையில் உள்ள கல்வெட்டுக் காலத்தால் முற்பட்டதாகும். அது துண்டமாயுள்ளது. அதன் முதற் பகுதியும் கடைசிப் பகுதியும் உடைந்து விட்டன. எஞ்சியுள்ள பகுதியில் அவனுடைய மெய்க்கீர்த்தியின் மேல்வரும் பகுதி காணப்படுகின்றது :

*.......... (கொள்ளிப்) பாக்கையும்*

*நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்*

*பொருகடல் ஈழத்தரைசர் தம்முடியும்*

*ஆங்கவர் தேவியர் ஓங்கெழின் முடியும்*

*முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த*

*சுந்தர முடியும் இந்திரனாரமும்*

*தெண்டிரை யீழ மண்டல முழுவதும்*

*எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்*

*குலதனமாகிய பலர்புகழ் முடியும்*

*செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்*

*தொல்பெருங் காவற் பலபழந்தீவும்*

*மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரிவன்மரான*

*உடையார் ஸ்ரீ இராஜேந்திர சோழ தேவர்க்குயாண்டு ........*[34]

இம் மெய்க்கீர்த்திப் பகுதியிற் கங்கைப் படையெடுப்பு, கடாரப் படையெடுப்பு ஆகியன பற்றிய குறிப்புகள் இல்லை. எனவே அப்படையெடுப்புகள் நடைபெறுவதற்கு முன், இராஜேந்திரனுடைய ஆட்சியின் 7 ஆவது ஆண்டளவில் இச்சாசனம் திருகோணமலை நகரப் பகுதியிலுள்ள கோயிலொன்றிலே அமைக்கப்பெற்றதென்று கருதலாம். திருக்கோணேஸ்வரம் கோயிலை இடித்த பின்பு அக்கோயிலின் அழிபாடுகளைக் கொண்டு போர்த்துக்கேயர் கோட்டையைக் கட்டினார்கள் என்று ஐரோப்பியரின் நூல்களிற் கூறப்படுவதால் இச்சாசனமானது கோணேஸ்வரத்தில் இருந்ததென்று கருதலாம்.

இராஜேந்திர சோழனின் காலத்துச் சாசனமொன்று திருகோணமலைப் பத்திரகாளி அம்மன் கோயிலிற் காணப்படும் தூணொன்றில் எழுதப்பட்டுள்ளது. அத்தூணின் பக்கங்களுள் ஒன்று கட்டிடத்தோடு சேர்த்து வைக்கப்பட்டுச் சாந்தினாற் பூசப்பட்டுள்ளது. ஏனைய மூன்று பக்கங்களிலும் அரசனின் மெய்க்கீர்த்தியின் வாசகம் எழுதப்பட்டுள்ளது.[35] தூணைக் கட்டிடத்திலிருந்து பிரித்துப் பூச்சுகளை நீக்கிச் சாசனத்தைப் படிவமெடுத்து ஆராயின் சில முக்கியத்துவம் வாய்ந்த செய்திகள் கிடைக்கக்கூடும். திருகோணமலையிற் போர்த்துக்கேயரால் இடிக்கப்பட்ட கோயிலொன்றின் மண்டபமொன்றிலே இச்சிலாசாசனம் ஒரு காலத்திலே அமைக்கப்பட்டிருந்ததென்று கொள்வது பொருத்தமானதாகும்.

# 4. இராஜராஜ சதுர்வேதிமங்கலம்

கந்தளாயிற் காணப்படும் சோழ இலங்கேஸ்வரன் காலத்துச் சாசனம் அங்கு பதினோராம் நூற்றாண்டில் அமைந்திருந்த சில சமய – சமூக நிறுவனங்களைப் பற்றிய அரிய செய்திகளைக் குறிப்பிடுகின்றது. அதன் முதற் பகுதி வாசித்தறியக் கூடிய அளவிலே தெளிவாயுள்ளது. இரண்டாம் பகுதியிற் பல எழுத்துகளுஞ் சொற்றொடர்களுஞ் சிதைந்து விட்டன. அதன் முதற் பகுதியின்வாசகம் மேல்வருமாறு அமைந்துள்ளது.:

> " ஸ்வஸ்தி ஸ்ரீ. கோ ஸ்ரீ சங்கவர்மரான உடையார் ஸ்ரீ சோழ இலங்கேஸ்வர தேவற்கு யாண்டு பத்தாவது ராஜேந்திர சோழ வளநாட்டு ராஜ விச்சாதிர வளநாட்டு பிரஹ்மதேசம் ஸ்ரீ ராஜராஜச் சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறி பெருமக்களோம் இய்யாட்டைக் கும்மநாயற்று பூர்வ பக்ஷத்து த்வாதஸியும் செய்வாய்க்கிழமையும் பெற்ற ஆயிலியத்து நாளன்றிரவு நம்மூர் தண்டுகின்ற முத்தங்கைக் கோயில் மானி .......... " [36]

சாசனத்தின் சிதைவடைந்த பிற்பகுதியில் நீர்நிலம், வாசுதேவ வாய்க்கால், விக்கிரமசோழ வாய்க்கால் இரண்டாங் கண்ணாற்று மூன்றாஞ் சதிரம், மா, மூன்றாங் கண்ணாறு என்னும் மொழிகள் உள்ளன. குளத்திலிருந்து நீர் பாயும் விக்கிரம சோழ வாய்க்காலின் இரண்டாங் கண்ணாற்று மூன்றாஞ் சதுரத்திலுள்ள விளைநிலம் 3 மா தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட ஒரு நடவடிக்கை பற்றிச் சாசனங் வர்ணிக்கின்றது.

அதனை இராஜராஜ சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்கள் மேற்கொண்டனர். பிரம்மதேயங்களிலுள்ள சபையாரைப் பெருங்குறி மகா சபை என்றும் பெருங்குறிப் பெருமக்கள் என்றும் வர்ணிப்பது வழக்கம்.[37] அத்தகைய மகாசபையின் நடவடிக்கையினை இச்சாசனம் பதிவு செய்கின்றது. பிரம்மதேயமானது இராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரைப் பெற்றிருந்தமையுங் குறிப்பிடற்குரியது. அது இராஜேந்திர சோழ வளநாட்டின் பிரிவாய் அமைந்திருந்தது. கந்தளாய்ச் சாசனம் கோயிலொன்றின் அழிபாடுகளிடையிற் காணப்படுவதாற் கந்தளாயிற் சோழர் காலத்தில் அமைக்கப்பெற்ற ஆலயமொன்றிலே அது நிறுவப்பட்டிருத்தல் வேண்டும்.

கந்தளாயிலுள்ள சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்கள் சோழ இலங்கேஸ்வரதேவனின் 10ஆவது ஆண்டிலே, மாசி மாதத்துப் பூர்வபக்ஷத்துத்

துவாதசியான செவ்வாய்க்கிழமையும் ஆயிலிய நக்ஷத்திரமுங் கூடிய தினத்து இரவிலே கூடியிருந்து ஊர்த் தண்டுவானாகிய மானி தொடர்பாகவும், விக்கிரமசோழ வாய்க்காலின் இரண்டாங் கண்ணாற்று மூன்றாஞ் சதிரத்திலுள்ள நீர்நிலம் 3 மா குறித்தும் ஏதோ முடிபுகளை மேற்கொண்டனர். கந்தளாயிலிருந்த சிவன் கோயில் மண்டபத்திலே அவர்கள் கூட்டமாக கூடினார்கள் என்றும், கூட்டத்தில் மேற்கொண்ட தீர்மானத்தைக் கோயிலிலிருந்த மண்டபமொன்றின் தூணிலே சிலாசாசனஞ் செய்தனரென்றும் அனுமானித்துக் கொள்ளலாம்.

இச்சாசனத்தில் வரும் நம்மூர் தண்டுகின்ற முத்தங்கைக் கோயில் மானி என்னுந் தொடரானது. குறிக்கப்பெற்ற சதுர்வேதிமங்கலத்திலே அம்மன் கோயிலொன்று இருந்தமையினை உணர்த்துகின்றது. துர்க்கையாரை முத்தங்கை என்று குறிப்பிடுவது சாசன வழக்காகும். பிரமச்சாரிகளான இளம் பிராமணரை மானி என்பர். முத்தங்கை கோயிலைச் சேர்ந்த மானி ஒருவன் ஊர்த் தண்டுவானாக இருந்தமை கவனித்தற்குரியது. ஊர்ச் சபையாருக்குச் செலுத்த வேண்டிய இறைகடமைகளையும் பிறவற்றையுஞ் சேகரிப்பவனைத் தண்டுவான் என்று குறிப்பிடுவது வழக்கம்.[38] எனவே ஊரிலுள்ள குடியார்களிடமிருந்து இறைகடமைகளைச் சேகரிப்பதற்கென இராஜராஜ சதுர்வேதிமங்கலத்துச் சபையார் தம்மூரிலுள்ள அம்மன் கோயிலைச் சேர்ந்த அந்தணனொருவனை நியமித்தனர் என்பது தெளிவாகின்றது. அதன் எல்லைகளுக்குள் இராஜராஜ சதுர்வேதிமங்கலத்துச் சபையார் நிர்வாக ஆதிக்கம் பெற்றிருந்தனர் என்பதும் இதனால் உணரப்படும். இப்பிரம்மதேயம் 13 ஆம் நூற்றாண்டுவரை நிலைபெற்றிருந்தது.

கந்தளாய்ச் சாசனத்தின் சிதைவுற்றுள்ள பகுதியிற் காணப்படும் வாசுதேவ வாய்க்கால், விக்கிரமசோழ வாய்க்கால், இரண்டாங் கண்ணாறு, நீர்நிலம் முதலிய சொற்களை விளக்குவதற்குத் தமிழகத்துப் பிரம்மதேயம் ஒன்றினைப் பற்றிய சாசனப்பகுதி ஒன்றினை இங்கு ஆதாரமாகக் கொள்வது மிகப் பொருத்தமானதாகும். மணி மங்கலத்திலுள்ள முதலாம் இராஜராஜனது காலத்துச் சாசனமொன்றின் பகுதி மேல்வருமாறுள்ளது:

> '......... யாண்டு 15 ஆவது ரிஷப நாயற்று பூர்வபக்ஷத்து தசமியும் வியாழக்கிழமையும் பெற்ற அத்தத்தின் நாள் செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டு பிரம்மதேயம் மணிமங்கலமாகிய உலோகமாதேவிச் சதுர்வேதிமங்கலத்து மகாசபைப் பெருமக்களோம் இற்றை நாளால் பகல் எம்மூர் ..... தண்ணீர்ப் பந்தலிலே தர்மம் செய்து கூட்டம்

குறைவறக் கூடியிருந்து எம்மூர் திருவாய்ப்பாடி ஸ்ரீ கிருஷ்ண பெருமானுக்கு நிசதம்படி நாட் பெருமமுதும் ஒரு நுந்தா விளக்கும் முட்டாமை இத்தேவர்க்கு ஸ்ரீ கார்யம் கடைக்காணக் கடவ கரணப் பெருமக்களே முட்டாமைக் கடைக் கொண்டு குடுப்பார்களாகப் பணிப்பணியாய்ப் பணித்து ... இத்தேவருடைய பூமி இவ்வூர்ப் பாதிரிக்கழனி மேலைக்காலின் கீழ் சிறகு .... பெருமான் பக்கல் இத்தேவர் விலை கொண்டுடைய இறைநிலம் நூறு குழியும் பனங்காட்டேரிவதியின் மேல் சிறகு சாணூர மாத்தெருமான் சோமயாஜியார் பக்கல் இத்தேவர் பெற்றுடைய இறைநிலம் நூறு குழியும் இவ்வூர் தென்பிடாகை ஆத்தனஞ்சேரி கருணாகர வாய்க்கால் ...... கண்ணாற்று கன்னரவதிக்குக் கிழக்கு மூன்றாஞ் சதிரத்து ஸாஹணை ஆதிச்சகுமார கிரமவித்தன் பக்கல் இத்தேவர் விலை கொண்டுடைய நிலம் நானூறு குழியுமாக இவ்வெண்ணூறு குழியாலும் வந்த இறை திரவ்யம...."[39]

மணிமங்கலத்துச் சபையார் முதலாம் இராஜராஜனின் 15 ஆவது ஆண்டில் ஒருநாட் பகலிலே தண்ணீர்ப் பந்தலிற் கூடிக் கோயிற் காரியங்களை ஆராய்ந்து சில நடவடிக்கைகளை மேற்கொண்டனர் என்பது இச்சாசனப் பகுதியால் உணரப்படுகின்றது. அறக்கட்டளை ஒன்றின் தொடர்பாகத் திருவாய்பாடி கிருஷ்ணப் பெருமான் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டிருந்த விளைநிலங்கள் சிலவற்றின் வருமானங் கொண்டு நாட்பெருவமுதும் நந்தா விளக்கொன்றும் இடுவிக்கப்படும் பணியைக் கரணப்பெருமக்களே கண்காணிக்க வேண்டும் என்று சபையார் பணித்தனர். கரணப் பெருமக்கள் என்பது சபையாரால் அமைக்கப்படும் நிறைவேற்றுக் குழுவினரைக் குறிப்பதாகும். இத்தர்மம் தொடர்பான நிலங்களைப் பற்றிய விபரங்களிலே பாதிரிக்கழனி, கருணாகர வாய்க்கால், கண்ணாறு, கன்னரவதி, மூன்றாஞ் சதிரம் என்னுஞ் சொற்கள் காணப்படுகின்றன.

குளத்தூம்பினின்றும் நீர் பாயும் வழிகளை வாய்க்காலென்றும், அவற்றின் கிளைகளைக் கண்ணாறு என்றும், கண்ணாறுகளின் அணைக்கட்டுகளை வ்தி என்றுங் குறிப்பிடுவது புராதன காலத்து வழமையாகும். நீர்நிலப் பகுதிகள் தொடர்பாகவே சதிரம் என்னுஞ் சொல் சாசனங்களில் வருகின்றது. இக்காலத்திற் போலவே வயல்நிலங்கள் சதுர வடிவிலும் நீள்சதுர வடிவிலும் அமைக்கப்பட்டிருந்தன. அதனாற் போலும் அவற்றைச் சதிரம் என்றனர். அவற்றை அடையாளங் காண்பதற்கும், இறைகடமைகளைக் காணியாளரிடமிருந்து பெற்றுக் கொள்வதற்கும், அந்நிலங்களைப் பற்றிய விபரங்களைப் புரவு,

வரிப்பொத்தகம் என்பன போன்ற ஆவணத் தொகுதிகளிற் பதிவு செய்து வைத்திருப்பது வழமை. மணிமங்கலத்துச் சாசனத்தில், "இவ்வூர் தென்பிடாகை ஆத்தனஞ்சேரி கருணாகர வாய்க்கால் ...... கண்ணாற்றுக் கன்னரவதிக்குக் கிழக்கு மூன்றாஞ் சதிரத்து ஸாஹணை ஆதிச்சகுமார கிரமவித்தர் பக்கல் இத்தேவர் விலைகொண்டுடைய பூமியில் நூறு குழியும்...." என வரும் தொடர் இவ்வழமைக்கோர் உதாரணமாகும்.

சோழ இலங்கேஸ்வரன் காலத்துக் கந்தளாய்க் கல்வெட்டில் வரும் வாய்க்கால், கண்ணாறு, சதிரம் என்னுஞ் சொற்களின் உபயோகத்தை மணிமங்கலச் சாசனத் தொடர்களின் மூலமாகப் புரிந்துகொள்ள முடிகின்றது. இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் நீர்ப்பாசன வசதியுள்ள வயல்நிலங்கள் இருந்தன. குளத்திலிருந்து நீர் பாயும் இரு வாய்க்கால்கள் இருந்தன. அவை விக்கிரமசோழ வாய்க்கால், வாசுதேவ வாய்க்கால் என்பனவாகும். கந்தளாயிலிருந்த குளவாய்க்கால்களிற் கண்ணாறு என்னும் கிளை வாய்க்கால்கள் அமைந்திருந்தன. இச்சாசனங் குறிப்பிடும் பிரம்மதேயம் கந்தளாய்ப் பிரம்மதேயம் என்பதால் அதிலிருந்த வாய்க்கால்கள் இரண்டும் கந்தளாய்க் குளத்து வாய்க்கால்களாதல் வேண்டும். எனவே, பதினோராம் நூற்றாண்டிலே, சோழ இலங்கேஸ்வரன் இலங்கையில் அரசனாக விளங்கிய காலத்திற் கந்தளாய்க் குளமும் அதனை ஆதாரமாகக் கொண்ட நீர்ப்பாசனமுறையும் சீரான நிலையில் இருந்தன என்பதற்குக் கந்தளாய்க் கல்வெட்டு சான்றாயுள்ளது. குளவாய்க்கால்கள் வாசுதேவ வாய்க்கால் என்றும் விக்கிரமசோழ வாய்க்கால் என்றும் பெயரிடப்பட்டுள்ளமையுங் குறிப்பிடத் தகுந்தது. சோழ இலங்கேஸ்வரன் காலத்திலே குளமும் அதன் வாய்க்கால்களுந் திருத்தி அமைக்கப்பட்டிருத்தலுங் கூடும்.

இங்கே இதுவரை ஆராய்ந்த விடயங்கள் பற்றிய முடிபுகளை மேல்வருமாறு சுருக்கமாகத் தொகுத்துக் கூறலாம் :

சோழப் பெருமன்னர் காலத்திலே தென்னிந்தியாவில் ஏற்பட்ட சமய – கலாசார அபிவிருத்திகளின் செல்வாக்கு ஈழமான மும்முடிச்சோழ மண்டலத்திற் குறிப்பிடத்தக்க அளவிலே காணப்பட்டது. தமிழகத்திற் போல இலங்கையிலும் பல புதிய ஆலயங்கள் சோழப் பிரதானிகளினாலும் வணிக கணத்தவராலும் பிறராலும் உருவாக்கப்பட்டன. பொலநறுவை, பதவியா, கந்தளாய் போன்ற கேந்திர நிலையங்களில் அவை அமைக்கப்பட்டன. தமிழகத்திற் போல இலங்கையிலும் பாடல்பெற்ற தலங்களைப் புனர்நிர்மாணஞ் செய்வதிற் கவனஞ் செலுத்தப்பட்டது. திருக்கேதீஸ்வரத்திலே தாழிகுமரன் என்னும் அதிகாரியினாற் புதிய கோயில் அமைக்கப்பெற்றது. அக்கோயிலின் தேவைகளுக்கென மாதோட்டமான

இராஜராஜபுரத்தில் நிலமும் அரசாங்கத்திற்குரிய வருமானங்களும் மானியமாக அவனால் வழங்கப் பெற்றன. இத்தகைய நடவடிக்கைகளைச் சோழப் பிரதானிகள் திருக்கோணேஸ்வரத்திலும் மேற்கொண்டனர் என்று கருதமுடிகின்றது.

கோகர்ணத்துச் சிவாலயமானது 10 ஆம், 11ஆம் நூற்றாண்டுகளில் மச்சகேஸ்வரம் என்னும் பெயரால் வழங்கியது என்பது சாசனத் தொடர்களினால் உணரப்படுகின்றது [40]. அங்குள்ள மூலஸ்தானம் தொடர்பான திருப்பணிகளைச் சோழப்பிரதானிகள் சிலர் செய்தனர் என்பதைச் சோழ இலங்கேஸ்வரனின் காலத்து மானாங்கேணிச் சாசனம் உணர்த்துகின்றது. அக்கோயிலுக்கு பெருமளவிலான நிலங்கள் தேவதானமாக விடப்பட்டமைக்கு நிலாவெளிச் சாசனம் சான்றான அமைகின்றது. வானவன் மாதேவி – ஈஸ்வரத்திற் போல அங்கும் பன்மாகேசுரர் அறக்கட்டளைகளை மேற்பார்வை செய்வதற்குப் பொறுப்பேற்றிருந்தனர். சோழமன்னர் மூவரின் காலத்து கல்வெட்டுகள் திருகோணமலை மாவட்டத்தில் உள்ளன. முதலாம் இராஜராஜனதும் முதலாம் இராஜேந்திரனதும் காலத்துச் சாசனங்கன திருக்கோணேஸ்வரத்தில் இருந்தன என்று கொள்வதற்கான காரணங்கள் உள்ளமையுங் கவனித்தற்குரியது.

சோழராட்சியில் இலங்கையிலுள்ள கோயில்களிற் கிரமமாக ஆராதனைகளும் உற்சவங்களும் நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தென்னிந்தியக் கோயில்களில் உள்ளதைப் போன்ற ஆலய நிர்வாக முறையும் வழிபாட்டு முறைகளும் இலங்கையிலுள்ள கோயில்களில் ஏற்படுத்தப்பட்டன. ஆலயசேவைகள் புரிவதற்கென்று அந்தணர், கம்மாளர், வாத்தியக்காரர் போன்றோரை கோயில்வளாகத்திற்கு அண்மையிலுள்ள இடங்களிற் குடியிருத்தினார்கள். கந்தளாய்ப் பிரம்மதேயம் போன்ற புதிய அக்கிரகாரங்கள் சில அமைக்கப்பெற்றன.

இராஜேந்திர சோழனின் மகனாகிய சோழ இலங்கேஸ்வரன் இலங்கையிற் சில காலமிருந்து ஆட்சி புரிந்தான். இதுவரை கிடைத்துள்ள அவனது காலத்துச் சாசனங்கள் இரண்டும் திருகோணமலை மாவட்டத்திலுள்ள ஊர்களிலிருந்து கிடைத்துள்ளன. அவனுடைய காலத்திற் கந்தளாய்க் குளத்திலிருந்து வாய்க்கால்கள் வழியாக வயல்களுக்கு நீர்ப்பாசனஞ் செய்தனர். கந்தளாய்ப் பிரம்மதேயத்தின் எல்லைகளுக்குள் ஈஸ்வரம் ஒன்றும் அம்மன் கோயிலொன்றும் அமைந்திருந்தன என்றும் கொள்ள முடிகின்றது.

# குறிப்புகளும் விளக்கவுரையும்

1. தி.வை. சதாசிவபண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1974, பக்கம் 121.

2. மேலது, பக்கம் 108.

3. K.A. Nilakanta Sastri, The Colas, University of Madras, Second Edition, 1955, pp. 168, 225.

4. மேலது, ப. 465; பிற்காலச் சோழர் வரலாறு, ப.472.

5. மேலது, ப. 166; K.N. Nilakanta Sastri, the Colas, pp. 196-7.

6. அருண்மொழித்தேவ வளநாடு, நிகரிலிச்சோழ வளநாடு, விக்கிரமசோழ வளநாடு, இராஜராஜ வளநாடு, இராஜவித்தியாதர வளநாடான இராஜேந்திர சோழ வளநாடு, அபயாஸ்ரய வளநாடான இராஜேந்திர சிங்க வளநாடு ஆகியன மும்முடிச்சோழ மண்டலத்தின் பிரிவுகள் என்று சாசனங்கள் கூறும்.

7. முதலாம் இராஜராஜனின் சகோதரியான குந்தவை இராஜராஜபுரத்திலே சிவாலயம், விண்ணகரம், ஜினாலயம் ஆகிய மூன்றினையும் அமைத்து அவற்றுக்கு நிவந்தங்களைக் கொடுத்தாள். மன்னார் கோயிலில் முதலாம் இராஜேந்திர சோழனின் ஆட்சியில் அமைக்கப்பெற்ற விண்ணகரம் இராஜேந்திரசோழ விண்ணகரம் என்னும் பெயரால் விளங்கியது.
*பிற்காலச் சோழர் வரலாறு,* பக்கம். 157; The, **colas** pp. 203, 643.

8. பல்லவர் காலத்தின் பிற்பகுதியிற் கோயில்களிலே தேவாரப் பதிகங்களை ஓதும் வழக்கம் ஏற்பட்டிருந்தது. விஜயநந்தி விக்கிரமவர்மன் காலத்திலே திருவல்லத்தில் ஓதுவார்கள் தேவாரப் பதிகங்களை ஓதினார்கள். திருச்சிராப்பள்ளி மாவட்டத்து லால்குடி, ஆத்தூர் ஆகியவற்றிலுள்ள சிவாலயங்களில், முதலாம் பராந்தக சோழனது ஆட்சியில், நாள்தோறும் ஆராதனை வேளைகளிற் பிராமணர் திருப்பதிகங்களைப் படித்தனர்.

ஆலயங்களில் வாத்தியங்கள் சகிதமாகத் தேவாரப் பதிகங்களைப் படிப்பதற்கென ஏற்படுத்தப்பட்ட அறக்கட்டளைகளைப் பற்றிச் சோழ நாட்டிலும் தொண்டை நாட்டிலுமுள்ள பல சாசனங்கள் கூறுகின்றன. முதலாம் இராஜேந்திரன் காலத்திலே தேவாரநாயகம் பற்றிக் காணப்படும் சாசனக் குறிப்பானது தேவாரப் பதிகங்களை ஆலயங்களில் ஓதுவாரின் பணிகளைக் கவனிப்பதற்கென அரசாங்க நிறுவனமொன்று அமைந்திருந்தமையினை உணர்த்துகின்றது.

வைணவக் கோயில்களில் ஆழ்வார்கள் பாடியருளிய திருப்பதியங்களை ஓதும் வழக்கமும் ஏககாலத்தில் ஏற்பட்டதென்று கருதலாம். உட்கலிலுள்ள முதலாம் இராஜராஜனது காலத்துக் கல்வெட்டொன்று திருவாய்மொழி தேவரைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. முதலாம் இராஜேந்திரனின் காலத்தில் உத்தரமேரூரிலே திருப்பதியம் ஓதும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குக் கோயிலில் நெய்வேத்தியமாக வைத்த திருவமிர்து பகிர்ந்து கொடுக்கப்பட்டமை பற்றிய சாசனக்குறிப்பு உள்ளது. அங்கே நாள்தோறும் திருவாய்மொழி ஓதும் மூவருக்கு நிலம் வழங்கப்பட்டது.

திருவரங்கத்திலே திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலே திருவாய் மொழி ஓதுவதற்கு முதலாங் குலோத்துங்க சோழனின் ஆட்சியில் (1085) அறக்கட்டளை ஏற்படுத்தப்பட்டிருந்தது. திருவரங்கத்திலே திருவிழாக் காலத்தில் மூன்றிரவுகளிற் குலசேகராழ்வாரின் தேட்டருந்திறல் எனத் தொடங்குந் திருப்பதிகம் படிக்கப்பெற்றது என்பதனை 1088 ஆம் ஆண்டுக்குரிய சாசனமொன்று குறிப்பிடுகின்றது.

திருக்கோயிலூரில் ஐப்பசி, வைகாசி ஆகிய மாதங்களில் நடைபெறும் திருவிழாக்களிலே திருவாய் மொழி படிப்பதற்கு அறக்கட்டளை ஒன்று ஏற்படுத்தப்பட்டமையினை இரண்டாம் இராஜாதிராஜனின் எட்டாவது (1171) ஆண்டுக்குரிய கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது. காஞ்சிபுரத்து விண்ணகரமொன்றிலே ஓதுவார் ஐம்பதின்மர் திருமொழி பாடினார்களென்று கி.பி. 1242 ஆம் ஆண்டில் எழுதப்பெற்ற ஆவணமொன்றிற் கூறப்பட்டுள்ளது. திருக்கோயிலூரிலுள்ள விண்ணகரமொன்றிலே திருநெடுந்தாண்டகத்தை ஓதுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. **The Colas**, Vol.II, pt I, University of Madras, 1037, pp.479-480.

9. South Indian Inscriptions, Vol III : No: 92: Vol :IV: No: 1411; A Velupillai, *Ceylon Tamil Inscriptions,* Pt I *Peradeniya, 1970; Ceylon Tamil Inscriptions, Pt II, Peradeniya, 1971; Epigraphia*

*Tamilica Ed. K. Indrapala, Pt I, Jaffna Archaeological Society, 1971; S Gunasingham, " Two Inscriptions of Cola Ilankesvara Deva"; Trincomalee Inscriptions Series - No 1 Peradeniya, 1974.*

10. இராஜேந்திர சோழனின் காலத்தில் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்று அங்குள்ள அரசனைக் கைப்பற்றிக் கொண்டுபோன சோழ சேனாதிபதியின் பெயர் ஊர்காவற்றுறையிலுள்ள ஹம்மென்ஹீல் கோட்டையிற் காணப்படும் உடைந்த சாசனப் பகுதியால் மட்டுமே அறியப்படுகின்றமை, குறிப்பிடற்குரியது. மாதோட்டத்தில் நிறுவப்பெற்றிருந்த அந்தச் சாசனத்தைப் பறங்கியர் பின்பு ஊர்காவற்றுறைக்கு எடுத்துச் சென்றுவிட்டனர். Epigraphia Tamilica, pt. I.

11. South Indian Inscriptions (SII), Vol IV No 1411

12 SII Vol IV No. 1414 B.

13. இவற்றைக் குறிப்பிடுஞ் சாசனத்தின் வாசகம் மேல்வருமாறு உள்ளது. ..... ஸ்ரீயாண்டு 28 ஆவது உத்தம சோழ ஈஸ்வரமுடைய மாதேவர்க்கு கல்லையில் தெலியல் பெற்றில் நிலம் மூவேலியும் நொந்தா விளக்கு 1க்கு பசு 20ம் இவை நிவந்தஞ் செய்வித்தேன் அரங்கன் இராமேசனேன். சந்தி விள (க்குக்குத்) தெங்கு 50. SII Vol IV, 1411.

14. UNESCO - Sri Lanka Project of the Cultural Triangle, Alahana Pirivena, Polonnaruwa, Third Archaeo logical Excavation Report, 1982; ed.p.L. Prema tilleke, P. 128

15. Epigraphia Tamilica, Pt. I, P. 27.

16. SII, Vol. IV: 1388-1392.

17. The Colas, PP 186 -8

18. SII, Vol. IV : 1388.

19. Archaeological Survey of Ceylon Annual Report (ASCAR), 1891, p 12; ASCAR, 1906, p 27

20. ASCAR,

21. SII, Vol III : No 92.

22. CTI, Pt, I pp. 16-19.

23. CTI, Pt. II, pp. 23-24

24 S. Gunasingham, " Two Inscriptions of Cola Ilankesvara Deva" Trincomalee Inscriptions Series - No.1 Peradeniya, 1974, PP 3-6

25. S. Gunasingham, " A Tamil Slab Inscription at Nilaveli", The Sri Lanka Journal of the Humanities Vol. I, No.1, pp 60-71.

26. SII, Vol, XIV, Nos.

27. தி.வை. சதாசிவ பண்டாரத்தார். பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974, ப. 473–4.

28. ஆண்டினைக் குறிக்கும் எழுத்துகள் அழிந்துவிட்டன. யாண்டெ (யாண்டு+எ(ஏ)) என்ற அக்ஷரங்கள் காணப்படுவதால் இச்சாசனம் சோழ இலங்கேஸ்வரனின் 7ஆம், 8ஆம், 9ஆம் ஆண்டுகளில் ஏதோவொன்றினுக்கு உரியதாதல் வேண்டும்.

29. "A Tamil Slab Inscription at Nilaveli" **The Sri Lanka Journal of the Humanities.**, Vol. I, No.1, pp. 60 - 71.

30. மகாவம்சம் 10 : 26–29, 83.

31. சூளவம்சம் 60 : 60-61, S. Paranavitana, "Tiriyay Rock Inscription" Epigraphia Zeylanica, Vol. 4, pp. 151 - 160.

32. S. Gunasingham, "A Fragmentary Slab Inscription of the time of Rajaraja I ( A.D 985 - 1014.)"

Trincomalee, Inscriptions Series No 2, Peradeniya 1979, pp. 1-5.

33. W.E. Baker and H.M. Durand, "Fascimiles of ancient in scriptions lithographed by Jas. Prinsep Inscriptions of Trincomalee", The Journal of the Asiatic Society of Bengal, Caleutta, Vol.5, pp. 554-5; S. Gunasingham, " A Slab - Inscription of the time of Rajendra I from fort - Ostenburgh, Trincomalee", Trincomalee Inscriptions Series, No. 2, pp. 13-23.

34. மேலது, ப. 5 –10.

35. S.Gunasingham, "Two Inscriptions of Cola Ilankesvara Deva" , Trincomalee Inscriptions series - No.1, Peradeniya, 1974, p.11.

36. "சபை, மகா சபை என்ற சொற்களும் முறையே அவற்றுக்கு ஒப்பான குறி, பெருங்குறி என்னுந் தமிழ் சொற்களும் ஒரே அமைப்பினையே குறிப்பனவாகும். அது சில சமயங்களிற் பெருங்குறி எனப்படும். அதன் உறுப்பினரைக் கூட்டாகப் பெருமக்கள் என்று குறிப்பிடுவர்" – நீலகண்ட சாஸ்திரி. The Colas Second Edition (revised), 1955, p. 502.

37. ஊரில் வாழும் மக்கள் சபையாருக்கு கொடுக்க வேண்டிய வரி முதலான கொடுப்பனவுகளைச் சேகரிக்கும் பணிமகனை 'நம்மூர் தண்டும் மானி' என்று சாசனங் குறிப்பிடுகிறதென்று கருத முடிகின்றது. 'கிராம சபையார் பணித்தவற்றைச் செய்யும் பணிமக்கள், மத்தியஸ்தன், கரணத்தான், பாடிகாப்பான், தண்டுவான் (தண்டல்), அடிக்கீழ் நிற்பான்' ஆகியோர் என்று தி.வை சதாசிவ பண்டாரத்தார் கூறுவதும் இங்கு கவனித்தற்குரியது. பிற்காலச் சோழர் வரலாறு, 1974, ப. 501.

38. SII, Vol. VI : No. 267.

39. திருக்கோணஸ்வரத்தை மச்சகேஸ்வரம் என்று குறிப்பிடும் வழக்கம் அண்மைக் காலம்வரைக் கிழக்கிலங்கையிற் காணப்பட்டது.

# திருக்கோணேஸ்வரத்திற் சோடகங்கன்

## திருகோணமலைக் கோட்டையிலுள்ள சமஸ்கிருத சாசனம்

சிலாசாசனத் துண்டமொன்றை 1945 ஆம் ஆண்டிலே திருகோணமலைக் கோட்டைக்குள் இராணுவத்தினர் கண்டெடுத்தனர். நிலத்தை அகழ்ந்து வெட்டிய போது அதுவும் மகாவிஷ்ணுவின் கற்சிற்பம் ஒன்றும் இலக்குமியின் படிமமுங் கிடைத்தன.[1] சிலாசாசனத்தின் இடப்பக்கத்தில் அலங்கார வேலைப்பாடுகள் உள்ளன. வலப்பக்கத்திற் சாசனம் வெட்டப்பட்டுள்ளது. எழுத்துக்கள் பொறிக்கப்பெற்ற கல்லின் ஒரு பகுதிவெட்டுப்பட்டு அழிந்தொழிந்து போய்விட்டது.[2]

சாசனத்தின் வலப்பக்கத்து ஓரத்தில் அரைவட்ட வடிவிலான துண்டமொன்று வெட்டப்பட்டுள்ளது. அதனால் நான்காம், ஐந்தாம் வரிகளிற் கடைசியாகவுள்ள எழுத்துக்கள் அழிந்து விட்டன. அதனால் அவ்வரிகளிலுள்ள இறுதியான சொற்கள் என்னவாயிருந்தன என்றும் உறுதியாகச் சொல்லமுடியாது. இக்காரணத்தினாற் சாசனத்தின் வாசகத்தை முழுமையாகப் பெறமுடியவில்லை. எனவே அதனைப்பற்றிய விளக்கங்களும் சற்றுத் தெளிவற்றனவாகவே அமையும். தவறான விளக்கங்கள் தோன்றுவதற்கும் அது இடமளிக்கும்.

இந்தச் சாசனம் கிரந்த எழுத்துகளிலும் சமஸ்கிருத மொழியிலும் அமைந்துள்ளது. சமஸ்கிருத மொழியினை எழுதுவதற்குத் தமிழர் உருவாக்கிய வரிவடிவங்கள் கிரந்தம் எனப்படும். அது முற்காலத்தில் இலங்கையிலும், சொர்ணபூமி எனப்படும் பர்மா, தாய்லாந்து, சம்பா, சாவகம் முதலான தேசங்களிலுஞ் செல்வாக்குப் பெற்றிருந்தது. இராசகுமாரன் ஒருவன் திருக்கோணேஸ்வரத்திற் செய்த காரியமொன்றை வர்ணிக்கும் சாசன வாக்கியங்களை ஆலயத்து வேதியர்கள் அமைத்துக் கொடுக்க அவற்றை அங்கிருந்த சிற்பிகள் சிலாலேகஞ் செய்தனரென்று கருதலாம். சாசனத்திலுள்ள தகவல்களைச் செம்மையாகப் புரிந்து கொள்வதற்கு அதன் வாசகத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வது அவசியமாகும்.

## பரணவிதானவின் வாசகமும் விளக்கமும்

இச்சாசனத்தின் படிவத்தை ஆராய்ந்த சேனரத் பரணவிதான அதன் வாசகத்தை ஆராய்ச்சிக் குறிப்புகளோடு இலங்கைத் தொல்பொருள் திணைக்களத்து வெளியீடான சாசனத் தொகுதியொன்றில் வெளியிட்டனர்.

இச்சாசனம் முழுமையில் நான்கு அடிகளைக் கொண்ட செய்யுள் என்றும், அது சிரக்தரா அணியில் அமைந்ததென்றும் அதன் முதலிரு வரிகளுமே சாசனப் பகுதியிலுள்ளன என்றும் அவர் கருதுவர். இச்சாசனத்தை அவர் மேல்வருமாறு வாசித்து மொழிபெயர்த்துள்ளார் :

சாசனத்தின் வாசகம்

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ தேவ : ஸ்ரீ சோ
(2) டகங்க : க்ஷிதிதல தில
(3) காம் ப்ராப்ய லங்காம் அஜ
(4) ய்யாம் சாகேப் தே(த) (ச)
(5) ம்பு புஷ்பே க்ரிய பவ (டே)ன
(6) ரவௌ ஹஸ்தவே மே
(7) ஷ லக்நே கோகர்ண்ணே...... [3]

## மொழிபெயர்ப்பு

" மங்கலம் பொலிக! சகாப்தம் சம்புபுஷ்ப வருஷத்திலே இரவி மேடத்தில் நிற்க, அத்த நஷத்திரம் (சந்திரனோடு, மேட இலக்கினத்திற் கூடிய வேளையில் மேன்மை பொருந்திய சோடகங்கதேவ (ன்) பூலோக திலகமானதும் வெல்லுதற்கு அரிதானதுமான, இலங்கைக்கு வந்து கோகர்ணத்திலே....."

சாசனத்தின் வாசத்தை விளக்குமிடத்துப் பரணவிதான மேல்வருமாறு எழுதுகின்றார்:

" சாசனம் துண்டமாயிருப்பதால் அது என்ன நோக்கத்துடன் எழுதப்பெற்றது என்பதைக் கூறமுடியவில்லை. அதன் எஞ்சியுள்ள பகுதி சோடகங்கதேவ என்னுந் நாமத்து இளவரசன் ஒருவன் இலங்கையில் வந்திறங்கிய நேரகாலத்தைக் குறிப்பிடுகின்றது. சக வருஷமான ஆண்டு சொற்குறிப்பால் உணர்த்தப்படுகின்றது. அதன் முதலெழுத்து அழிந்துவிட்டது... ம்பு புஷ்பே என்னும் மூன்று அக்ஷரங்களே காணப்படுகின்றன. ஆண்டினைக் குறிக்கும் சொற்றொடரைச் சம்பு புஷ்பே என்று வாசிக்குமிடத்துச் சாசனங் குறிப்பிடும் சக வருஷத்தை 1145 என்று எம்மாற் கொள்ள முடிகின்றது. எமது ஆவணம் சக வருஷத்தைச் சொல்வதோடு சோடகங்கன் எத்தினத்திலே இலங்கைக்கு வந்தான் என்பதையுஞ் சொல்கின்றது. அன்று சூரியன் மேடராசியில் நின்றது. இலக்கினம் மேடமாயிருந்தது. நஷத்திரம்

அத்தமாகும். இத்தகவல்களின்படி சோடங்க தேவன் கி.பி. 1223ஆம் ஆண்டு சித்திரை மாதம் 14ஆம் திகதி காலை இலங்கைக்கு வந்தான்.

" சாசனங் குறிப்பிடும் காலம்பற்றிய விபரங்கள் கலிங்க மாகன் இலங்கையில் வடக்கிலுள்ள அரைவாசிப் பாகத்திற் கொடுங்கோல் ஆட்சி செலுத்திய காலத்தில் அடங்கி விடுகின்றன. .... அவன் சாசனமொன்றை நிறுவியுள்ளதால் ஒரு சொற்ப காலத்துக்காயினும் சோடகங்கதேவன் திருகோணமலைத் துறைமுகத்தைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான் என்றும் அவன் தனது வெற்றியைக் கொண்டாடும் வண்ணமாகச் சாசனம் எழுதப்பட்ட கதவுநிலை வைக்கப்பட்டிருந்த கோயிலுக்குத் தானம் வழங்கினான் என்பதும், இப்பிராந்திரயங்கள் 16ஆம் நூற்றாண்டிற் போர்த்துக்கேயர் வசமாகியதும் அக்கோயில் அழிக்கப்பட்டிருத்தல் கூடும் என்பதும் உணரப்படுகின்றன.

" இச்சிலாலேகமான கதவு நிலைத் துண்டம் அதற்குரிய கோயிலின் தலத்திலே காணப்பெற்றது என்று கொள்வது நியாயமானதே. சாசனங் குறிப்பிடுங் கோகர்ணம் என்னும் இடப்பெயர் 13ஆம் நூற்றாண்டிலே நவீன காலத் திருகோணமலைக்கு உரியது என்று கொள்வதும் அத்தகைப் பொருத்தமானதாகும். கோயிலும் அங்கிருந்ததாகும். "[4]

திருகோணமலைக் கோட்டையிலுள்ள சாசனம் பற்றிப் பரணவிதான கூறுவனவற்றுள் மேல்வரும் கருத்துக்கள் இடம்பெறுகின்றன. (1) அது கோயிற் சாசனம்; தான சாசனம், (2) சோடகங்கதேவன் சகாப்தம் சம்புபுஷ்ப வருஷமான கி.பி. 1223 இல் ஏப்ரல் மாதம் 14ஆம் திகதி காலையில் இலங்கையை அடைத்தான், (3) சாசனத்தைச் சோடகங்க தேவனே நிறுவினான், (4) சோடகங்க தேவனின் வெற்றியினைக் கொண்டாடும் வண்ணமாக அவன் கோயிலுக்கு வழங்கிய தானங்களைச் சாசனம் பதிவு செய்தது, (5) சிலாலேகமான கதவுநிலைப் பகுதி கோகர்ணத்துச் சிவாலயமான திருக்கோணேஸ்வரத்துக்கு உரியதாகும். இக் கருத்துகளிற் சில பொருத்தமானவை; வேறுசில ஆதாரமற்றவை. பொதுவாகப் பரணவிதானவின் வித்துவப் புலமையில் அபிமானமும் நம்பிக்கையுங் கொண்டவர்களான இலங்கை நாட்டு அறிஞர் பலரும் இச்சாசனம் பற்றி அவர் கூறிய முடிபுகளை ஆராய்வு நோக்கின்றி ஒப்புக்கொள்ளலாயினர். சோடகங்க தேவனைப் பற்றி ஆராய முற்பட்டவர்களுக்கு இச்சாசனம் பற்றி அவர் கூறும் விளக்கம் ஒரு பொறியாக அமைந்து விட்டது. சமஸ்கிருத மொழிப் பயிற்சியும் சாசன வழக்காறுகளைப் பற்றிய தெளிவும் புரிந்துணர்வும் இல்லாதவர்களை அப்பொறியிலிருந்து மீட்டுக் கொள்வது இமாலயப் பிரயத்தனமாகிவிடும்.

# சாசனத்தின் அமைப்பும் பொருளும்

திருகோணமலைக் கோட்டையிலுள்ள சமஸ்கிருத சாசனத்தின் வாசகம் நிறைவு பெறாதவொரு வசனப் பகுதியாகும். சாசனஞ் செய்யுள் வடிவில் அமைந்தது என்றுஞ் சொல்லப்படுகின்றது. பாட்டியல் மரபுகளுக்கு ஏற்பச் சாசனச் செய்யுள்களில் அணியலங்காரங்கள் காணப்படுவதும் வழமை. சாசனத்தின் எஞ்சியுள்ள பாகத்திலுஞ் சில எழுத்துக்கள் அழிந்துவிட்டன. சோடகங்கன், புஷ்பக்கிரியை, காலம், நேரம் என்பன பற்றிய குறிப்பு, கோகர்ணம் ஆகியனவே தெளிவாகத் தெரிகின்ற விடயங்களாகும்.

சாசன வாக்கியத்தில் எழுவாய் மட்டுமே தெளிவாக உள்ளது. செயப்படுபொருள் தெளிவில்லை. பயனிலை பற்றிய பகுதி கிடைக்கவில்லை. எனவே சோடகங்கன் புரிந்த ஏதோவொரு செயலைப் பற்றியதாகவே இச்சாசனம் அமைத்தது என்பது மட்டும் உறுதியானது. அவன் என்ன செய்தான்? எப்போ அதனைச் செய்தான்? எங்கு செய்தான் என்னும் வினாக்கள் இயல்பாகவே எழுகின்றன. இவற்றுள் மூன்றாவது வினாவிற்கான விடை சாசனத்தின் இறுதி வரியிலுள்ள கடைசிச் சொல்லால் உணரப்படுகின்றது. கோகர்ணே என்ற அச்சொல்லானது கோகர்ணம் என்பதன் இடவேற்றுமை விகாரமாகும். தென்கைலாசமான கோணேஸ்வரம் என்னுந் தலமானது கோகர்ணம் என்னும் பெயராலும் வழங்கியது என்பது கைலாசபுராணம் போன்ற நூல்களினால் அறியப்படுகின்றது. கோணேசர் கோயிலுக்குச் சோடகங்கன் வழங்கிய தானங்களைச் சாசனம் பதிவு செய்திருந்ததென்று பரணவிதான கூறியுள்ளமையும் இங்கு குறிப்பிடற்குரியது. அவருக்குப் பின் பதவி பெற்ற தொல்லியலாளர் சிலரைப் போலன்றிப் பரணவிதான இவ்விடயந் தொடர்பாக அறிஞர் ஒருவருக்கு வேண்டிய நிதானத்தைக் கடைப்பிடித்தனர்.

சாசனத் தொடரை அடிப்படையாகக் கொண்டு நோக்குமிடத்துச் சோடகங்கன் இலங்கையை அடைந்த பின் கோகர்ணத்தில் ஏதோ செய்தான் என்பதே முதலாம் வினாவிற்குரிய விடையாகும். லங்காம் ப்ராப்ய, 'இலங்கையை அடைந்து' என்ற தொடரிலுள்ள ப்ராப்ய என்ற சொல் ப்ராப் என்னும் வினையடியாகத் தோன்றிய வினையெச்சமாகும். ப்ராப் என்ற சொல் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்தை அடைவதை மட்டுமன்றி அதிகாரம், பதவி, போகம், செல்வம் முதலியவற்றை அடைவதையுங் குறிக்கும்.

க்ஷிதிதல திலகாம் ப்ராப்ய லங்காம் அஜய்யாம் என்ற சாசனத் தொடர் சோடகங்கனைப் பற்றிய அடைமொழியாகும். அவன் வெற்றியாளன் ஒருவன் என்பது இவ்வடை மொழிகளால் உணரப்படும். அவனுடைய பராக்கிரமத்தைப் புலப்படுத்துவதற்கே இலங்கையினைப் பூலோகதிலகம் என்றும் வெல்லுதற்கு

அரிதான பூலோகதிலகம் என்றும் உயர்வுநவிற்சி அணியிற் சாசனம் வர்ணிக்கின்றது. ப்ராப்ய என்ற வினையெச்சத்துடன் முடியும் தொடர் சோடகங்கன் இலங்கையை " அடைந்த" பின்பு கோகர்ணத்திலே புரிந்த செயலைச் சாசனம் பதிவு செய்திருந்தது என்பதை உணர்த்துகின்றது. எனவே அதிற் காணப்படும் காலம், நேரம், பற்றிய குறிப்புகள் சாசனவாக்கியத்தின் பயனிலையோடு தொடர்புடையனவாகும். அவை கோகர்ணத்திற் சோடகங்கன் புரிந்த செயலைப் பற்றியனவாதல் வேண்டும். அவை சோடகங்கன் இலங்கையினை அடைந்த காலத்தைப் பற்றியவை என்ற பரணவிதானவின் விளக்கம் தவறானது; ஆதாரமற்றது. இச்சானம் தானசாசனம்: அது ஜயஸ்தம்பமன்று.

## சோடகங்கனும் கலிங்க மாகனும்

திருகோணமலைக் கோட்டையிற் காணப்பெற்ற சாசனம் சோடக்ங்கனைத் தேவஸ்ரீ என்ற அடைமொழிகளுடன் குறிப்பிடுகின்றது. செய்யுள் வடிவில் அமைந்ததான இச்சாசனம் அவனை ஒரு வீரனாகவும், வெற்றியாளனாகவும் உயர்வு நவிற்சியோடு நயம்பட வர்ணிக்கின்றது. ' வெல்லுதற்கு அரிதான இலங்கை'யை அவன் அடைந்துள்ளான் என்றும் அதிற் சொல்லப்படுகின்றது. அத்தகைய இலங்கையை அவன் எவ்வாறு அடைந்தான் என்பதைப் பின்பு கவனிப்போம்.

இச்சாசனங் குறிப்பிடும் சோடகங்கனை அடையாளங் காண்பது இலகுவானதன்று. அதே போல அவனுடைய காலத்தை நிர்ணயிப்பதும் சுலபமானதன்று. அவன் கி.பி. 1223 ஆம் வருஷத்திலே, மாகனுடைய ஆட்சிக் காலத்திலே, இலங்கையை அடைந்தான் என்று பரணவிதான கூறுவது தவறானது. அக்கருத்துச் சாசனம் பற்றி அவர் கொண்டிருந்த பிழையான விளக்கத்தினால் எழுந்தது.

சோழகங்கன் என்னும் பெயர் கொண்ட அரசகுலத்தவர் பலரும் பிரதானிகள் பலரும் தென்னிந்தியா, கலிங்கம், இலங்கை ஆகியவற்றில் இருந்தனர். சோடகங்கன் என்பது தமிழ் மூலங்களிலே சோழகங்கன் என வரும் பெயரின் தெலுங்கு வடிவமாகும். முதலாம் இராஜேந்திர சோழன் காலம் முதலாகவே சோழகங்கன் என்னும் பெயர் வழக்கில் வந்தது. அவன் சோழகங்கம் என்னும் ஏரியினை ஜலமயமான ஜயஸ்தம்பமாக அமைத்தானென்று திருவாலங்காட்டுச் செப்பேடுகளிற் கூறப்பட்டுள்ளது[5] சோழகங்கம் என்னும் மகத்தான ஏரியைக் கட்டியவன் என்ற காரணத்தாற் சோழகங்கன் என்பது கங்கைகொண்ட சோழனைக் குறிக்குஞ் சிறப்புப் பெயராகவுங் கொள்ளத் தகுந்தது.

இராஜேந்திர சோழனுடைய குமாரர்களுள் ஒருவனைக் கங்கபாடியான முடிகொண்ட சோழமண்டலத்தின் அரசனாக முடிசூட்டிய பொழுது அவனுக்குச் சோழகங்கன் என்னும் பட்டப்பெயரைச் சூட்டினார்கள்.[6] அது அரச பதவியைக் குறிக்கும் பட்டமாயிருந்தது; கங்கபாடி நாட்டு அரசனாகிய சோழன் அப்பட்டத்திற்கு உரியவானானான். அந்த வகையில் அது சோழபாண்டியன், சோழ இலங்கேஸ்வரன் சோழகேரளன் என்னும் பட்டங்களை ஒத்ததாகும். முதலாங் குலோத்துங்க சோழனின் மகனாகிய ராஜராஜ சோடகங்கன் சிலகாலம் வேங்கி தேசத்திலே இராசப்பிரதிநிதியாக அதிகாரஞ் செலுத்தினான் (1084–1088). அவன் மகேந்திர பர்வதம் வரையுள்ள பகுதிகளில் அதிகாரஞ் செலுத்தினானென்று சொல்லப்படுகின்றது. [7]

கலிங்க தேசத்துக் கங்க வம்சத்தவரிற் சிலர் சோடகங்க(ன்) என்னும் பெயரைக் கொண்டிருந்தனர். சோழ இளவரசியான இராஜசுந்தரியின் மகனாகிய அனந்தவர்மன் சோடகங்கன் அவர்களுட் சிறப்பு மிக்கவன்.[8] சோழகங்கன், சோழகங்கதேவன் என்பன பிற்காலச் சோழரதும், பாண்டியரதும் நிர்வாகசேவைகளிற் பணிபுரிந்த பிரதானிகள் பலரின் பெயர்களாயிருந்தன. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியிற் காலிங்கராயன், சோழகங்கதேவன் என்னும் பாண்டியப் பிரதானிகள் இருவர் இலங்கைமேற் படையெடுத்துச் சென்றனர்.[9]

இலங்கையிற் பொலநறுவைக் காலத்திற் சோடகங்க(ன்) என்னும் பெயருள்ள கலிங்க தேசத்துக் கங்கவம்சத்து இளவரசர் இருவர் இருந்தனர். பொலநறுவைக் காலத்து அரசர் கலிங்க தேசத்தவரோடு ஏற்படுத்திய மணத்தொடர்புகளின் விளைவாக இலங்கையிற் கலிங்கத்தவரின் செல்வாக்கு ஏற்பட்டது. முதலாம் விஜயபாகு (1055–1110) கலிங்க தேசத்து இளவரசியான திரிலோக சுந்தரியினைத் தன் தேவியாகக் கொண்டிருந்தான். அவளோடு கூடி வந்த இளவரசர் மூவரும் அவர்களின் சகோதரியான சுந்தரியும் பொலநறுவையிற் தங்கிவிட்டனர்.

பொலநறுவை அரண்மனையிலிருந்த கலிங்கரிற் சிலர் சைவாபிமானங் கொண்டோராய் இருந்தனர். திரிலோகசுந்தரியின் சமயாசாரங்கள் சில சமயங்களிற் பௌத்த சங்கத்தாரின் வெறுப்பைத் தேடிவிட்டன. திரிலோகசுந்தரியின் மகனாகிய விக்கிரமபாகு சைவசமயச் சார்புடையவனாகவே அரசுபுரிந்தான். அவனுக்குச் சுந்தரி என்னும் அரசகுமாரியை மணம் முடித்து வைத்தனர். அவர்களின் குமாரனாகிய இரண்டாங் கஜபாகு (1132–1153) சைவசமயச் சார்புடையவனாக விளங்கினான். கைலாசபுராணத்துச் திருநகரச்சருக்கம் அவனது திருக்கோணேஸ்வரத் திருப்பணிகளைச் சிறப்பித்துக் கூறுகின்றது. [10]

கோணேசர் கல்வெட்டிலும் அவனைப் பற்றிப் பல குறிப்புகள் உள்ளன. அவனுடைய காலத்திற் சோழகங்க குமாரன் என்ற இளவரசன் ஒருவன் அரண்மனையில் இருந்தான். [11]

முதலாம் பராக்கிரமபாகுவின் (1153–1186) பின் பொலநறுவையில் ஆட்சி புரிந்த அரசருட் பலர் கலிங்க தேசத் தொடர்புடையோராவர். அவர்களுட் பெரும்பாலானோர் நிசங்கமல்லனின் (1187–1196) நெருங்கிய உறவினராவர். நிசங்கமல்லனின் பட்டத்தரசியான கல்யாணவதி கங்கவம்சத்தைச் சேர்ந்த ஒருத்தி (கங்கவம்ச கல்யாணா) என்று அவனுடைய சாசனங்கள் குறிப்பிடுகின்றன. நிசங்கமல்லனின் மருமகனாகிய சோடகங்க(ன்) என்பவன் கி.பி. 1196 ஆம் ஆண்டில் நிசங்கமல்லனின் தம்பியான விக்கிரமபாகுவைக் கொலை செய்து விட்டு அரசபதவியைக் கைப்பற்றியிருந்தான். [12] ஒன்பது மாதங்கள் (1196–1196) அவன் அரசனாக விளங்கினான். கீர்த்தி என்ற சேனாதிபதி சோடகங்கனைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டுப் பராக்கிரமபாகுவின் பட்டத்தரசியான லீலாவதியை முடிசூட்டுவித்தான்.

திருகோணமலைக் கோட்டையிலுள்ள சாசனங் குறிப்பிடுஞ் சோடகங்கன் பொலநறுவையிலிருந்த இராசகுமாரர்களிலிருந்தும் வேறுபட்டவன் என்றும் அவன் மாகன் இலங்கையின் வடபகுதியினை ஆட்சி புரிந்த காலத்திலே, கி.பி. 1223 இல் இலங்கையை அடைந்தவன் என்றும் பரணவிதான கூறுவர். சாசனத்தை ஆறுதலாக ஆராய்ந்து செம்மையாகப் புரிந்து கொள்ளாதமையால் அவர் இம்முடிபுகளைக் கொண்டனர்.

## *சாசனத்திற் சகாப்தம் இல்லை*

பரணவிதான தனது கருத்துக்கு ஆதாரமானவை என்று எண்ணிய விடயங்களை இங்கு ஆராய்வது அவசியமாகின்றது. சாசனத்தின் நாலாம் வரியின் இரண்டாஞ் சொல்லைச் சாகேப் பே(த) என வாசித்து அது சக வருடத்தைக் குறிக்கின்றது என்று கொண்டுள்ளனர். அவரின் விளக்கமானது பொருத்தமற்றதாயின் சோடகங்கன் கி.பி. 1223 க்குச் சரியான சக வருடத்தில் இலங்கைக்கு வந்தான் என்ற கருத்து ஆதாரமற்றதாகி விடும்.

சக வருஷத்தைக் குறிக்குஞ் சொல் சாசனவாசகத்தில் இடம்பெற்றிருக்குமாயின் அது கல்லிற் சகாப்தே (சக+அப்தே= சகவருடத்தில்) என்றே எழுதப்பட்டிருத்தல் வேண்டும். சில சமயங்களிற் ச என்னும் அஷரத்தை

சா என்று தவறாக எழுதியிருத்தல் கூடும். அவ்வாறாகிற் சாகாப்தே என்ற வடிவமே சாசனத்தில் இருத்தல் வேண்டும். ஆனால், இங்கு இரண்டாவது அஷரமும் மாறுபட்டு கா என்பதற்குப் பதிலாக கே என்று இருக்கின்றது.

இச்சொல்லின் இறுதியிற் காணப்படும் எழுத்திலே தகரவர்க்கத்து மெல்லொலியன்களில் முதலாவது எழுத்தைக் குறிக்கின்ற அஷரத்தின் அடையாளமேதுங் கல்லிற் காணப்படவில்லை. அதனாற் பரணவிதான சாகேப் (த) என அடையாளங் கண்டு கொண்ட சொல்லின் கடைசி எழுத்தினை அடைக்குறிப்பினுள் அமைத்துள்ளனர். தாங் கருத்திற் கொண்ட ஒரு சொல்லின் எல்லா அஷரங்களையும் சாசனத்தை எழுதியவர்கள் பிழையாகவே அமைத்து விட்டனர் என்று கொள்வது பொருத்தமற்ற வொன்றாகும். சாகேப் (த) என்று பரணவிதான கருதிய சொல் உண்மையில் வேறொன்றாதல் வேண்டும். எனவே, சாசனத்தின் நாலாம் வரியிலுள்ள சொல் பரணவிதானவினாற் பிழையாக வாசிக்கப்பட்டுள்ளது என்பதே அதைப்பற்றிய நிதானமான விளக்கமாகும். சாசனத்திற் சகாப்தம் குறிப்பிடப்பட்டுள்ளது என்று கொள்வதற்கு எந்தவிதமான ஆதாரமும் இல்லை. அது சாசனத்தின் வாசகத்திலே காணப்படாத ஒன்று; பரணவிதானவின் கற்பனையில் எழுந்தது. எனவே சோடகங்கன் சகாப்தம் **1145**இல் இலங்கையினை அடைந்தான் என்ற பரணவிதானவின் கருத்தை ஆதாரமாகக் கொண்டு சோடகங்கனைப் பற்றி ஆராய்ச்சிகளை மேற்கொள்வது கற்பனையிற் கோபுரங் கட்டுவது போலாகும்.

பரணவிதான சாகேப் (த) எனப் பிழையாக வாசித்த சொல் சரகேளே என்பதாகும். அது சரகேளி என்ற சொல்லின் விகாரமடைந்த வடிவமாகும். சர, கேளி என்னும் சொற்களின் சேர்க்கையால் உருவாகியதே சரகேளி என்னும் மொழியாகும். இவ்விரு சொற்களும் முறையே அம்பு, வேட்டை என்ற கருத்துக்களை உடையவை. 'அம்புவேட்டை' எனச் செய்யுள் வடிவிலமைந்த இச்சானங் குறிப்பிடுவது போராகும். சரகேளே என்ற சொல்லானது சாசனத்தின் முற்பகுதியிலே சொல்லப்படும் விடயங்களோடு தொடர்புடையதாகும்.

முன்னே கூறியவற்றின் அடிப்படையிற் சாசனத்தின் முதல் நான்கு வரிகளின் வாசகத்தையும் அவற்றின் தமிழாக்கத்தையும் மேல்வருமாறு அமைத்துக் கொள்ளலாம்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ தேவ; ஸ்ரீ சோ
2. கங்க; க்ஷிதிதல தில
3. காம் ப்ராப்ய லங்காம் அஜ
4. ய்யாம் சரகேளே

"மங்கலம் பொலிக தேவ ஸ்ரீ சோடகங்கன் பூலோகதிலககமானதும் வெல்லுதற்கு அரிதானதுமான இலங்கையை அம்புவேட்டையிற் கைப்பற்றி....." சோடகங்கனின் போராற்றலைச் சிறப்பிக்கும் வண்ணமாக இலங்கையை லங்காம் அஜய்யாம் "வெல்லுதற்கு அரிதான இலங்கை என்று சாசனத்தில் வர்ணித்துள்ளனர்.

சாசனத்திலே சகாப்தம் இல்லையென்பதாலும், சோடங்கன் போரில் இலங்கையைக் கைப்பற்றினான் என்று கொள்ளத்தக்க வகையிற் சாசனம் அமைந்திருப்பதினாலும் சாசனம் அவன் இலங்கையினை அடைந்த நேரகாலத்தைக் குறிப்பிடுகின்றது என்ற பரணவிதானவின் விளக்கமும், அது சகாப்தம் சம்புபுஷ்பமான கி.பி. 1223 ஏப்ரல் மாதம் 14 ஆம் திகதி காலை என்ற அவரின் முடிபும் பொருத்தமற்றனவாகி விடுகின்றன. நேரகாலம் பற்றிச் சாசனத்திலே கூறப்பட்டுள்ள செய்திகள் கோகர்ணத்து ஆலயத்திலே சோடகங்கன் புரிந்த செயலொன்று பற்றியனவாகவே கொள்ளத்தக்கவை.

## (ச)ம்பு புஷ்பக் கிரியை

புஷ்பக் கிரியை ஒன்றினைப் பற்றிச் சாசனங் குறிப்பிடுகின்றது. புஷ்பே க்ரிய என்ற தொடருக்கு அடைமொழியாகவுள்ள சொல்லில் ம்பு என்னும் எழுத்துக்கள் மட்டுமே உள்ளன. அச்சொல்லின் முதலெழுத்து சாசனத்தின் நான்காவது வரியின் இறுதி அக்ஷரமாகவிருந்து கல்லு வெட்டப்பட்டதன் காரணமாக மறைந்து விட்டது. மறைந்து போன அந்த எழுத்து சகரமாகவோ அகரமாகவோ அமைந்திருத்தல் வேண்டும். அதனைச் சகரமாகக் கொள்ளுமிடத்து ஐந்தாம் வரியிலுள்ள எழுத்துகளைச் (ச)ம்பு புஷ்பே க்ரிய என்று வாசிக்கலாம். நான்காவது வரியிலிருந்து மறைந்துபோன எழுத்தினை அகரமாகக் கொள்ளின் (அ)ம்பு புஷ்பே க்ரிய என்று அச்சொற்களை வாசிக்கலாம்.[13]

இச்சமயத்திலே இச்சொற்களைப் பரணவிதான விளக்குமாற்றைக் கவனிப்பது அவசியமானதும் சுவாரஸ்யமானதுமாகும். தான் வாசித்து வெளியிட்ட சாசன வாசகத்திலே புஷ்பே க்ரிய என்ற தொடரைக் குறிப்பிடும் பரணவிதான சாசனத்தின் மொழிபெயர்ப்பிலும் அதனைப் பற்றிய விளக்கத்திலும் க்ரிய என்ற சொல்லைக் கருத்திற் கொள்ளாது தள்ளிவிட்டு சம்புபுஷ்ப என்பதை ஒரு வருஷத்தைக் குறிக்கும் பெயராகக் கொண்டனர். இந்திய சோதிட பஞ்சாங்க முறையில் 60 வருடங்களில் ஏதாவது ஒன்றுக்கேனும் சம்பு புஷ்ப என்ற பெயரில்லை. 1145 என்னும் இலக்கத்தைத் தற்குறிப்பாக உணர்த்தும் வர்ணனையாகவே சம்பு புஷ்ப அமைகின்றது என்று அவர் கொள்வர்.

சரகேளே என்ற சொல்லைச் சாகேப்(தே) எனப் பிழையாக அடையாளங் கண்டு அது சகவருஷத்தைக் குறிப்பதாகத் தவறாகப் புரிந்து கொண்டமையால் அவர் சம்பு புஷ்பே என்பதை ஒரு வருஷமென்று கொள்ள நேர்ந்தது. அதனை வருஷமென்று கொண்டதனால் சம்பு புஷ்பே என்ற தொடரோடு கூடிவரும் க்ரிய என்ற சொல்லை விளக்காது தட்டிக் கழிக்கவேண்டிய இக்கட்டான நிலை அவருக்கு ஏற்பட்டது. சாசனத்திலே சகாப்தம் என்ற சொல் இல்லாத படியாற் சம்புபுஷ்ப என்பது ஒரு வருஷம் என்பது வெறுங்கற்பனையாகும். க்ரிய என்ற சொல் அதனைத் தொடர்ந்து வருவதாற் சப்புபுஷ்பே க்ரிய என்னுந் தொடரானது கோயில்களில் நிகழும் கிரியை ஒன்றினைக் குறிக்கின்றது என்று கொள்வதே பொருத்தமானது.

நான்காவது வரியிலிருந்து மறைந்து போன எழுத்தினைச் சகரமாகக் கொள்வோமாயின் குறிப்பிட்ட மொழித்தொடரினைச் சம்பு புஷ்பே க்ரிய என்று கொள்ளவேண்டும். அது சிவனான சம்புவிற்கு மலர் கொண்டு செய்யும் பூசையினைக் குறிக்கும். புஷ்பாபிஷேகம் என்னும் கிரியை ஒன்றும் கோயில்களில் நடைபெறுவதுண்டு. சயதரனான முதலாங் குலோத்துங்க சோழன் கச்சி ஏகம்பத்திலே புஷ்பாபிஷேகம் செய்வித்தமை பற்றிச் சாசனக் குறிப்புண்டு.[14] மறைந்து போன எழுத்தை அகரமாகக் கொள்ளின் அம்பு புஷ்பேக் க்ரிய என்று சாசனத் தொடரை வாசிக்க முடியும். அது தாமரை மலர் கொண்டு செய்கின்ற பூசையாகும். ஆயினும் நிலாவெளிக் கல்வெட்டிலே கோணபர்வதம் திருகோணமலை என்ற சொற்களுக்கு முன்னதாகச் சிவபெருமானைக் குறிக்கும் சம்பு என்ற சொல் வருவதாற் சோடகங்கனைக் குறிப்பிடும் சமஸ்கிருத சாசனம் சிவனாகிய சம்புவிற்கு மலர்கொண்டு செய்யப்படுகின்ற பூசையினையே வர்ணிக்கின்றது என்று கொள்வது சாலப் பொருந்தும்.[15]

## சித்திரையில் அந்தத் திருநாள்

'பூலோக திலகமானதும் வெல்லுவதற்கு அரிதானதுமாகிய இலங்கையைப் போரின் பயனாக அடைந்த சோழகங்கன் கோகர்ணத்தில் ஏதோ செயல் புரிந்தான்.' "அவன் தனது வெற்றியைச் கொண்டாடும் வண்ணமாகச் சாசனம் எழுதப்பட்ட கதவு நிலையிருந்த கோயிலுக்குத் தானம் வழங்கினான் என்பதும் ..... உணரப்படுகின்றன" என்பது பரணவிதானவின் கூற்றாகும். அவரின் கருத்து இவ்விடத்திலே பொருத்தமானதாகவே காணப்படுகின்றது. அது ஏற்றுக்கொள்ளப்படுமிடத்துச் சாசனம் ஒரு தான சாசனம் என்பதும் அது ஒரு வெற்றித் தம்பம் அன்றென்பதும் ஒப்புக் கொள்ளப்பட வேண்டியனவாகும். அவ்வாறாயின் சாசனங் குறிப்பிடும் காலம், நேரம் பற்றிய செய்திகள் தானத்துடனோ அது சம்பந்தமான உற்சவத்துடனோ தொடர்புடையனவாதல் வேண்டும்.

சாசனத்தின் ஐந்தாம் வரியிலே பவ என்று கொள்ளத்தக்க எழுத்துக்கள் உள்ளன. பவ என்பது பஞ்சாங்கக் கணிப்பு முறையிலுள்ள 60 வருஷங்களில் ஒன்றன் பெயர் என்பதும் இங்கு கவனித்தற்குரியது. பவ என்பதன் பின் அமைந்திருந்து அழிந்து போன எழுத்துக்கள் வர்ஷே என அமைந்திருத்தல் வேண்டுமென்றுங் கொள்ளலாம். இச்சாசனங் குறிப்பிடும் வைபவம் மேடத்திற் சூரியன் நிற்குங் காலத்திலும் அத்த நக்ஷத்திரத்திலும் நடைபெற்றது. ஒவ்வொரு வருடத்திலுஞ் சித்திரை மாதத்திலே சூரியன் மேடத்தில் நிற்கும். எனவே அந்த நிகழ்ச்சியானது சித்திரை மாதத்து அத்தத் திருநாளில் நடைபெற்ற ஒன்றாகும். இச்சாசனத்திலே குறிப்பிடப்படுவது பவ வருஷம் என்ற அனுமானம் பொருத்தமுடையதெனிற் பவ வருஷத்துச் சித்திரை மாதத்தில் அத்த நக்ஷத்திரங் கூடிய தினத்திலே அந்நிகழ்ச்சி நடைபெற்றிருத்தல் வேண்டும். சம்புப் புஷ்பக் கிரியை, மேடராசி, அத்த நக்ஷத்திரம் ஆகிய எல்லாம் இடவேற்றுமை உருபுடன் வருவதாற் காலம், நேரம் என்பன பற்றிச் சாசனத்தில் வருங் குறிப்புகள் சம்பு புஷ்பகிரியை தொடர்பானவை என்பது உணரப்படுகின்றது.

கோயிற் சாசனங்கள் பெரும்பான்மையுந் தான சாசனங்களாகும். அவற்றிலே காலம், நேரம் என்பன பற்றிக் காணப்படுங் குறிப்புகள் தானம், உற்சவம் எனபன பற்றியனவாகவே உள்ளன. மேல்வருஞ் சாசனப் பகுதிகளினால் இது தெளிவாகின்றது :

1. "....... ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு 14 ஆவது மகர ஞாயற்று அபரபக்ஷத்துப் பஞ்சமியும் ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற அத்தத்து நாள் உடையார் திருக்கானப்பேருடைய நாயனார் கோயில் ஆதிசண்டேச்சர நாயனார் தேவகன்மிகளுக்கு...... இவ்வனைவோமும் பிடிபாடு பண்ணிக் குடுத்த பாரிசாவது........."

   காளையார் கோயில்

2. " ஸ்ரீ சங்கபோதி பர்மரான திரிபுவனச் சக்கிறவர்த்திகள் ஸ்ரீ விசயவாகு தேவற்கு ஆண்டு பத்தாவதில் தை மாதம் 20 (ஆம்) தியதி. சிவனான சங்கரன் கோயிலுக்குக் கொடுத்த வோவில்"

   திருக்கோவில்

3. "சகாப்தம் ஆயிரத்து முன்னூற்று அய்ம்பத்தேழின் மேல் செல்லாநின்ற இராக்ஷஸ ஸம்வத்ஸரம் கும்பனாயற்று பூர்வ பக்ஷத்து தசமியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழ வளநாட்டு குன்றத்தூர் நாட்டு

மணிமங்கலமான கிராமசிகாமணி சதுர்வேதி மங்கலத்து வண்டுபாராபதியெம் பெருமான் கோயிலில் தானத்தார் இம்மண்டலத்து .... திருவேளூரில் பதியுள்ளாரில் சிறுநாச்சியார் மகளார் பாட்டிமாநாச்சியாருக்கு சர்வமானியமாக நிலவிலைப் பிரமாணம் பண்ணிக் குடுத்தபடி".

மணிமங்கலம்

4. " ....... மதுரையும் ஈழமும் ..... கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவர்க்கு யாண்டு 26 ஆவது மீன நாயற்று பூர்வ பக்ஷத்து சத்தமியும் புதன்கிழமையும் பெற்ற மிருகசீரிஷத்து நாள் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து குன்றத்துக் கண்ணந்தை குப்பனேன் இம்மண்டலத்து குலோத்துங்கசோழ வளநாட்டு மணிமங்கலத்து உடையார் தன்மீஸ்வரமுடையார்க்கு வைத்த ஸந்தி விளக்கு இரண்டு

மணிமங்கலம்

5. "கும்பவியாழத்தில்க் கொல்லம் 389 தாமாண்டைக் கெதிராமாண்டு மீன ஞாயிறு 18 சென்ற வியாழமாண்ட பூசமுந் தெசமியும் மேடமும் ஆன்று கீழ்ப்பேரூர் ஸ்ரீ வீர இராமன் கேரளவர்மா திருவடி வேணாடு ஸ்ரீ வீர இராமானுமையம்மையான பிள்ளையார் திருவடி பிரதிட்டை பண்ணியருளியது....."

முன்னாலே மேற்கோளாகக் கொள்ளப் பெற்ற 5 சாசனத் தொடர்களி[illegible] காலம், நேரம் பற்றிய குறிப்புண்டு. அவற்றுள் நான்கு சாசனங்கள் தா[illegible] வழங்கப்பெற்ற சமயத்தைக் குறிப்பிடுகின்றன. ஐந்தாவது சாசனம் கேரள[illegible] அரசியின் படிமம் ஆலயத்திலே பிரதிட்டை பண்ணப்பெற்ற சமயத்தை குறிக்கின்றது. இவற்றின் அடிப்படையில் நோக்குமிடத்து திருகோணமலை[illegible] சாசனமானது ஸ்ரீ சோடகங்கன் கோகர்ணத்திலே புரிந்த செயலொன்றின் காலத்தைக் குறிப்பிடுகின்றது. சித்திரை அத்தத் திருநாள் அவனுடைய திருநக்ஷத்திரமாதலுங் கூடும்.

## முடிவுரை

திருகோணமலைக் கோட்டையிலுள்ள சமஸ்கிருதச் சாசனம் ஒரு வசனத்தின் குறைப் பகுதியினையே கொண்டுள்ளது. அது கவிநயத்துடன் சோடகங்கனை ஒரு வென்றியாளனாக வர்ணிக்கின்றது. அவன் 'வெல்லுதற்கு

அரிதான பூலோக திலகமான இலங்கை' யைப் போரின் பயனாக அடைந்த பின் கோகர்ணத்திலே புரிந்த செயலொன்றை வர்ணிப்பதாக அமைந்திருந்ததென்று கொள்ளலாம். சரகேளே என்ற சொல்லினை அடையாளங் காணமுடியாது சாகேப்(தே) என்று தவறாக அனுமானித்துக் கொண்டமையால் பரணவிதான பிழையாகச் சாசனப் பகுதியை விளக்கினார். சாசனத்திற் சகாப்தம் இல்லை. சகாப்தமில்லை என்பதால் சம்புபுஷ்ப என்பது ஒரு வருஷமாகாது. சாசனத்திலே கூறப்படுவது பவ வருஷமாகும். எனவே சோடகங்கன் சகாப்தம் 1145 இல் சித்திரை மாதம் 14 ஆம் திகதி அதிகாலை அத்த நக்ஷத்திரத்திலே இலங்கையை அடைந்தான் என்பது ஆதாரமற்ற கூற்றாகும்.

பவ வர்ஷம் சித்திரை மாதம் அத்த நக்ஷத்திரம் கூடிய சமயத்திலே கோகர்ணத்திலே சோடகங்கன் புரிந்த செயலொன்றைச் சாசனம் வர்ணிப்பதாயிருந்தது என்று கொள்வது பொருத்தமானதாகும். கோகர்ணம் என்பது கோணேசர் கோயில் அமைந்திருந்த தலமென்று கைலாச புராணம் முதலிய நூல்கள் கூறும். அது சைவசமய மரபிலே பாடல்பெற்ற தலமாகவும் யாத்திரைக்குரிய தலமாகவும் சிறப்புப் பெற்றிருந்தது. ஆதிகாலத்தில் அதன் புகழ் பரதகண்டத்திற் பரவியிருந்தமைக்கு வாயு புராணம் சான்றாயுள்ளது. மகேந்திர மலையிலுள்ள கோகர்ணசுவாமியைக் கலிங்க தேசத்துக் கங்கர் குலதெய்வமாகக் கொண்டிருந்தனர். கலிங்க வம்சத் தொடர்புடைய பொலநறுவைக் காலத்து இளவரசர் சிலர் தென்கைலாசமாகிய கோகர்ணத்தைத் தமது அபிமானத்துக்குரிய வழிபாட்டுத் தலமாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

சாசனங் கூறுங் சோடகங்கனை அடையாளங் காண்பது சுலபமானதன்று. அவன் சூளவம்சங் குறிப்பிடும் சோடகங்கர் இருவருள் ஒருவனா ? அவர்களினின்றும் வேறுபட்ட ஒருவனா ? என்பது சாசனத்திற் காணப்படும் பவ வர்ஷத்தைப் பொறுத்ததாகலாம்.

இதுவரை இங்கு அவதானித்த குறிப்புகளின் அடிப்படையிற் சாசனத்தின் வாசகத்தையும் அதன் மொழிபெயர்ப்பையும் மேல்வருமாறு அமைத்துக் கொள்ளலாம்:

## சாசனத்தின் திருந்திய வாசகம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ! தேவ ஸ்ரீ சோ
2. ட கங்க : க்ஷிதிதல தில
3. காம் ப்ராப்ய லங்காம் அஜ

4. ய்யாம் ஸரகேளே (ச)
5. ம்பு புஷ்பே க்ரிய பவ (வர்ஷே)
6. ரவொள ஹஸ்தவே மே
7. (ஷ) லக்நே கோகர்ண்ணே .............

## தமிழாக்கம்

மங்கலம் பொலிக. தேவ ஸ்ரீ சோடகங்கன் வெல்லுதற்கு அரிதான பூலோக திலகமான இலங்கையைப் போரில் வென்று, பவ (வர்ஷம்) சூரியன் மேடத்தில் நிற்க அத்த நக்ஷத்திரம் கூடிய வேளையிலே கோகர்ணத்திற் சம்புபுஷ்பக் கிரியையில் ....

## அடிக்குறிப்புகளும் விளக்கவுரைகளும்

1. வேலைப்பாடுகளின் அடிப்படையில் அச்சிற்பங்கள் 12 ஆம் நூற்றாண்டுக்குரியனவாகக் கொள்ளப்படுகின்றன. அவை கோணேஸ்வரத்துத் திருமால் கோட்டத்திலிருந்தன என்று கருதலாம். கோகர்ணத்திலே திருமால் கோட்டம் ஒன்றையும் குளக்கோட்டன் அமைத்திருந்தானென்று கைலாசபுராணங் கூறுவது குறிப்பிடத் தகுந்தது.

2. S. Paranavitana, " Fragmentary Sanskrit Inscription from Trincomalee", Epigraphia zeylaniea, Vol. V, No. 14, pp. 170-173.

3. மேலது

4. மேலது

5. South Indian Inscriptions (SII), Vol III, No. 205, தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1974, ப. 185.

6. N. Sethuraman, Chola Pandyan, Chola Gangan, Chola Iankesvaran, Chola Keralan, 1986.

7. The History and Culture of the Indian people Volume V : The Struggle for Empire, General Editor R.C. Mayumdar, Bharata Vidya Bhavaw, Bombay, 1957, p. 205.

8. இவனுடைய ஆட்சிக்காலம் கி.பி. 1078 – 1148 என்பதாகும். கலிங்கத்துப் பரணியில் வர்ணிக்கப்படும் கலிங்கப் போர் இவனுக்கெதிராக நடைபெற்றது. சோழப் படைகள் அனந்த வர்மனைப் போரில் வென்று பல செல்வங்களைக் கவர்ந்து சென்ற போதும் கலிங்க தேசத்தில் அவனுடைய ஆதிக்கம் தளர்ச்சியுற்றதாகத் தெரியவில்லை. புரியிலுள்ள பிரபலமான ஜகந்நாதர் கோயிற் கட்டிட வேலைகள் அனந்தவர்மனின் காலத்தில் ஆரம்பிக்கப் பெற்றவை.

கீர்த்தி மிக்க தெலுங்குக் கவிஞரான வீமகவி இவனுடைய ஆதரவைப் பெற்றிருந்தவர் என்பது ஐதீகம். கவிஜனாஸ்ரய என்னும் தெலுங்கு இலக்கண நூலும் திரக்ஷாராமத்து வீமேஸ்வரம் பற்றியதான வீமேஸ்வர புராணமும் இவரால் எழுதப்பெற்றவை. 'இராமாயண, பாரதக் கதைகளை இணைத்துக் கூறுவதான ராகவ பாண்டவீய என்னும் பெரு நூலையும் இவர் எழுதினார் என்பார்.

K.A. Nilakanta Sastri, **A History of South India, Fourth Edition,** Oxford University Press, Madras, 1976/ pp. 191 - 192.

9. சூளவம்சம் 90 : 32

10. ஸ்ரீ தக்ஷிண கைலாசபுராணம் பதிப்பு. பு.பொ. வைத்தியலிங்க தேசிகர், பரித்தித்துறை, 1916.

11. சூளவம்சம் 70 : 238

12. மேலது, 80 : 29

13. இவ்விடயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்கு பேராசிரியர் திருமதி மகேஸ்வரி அருள்செல்வம் அவர்களின் ஆலோசனைகள் பெரிதுங் துணையாக இருந்தன.

14. 12 ஆவது ஆண்டிற் கச்சி ஏகம்பத்திலே புஷ்பாபிஷேகம் செய்வித்த காலத்தில் இராஜகுருவின் வேண்டுகோளினால் விருதராஜபயங்கர சதுர்வேதிமங்கலத்தை அமைப்பித்து 108 சதுர்வேதி பட்டர்க்குக் குலோத்துங்க சோழன் கொடுத்தான். கர்நாடகத்து மைசூர் மாவட்டத்து அகர (ம்) என்னும் கிராமமும் வேறு ஊர்கள் இரண்டும் இப்பிரம்மதேயத்தில் அடங்கியிருந்தன. கச்சியேகம்பத்திலே புஷ்பக்கிரியை ஒன்றினைச் செய்வித்திருந்த சமயம் சோழச் சக்கரவர்த்தி சதுர்வேதிபட்டர்களுக்கு நிலதானங் கொடுத்தமை இங்கு கவனித்தற்குரியது.

K.A. Nilakanta Sastri, **The Colas,** vol II pt. 2, University of Madras, 1937, p. 583.

15. 'சாஸனம் சாஸ்வதம் சம்போ' என்ற மொழித் தொடர் அதிலே தெளிவாக உள்ளது. Karthigesu Indrapala, " A Tamil Slab Inscription from Nilaveli, Trincomalee District" James theva thasan Rutnam Felicitation Volume, Ed. Karthigesu Indrapala, Jaffna Archaeo logical Society, 1975, (Released July 1980, 158 pages) pp. 64- 69.

ஓம்

## ஆறாவது

# தருசனாமுத்திச் சருக்கம்

1. *உரைத்ததிரேதவுகந்தனிலிந்திரன் முதலோரும்* *(க)*
*வரைத்தலைவைகு மகத்தியனாதி வரத்தோருங்*
*கருத்துடன் விஞ்சையர்கின்னரர்சித்தர்கணத்தோரு*
*மருத்தியினாக [1] ஒரு ஆயிரகோடி யமர்ந்தோரும்*

*உரைத்த திரேத உகந்தன்னில், இந்திரன் முதலோரும்*
*வரைத்தலை வைகும் அகத்தியன் ஆதி வரத்தோரும்,*
*கருத்துடன் விஞ்சையர் கின்னரர் சித்தர் கணத்தோரும்,*
*மருத்தியினாக ஒரு ஆயிரகோடி யமர்ந்தோரும்*

*பொருள் : கூறிய திரேத காலத்தில்; இந்திரன் முதலிய தேவர்களும், கடவுள் முனிவன் அகத்தியனும், இமயத்திலும்- மற்றைய இடங்களிலும் வாழும் பழைமையும் பெருமையும்மிக்க தவநெறியாளர்களும், விஞ்சையர் கின்னரர் ஆகியவர்களும் சித்தர் கூட்டமும் மருத்து தேவர்களும் ஓராயிரகோடியினராகத் திருமலையிடத்துக் கூடினர்.*

2. *ஒரும்வேதகுலத்தொடு சுத்தோதனனோடுந்,* *(உ)*
*தேருமமர்ந்தானப் பெயர்மேவுதிறங்கோவுங்*
*கூருமையிருகோடியரக்கர்குலத்தோடு*
*மாருந்தென்கயிலைப்பெருமானையருச்சித்தார்.*

*ஒரும் வேதகுலத்தொடு சுத்தோதனனோடும்,*
*[2] தேரும் அமர்ந்தானப் பெயர்மேவும் திறங்கோவும்,*
*கூரும் ஐயிருகோடி அரக்கர் குலத்தோரும்,*
*ஆரும் தென்கயிலைப் பெருமானை அருச்சித்தார்.*

*பொருள் : தெளிந்த அறிவுடைய அந்தணர் குலத்தவரும், சுத்தோதனன் எனக் கூறப்பட்ட தலைவனும், விளக்கம் பெற்ற திக்குகளில் அமைவுபெற்ற திக்குப்பாலகரின் தலைவர்களும், நோக்குதற்கரிய பத்துக்கோடி அரக்கர் குலத்தவரும், தென்கயிலையில் எழுந்தருளிய சிவபெருமானுக்குப் பூசனை செய்தனர்.*

---

*பா.வே. 1 ஐயிருகோடி.* *2 தேரும்மந்தரனாம்.*

3. சித்தமகிழ்ந்தவருக்குவரங்கள் சிவன்[3]செய்ய (ங)
வித்தனையன் பரும்வந்தனையே செயுமிக்காலம்
கைத்தகுணத்தொரரக்கனிராத்திரிகரனீன்றான்
[4]மெய்தவமாயொரிராத்திரிகரியெனு மின்னாளை

சித்தம் மகிழ்ந்து அவருக்கு வரங்கள் சிவன் செய்ய,
இத்தனை அன்பரும் வந்தனையே செயும் இக்காலம்,
கைத்த குணத்து ஒரு அரக்கன் இராத்திரிகரன் ஈன்றான்,
மெய்த்தவமாய் ஒரு இராத்திரிகரி என்னும் இன்னாளை

பொருள்: தென்கயிலை வந்து வணங்கிய அனைவர்க்கும் மனம் மகிழ்ந்த சிவன்; வரங்கள் பல கொடுத்தான். அதனால், வந்த அடியவர்கள் அனைவரும் சிவனைப் போற்றி வணங்கினர். இவ்வேளையில் தீய குணத்தையுடைய கரன் என்ற ஒரு அரக்கன் தன் தவப்பேற்றின் பயனாய், கரி என்றபெயர் கொண்ட இனிய பெண்ணைத் தன் மகளாகப் பெற்றனன்.

4. மின்னோநுண்ணிடைபிடியோமென்னடைவிழியோவேல் (ச[1])
பொன்னோமேனிபொருப்போவன்முலைபுகுமாலோன்
மன்னோவாண்முகமயிலோசாயலிம்மடமாதின்
முன்னோவலதிவள்பின்னோவழகெனமுன்னின்றாள்.

மின்னோ நுண் இடை, பிடியோ மென்னடை, விழியோ வேல்,
பொன்னோ மேனி, பொருப்போ வன்முலை, புகும் °ஆலோன்
மன்னோ வாண்முக மயிலோ சாய லிம்மடமாதின்
முன்னோ- அலதிவள் பின்னோ, அழகென முன்நின்றாள்.

பொருள்: இவளது நுண்ணிய இடை மின்னலோ- மென்மை பொருந்தியநடையால் பெண்யானை போன்றவளோ- உடல் பொன்னால் உருவானதோ கண்கள் வேல்போன்றதோ- வன்மை பொருந்திய மலைக்குவடோ இவளது தனங்கள்- முகம், ஒளி பொருந்திய சூரியனோ- சாயல், மயில் போன்றதோ என வியப்புறும்படி; அவள் முன் அழகு சிறந்ததோ அன்றிப் பின் அழகு சிறந்ததோ என்னும் வண்ணம் நின்றாள்.

O ஆலோன் = சூரியன்

5. முன்னாளமுதத்துததியுதித்தாண்முளரிப்பெண் (ரு)
ணன்னாள்கன்னித்திருவுருவங் கண்டன்போடு
மின்னாளென்மகண்மணமகனெவனென்றீன்றோனுந்
தொன்னாள்வடகயிலைத்[5]தலையரனைத்தொழுதிட்டான்.

---

பா.வே. 3 நல்க. 4 மெய்த்தவமாமொருராத்திரி 5 தலையானை

*முன்னாள் அமுதத்து ° உததி உதித்தாள் முளரிப் பெண்,*
*அன்நாள் கன்தித் திரு உருவம் கண்டு அன்போடு,*
*இந்நாள் என்மகள் மணமகன் எவன் என்று ஈன்றோனும்,*
*தொன்னாள் வடகயிலைத் தலையரனைத் தொழுதிட்டான்*

*பொருள்: முன்னாளில் பாற்கடல் கடைந்தபோது அமுதத்தில் தோன்றிய தாமரைமலர் மகளான திருமகளின் அழகையொப்பத் தன் கன்னியின் பேரழகு இருப்பதனைக் கண்டு மகிழ்ந்த கரன்; பழைமைமிகு வடகயிலையில் எழுந்தருளியிருக்கும் சிவனைத் தொழுது- என்மகளுக்கு ஏற்ற மணமகன் எவன் என்று வேண்டினன். 0 உததி = கடல்.*

6. *இட்டபணிப்பணியெட்டுமணிப்புயனென்சொல்வான்* *(சா)*
*மட்டவிழ்கந்த மாதனமலை மேல் வாழ்கின்றான்*
*விட்ட சினத்தொரு மாமுனிவிச்சிரவாவென்போன்*
*கட்டழகுன்மகள் கணவ னெனத்தனிகற்பித்தான்*

*இட்ட பணிப்பணி ° எட்டு மணிப்புயன் என்சொல்வான்,*
*மட்டவிழ் கந்தமாதனமலைமேல் வாழ்கின்றான்*
*விட்ட சினத்து ஒருமாமுனி விச்சிரவா என்போன்,*
*கட்டழகு உன்மகள் கணவன் எனத் தனி கற்பித்தான்.*

*பொருள் : சத்தியாகிய குண்டலினியைத் தன் அணியாகக் கொண்டவனும் அழகிய எட்டுத் திருத்தோள்களை யுடையவனும்- எண்குணங்களை உடையவனுமாகிய சிவன்; கரனை நோக்கி அன்றலர்ந்த மலர்களிலிருந்து தேன் சொரியும் சோலைகள் கொண்ட கந்தமாதனம் என்னும் மலைமேல் வாழும் ஓர்முனிவன் உளன். அவன் சினத்தை விட்டவன்- பெருந்தவத்தோன். அவன் பெயர் விச்சிரவாகு. உனது அழகுமிக்க கன்னிக்கு அவனே கணவனாகத் தகுந்தவன் எனக் கூறினான்.*

*° எட்டுமணிப்புயன் எனத் தொடர்மொழியாகக் கொண்டும் எட்டு என்பதனைத் தனியே கொண்டும் பொருள் காணப்பட்டது. எட்டு - என்பது எண்குணங்களைக் குறிக்கும். அவை 1 தன்னைத்தான் உணர்தல், 2. பஞ்சபூதங்களையும்- பஞ்சப் புலன்களையும் நெறிப்படுத்தல், 3. இயல்பான உணர்வுடையனாதல், 4 எதிலும் கட்டுப்படாது இருத்தல். 5 பேரன்பின் இருப்பிடமாயிருத்தல், 6 நிறை உணர்வு பெறுதல், 7 அனைத்தும் தன்னினிருத்தல், 8 அனைத்திடத்தும் தானிருத்தல்.*

7. *கற்பொருவில்லியுரைக்க வரக்கன்களி கூர்ந்து* *(எ)*
*னற்பதுமத்தாடொழுதயல் சென்றானாதன்றா*
*னிற்ப தொர்மாரனையம்முனிவன் பானீயெகிப்*
*பொற்பமரந்தக்கன்னிகையோடு புணர்த்தென்றான்.*

கற்பொரு வில்லி உரைக்க, அரக்கன் களி கூர்ந்து
நற்பதுமத் தாள் தொழுது அயல் சென்றான், நாதன்தாள்
நிற்பதொர் மாரனை அம்முனிவன் பால் நீ ஏகிப்,
பொற்பமர் அந்தக் கன்னிகையோடு புணர்ந்து என்றான்.

பொருள் : தென்கயிலையில் எழுந்தருளியிருப்பவரும்- மேருவை வில்லாகக் கொண்டவரும் உமையைத்தன் பாகமாகக் கொண்டு ஆன்மாக்களுக்கு அருள் புரியும் பேரருளாளன் சிவன்- கூறியவற்றைக் கேட்ட கரன், மகிழ்ச்சி மேலீட்டால் கண் மலர்ந்து, அவன் திருவடித்தாமரைகளை வணங்கி அயல் சென்றான். அவ்வேளையில் சிவன்- வணங்கிநின்ற மன்மதனை நோக்கி, அம்முனிவன் வாழ்விடஞ்சென்று அழகுமிக கன்னி இராத்திரிகரியோடு மணவுறவு பூணச் செய்து இணை விளைச்சுக்குரிய வனாக்கு என்று கூறினன்.

8. என்றலும் மாரனம் முனிபக்க லெழுந் தெய்தான் (அ)
கன்றுமனத்தொடு விரதியன் விரகக்கடல் புக்கா
னன்றவ்வரக்கனும் விச்சிரவாவாச்சிரமத்திற்
சென்றபடி தொழுதான் முனிவரனாசிகள் சிலசெய்தான்.

என்றலும் மாரன் அம்முனிபக்கல் எழுந்து எய்தான்,
கன்று மனத்தொடு விரதியன் விரகக் கடல் புக்கான்,
அன்று அவ்வரக்கனும் விச்சிரவாவ் ஆச்சிரமத்தில்
சென்று அடி தொழுதான், முனிவரன் ஆசிகள் சில செய்தான்.

பொருள்: சிவனின் பணிப்புரை கேட்ட மன்மதன்; முனிவன் தவஞ் செய்யும் இடம் நோக்கிச் சென்றனன். திடமனத்துடன் தவஞ் செய்த முனிவன் காமவயப்பட்டு பாலுணர்ச்சியால் தூண்டப்பட்டான். அதனால் உணர்ச்சிக் கடலில் மூழ்கினன். அவ்வேளையில் அரக்கனாகிய இராத்திரிகரன்; விச்சிரவாகுமுனிவனின் தவக்குடில் சென்று முனிவனை வணங்கினன். முனிவனும் அவனுக்கு வாழ்த்துக்கள் சில கூறினன்.

9. செய்தவனீயிங்கணுகியதிறமென்செப்பென்னக் (கூ)
கைதவமாமென்புதல்வியிராத்திரிகரியென்பா
ளெய்து முனக்கவண்மனைவி யெனத்[6] தந் தேன்கையாற்
பெய்துதகஞ் செய்ய வேண்டுமென்னு[7] ள்ளம் பெரிதென்றான்

செய்தவன்; நீ இங்கு அணுகிய திறம் என் செப்பென்னக்
கைத்தவமாம் என் புதல்வி இராத்திரிகரி என்பாள்,
எய்தும் உனக்கு அவள் மனைவி எனத்தந்தேன் கையால்,
பெய்து உதகம் செய்ய வேண்டும் என் உள்ளம் பெரிதென்றான்.

பா.வே. 6 தள்தென், 7 உள்ளம்பிடி யென்றான்,

*பொருள்: விச்சிரவாகுமுனிவன் கரனை நோக்கி நீ இங்கு வந்ததேன் என கேட்டனன். கரன் அதற்கு, பெருந்தவத்தால் யான் பெற்ற மகள் இராத்திரிகரி என்பாளை உனக்கு மனைவியாகத் தர விரும்பினேன். அவள் உனக்கு ஏற்ற மணமகளாவாள். அவளை உனக்குத் தந்தேன். எனது கையால் புனித நீர் ஊற்றிக் கன்னிக் கொடை செய்ய என் உள்ளம் பெரிதும் விரும்பியுள்ளது எனப் பகர்ந்தனன்.*

**10.** *ஆனாலெங்கள் பிரானருள் கற்பனையதனாலுந்* *(௧0)*
*தேனார் வேற்கணையாலு மறுக்குந்திறனுண்டோ*
*மேனாளூழ்வினையென்பதெ வற்கும்* [8] *விலக்காதான்*
*மானார்கண்ணி மணத்துக்கம்முனி மனமுற்றான்.*

*ஆனால் எங்கள் பிரான் அருள் கற்பனை அதனாலும்,*
*தேனார் வேள் கணையாலும், மறுக்கும் திறன் உண்டோ,*
*மேல் நாள் ஊழ்வினை என்பது எவர்க்கும் விலக்காதான்,*
*மானார் கண்ணி மணத்துக்கம் முனி மனமுற்றான்.*

*பொருள் : எங்கள் சிவனின் அருளாலும் அவன் கற்பித்த முறைமையாலும், கரும்பு வில் கொண்டு மலரம்பு வீசும் காமன் செயலாலும் அதனை மறுத்து உரைக்கும் திறன் உண்டாமோ. இல்லை. முன் செய்த வினைப்பயனை யாராலும் விலக்குதல் இயலாது. ஊழ்வலியால் மான்போன்ற கண்ணினையுடைய கன்னி இராத்திரிகரி யென்பாளை விச்சிரவாகு முனிவன் மணம் புரிய மனங் கொண்டான்.*

## வேறு

**11.** *உற்ற முனிநன்றெனவரக்கனெமதூர் போய்* *(௧௧)*
*நற்றிருமணம் புணரநல்* [9] *கிடுது மென்றான்*
*மற்றது சிறப்பதெனமாதவனு முன்னித்*
*தெற்றென வெழுந்தவனுடன் கடிது சென்றான்.*

*உற்ற முனி நன்றென, அரக்கன் எமது ஊர்போய்*
*நற்றிருமணம் புணர நல்கிடுதும் என்றான்.*
*மற்றது சிறப்பு அதென மாதவனும் உன்னித்*
*தெற்றென எழுந்து, அவனுடன் கடிது சென்றான்.*

*பொருள் : முனிவன் இராத்திரிகரி என்ற கன்னியை மணம் புரிய உடன்பட்டான். அதற்கு இராத்திரிகரன் என்ற அரக்கன் எமது ஊர் சென்று நலம் வாய்ந்த திருமண நிகழ்வினைச் செய்வோமென்றனன். அதுவே சிறப்பென விச்சிரவாகு முனிவனும் எண்ணினன். அவ்வண்ணம் எண்ணிய முனிவன், விரைந்தெழுந்து அரக்கனுடன் சென்றான்.*

---

*பா.வே.* *8 விலகாதான்,* *9 நல்குவமென்றான்.*

12. சென்று சிலைவேள் பொருத செய்கை வலிதென்கோ (கஉ)
குன்றவரிவில்லிபுரி கொள்கைவலிதென்கோ
வொன்றினுமுளஞ் செலவிடாத முனியுள்ள
மன்றொருவரக்கன் மகட் கன்புறுவதானான்

சென்று சிலை வேள் பொருத செய்கை வலிது என்கோ,
குன்ற வரிவில்லி புரி கொள்கை வலிது என்கோ,
ஒன்றினும் உளம் செலவிடாத முனி உள்ளம்,
அன்றொரு அரக்கன் மகட் கன்புறுவதானான்.

பொருள்: அவ்வணம் சென்ற முனிவன்மேல் கரும்பு வில்லையுடைய மன்மதன் செய்த செய்கை வலிது எனச் சொல்லவோ அன்றி மேருவை வில்லாக வளைத்து ஒடித்த சிவனாரின் திருவுள்ளக் கருத்து வலிதெனப் பகரலாமோ யார் அறிவார். முனிவனோ ஒன்றிலும் மனஞ் செல்லாது அரக்கன் மகளிடத்துக் காம வயப்பட்டு அன்பு செய்தான்.

13. ஆனனமலர்க்கமலமன்பிணிதரும்ப (கங)
ஞானமுனியைக் கொடுநிசாசரனடந்தான்
கானநதிமால்வரை கடம்பலகடந்து
மானனையகன்னியுறைமாநகர்புகுந்தான்

ஆனன மலர்க்கமலம் அன்பினிது அரும்ப,
ஞான முனியைக்கொடு ° நிசாசரன் நடந்தான்,
* கான நதி மால்வரை கடம்பல கடந்து,
மான் அனைய கன்னி உறை மாநகர் புகுந்தான்,

பொருள் : ஞானத்தில் சிறந்த முனிவனது உள்ளமாகிய தாமரை, இராத்திரிகரி என்ற கன்னியின் மேல் கொண்ட பெருவிரும்பால் முகிழ்வுற்றது. அதனை உணர்ந்த அவளின் தந்தை இராத்திரிகரன் முனிவனைத்தன்னுடன் கூட்டிக் கொண்டு, காடு- காட்டாறு- பெருமலை- பெருநீர்த் தடம் என்ற பலவற்றைக்கடந்து மான்போன்ற மெல்லியல்பு கொண்டகன்னி இராத்திரி வாழும் நகர் சென்றனன்.

° நிசாசரன்= அரக்கன் * கானநதி என ஒன்றாகக் கொண்டும் கானம் நதியெனப் பிரித்தும் பொருள் கொள்ளப்பட்டது.

14. புகுந்தனன் மனைத்தலைப்புதுத்தரள மாடத் (கச[1])
துகந்து முனியைக் கொடுபசார மொடிருத்தித்
திகந்தரமடங்கலு மணத்தினிமை செப்ப
[10] மிகுந்த தொரு சாரணரநேகரை விடுத்தான்

---

பா.வே, 10 மிகுந்துரிய

புகுந்தனன்; மனைத்தலைப் புதுத்தரள மாடத்து,
உகந்து முனியைக்கொடு உபசாரமொடு இருத்தித்.
திகந்தரம் அடஙகலும் மணத்தினிமை செப்ப.
மிகுந்ததொரு சாரணர் அனேகரை விடுத்தான்.

பொருள் : முனிவனுடன் வந்த இராத்திரிகரன் தன் இல்லம் புகுந்தனன். முனிவனை முத்துப் பதித்த புதிய மாடத்தில் தங்கச் செய்தனன். நல்வரவு கூறி விருந்திட்டனன். அதன்பின் அனைத்துத்திக்குகட்கும் நன்மணம் நிகழும் செய்தியினைத் தன் உற்றார் உறவினர்க்குக் கூற, எண்ணற்ற தூதுவரை அனுப்பினன்.

15. தானவர்புகுந்தனரியக்கர் பலர் சார்ந்தார் (கரு)
வ்ானவர் [11] குழீஇயினர்கள் மாமுனிவர்வந்தார்
கானமர்தருப்பை கொடுகா வணமியற்றி
யானதொரு[12] காலநலமாகவுமமைத்தார்.

தானவர் புகுந்தனர், இயக்கர் பலர் சார்ந்தார்,
வானவர் குழீயினர்கள், மாமுனிவர் வந்தார்.
கானமர் தருப்பை கொடு காவணம் இயற்றி,
[0]ஆனதொருகாலம், நலமாகவும் அமைத்தார்.

பொருள் : அசுரர்கள் வந்தனர், இயக்கர் பலர் சேர்ந்தனர், தேவர்கள் குழுமினர், பெருந்தவத்தோர் வந்தனர். இவர்கள் தங்குவதற்குரிய பேரிடத்தில்; காட்டகத்து வளரும் தருப்பைப்புல் கொண்டு அழகு பெற்ற பந்தலை ஒருகாலப் பொழுதில் அமைத்தனர்.

0 ஆன தொருகாலம் = காலை ஆறுமணியில் இருந்து மாலை ஐந்து மணி வரையுள்ள பகற்காலம்.

16. அமைத்த தொருகாவணமதற் கிடையொர் செம்பொ (கசா)
னிமைத்த மணிவேதிகையியற்றியதன் மீதே
கமைத்த மணமாமுனிவனைக்கடி திருத்திச்,
சமைத்தமறையோர் தழல் வளர்த்தனர் சடங்கால்

அமைத்த ஒரு [0]காவணம், அதற்கிடை ஓர் செம்பொன்
இமைத்த மணி வேதிகை இயற்றி, அதன் மீதே
அமைத்த மண மாமுனிவனைக் கடிது இருத்திச்,
சமைத்த மறையொர், தழல் வளர்த்தனர் சடங்கால்,
0 காவணம் = பந்தல்

---

பா. வே. 11 குளியினர் மகாமுனிவர், 12 சாலை.

பொருள் : அவ்வண்ணம் அமைத்த பந்தலிடை செம்மைசான்ற பொன்னால் செய்யப்பட்ட மணிகள் பதித்த திருமண இருக்கையினைச் செய்து, திருமணத்திற்காக வந்த பெருந்தவ முனிவன் வச்சிரவாகுவை, மணக்கோலத்துடன் இருத்தினன். மறை வல்ல அந்தணர் திருமணச் சடங்கினைச் செய்வதற்காக குண்டத்தில் தீ வளர்த்தனர்.

17. காலையதிலே நிருதனுங்களி சிறந்தென் (கஎ)
வாலமயிலைக் கொணர்மின்மாத ரெனவோத
வாலயமதற் குறுகி[13] யத்தருணமின்னைக்
கோலமுதிர் சேடியர்கள் கூடி அணி செய்தார்.

காலை அதிலே நிருதனும் களி சிறந்து, என்
வாலை மயிலைக் கொணர்மின் மாதர் எனஓத,
ஆலயம் அதற்குறுகி அத்தருணம் மின்னைக்,
கோலமுதிர் சேடியர்கள் கூடி அணி செய்தார்.

பொருள் : அவ் வேளையில் இராத்திரிகரன் மனம் மிகமகிழ்ந்து, எனது இளம் மயிலைத் திருமண இருக்கைக்குக் கொண்டு வருகென அவளது தோழியருக்குப் பணித்தான். அதனைக் கேட்ட அழகு மிக்க தோழியர்கள் கன்னி வாழும் திருமாடம் புகுந்து மணப் பெண்ணுக்கு முறைப்படி அணிகள் புனைந்து அழகு செய்தனர்.

18. செய்ய கலை[0] நீவி, கொடு செகரின் விளக்கந் (கஅ)
துய்யவெளி சூழ்ந்தென மருங்கினிடை சூழ்ந்தார்
[14] மையனைய மேகமொடு வானுடு நிகர்ப்ப
[15] மொய்யளக பந்திமலர் மாலிகைமுடித்தார்.

செய்ய கலை நீவு; கொடுசெக்கரின் விளங்கம்
துய்யவெளி சூழ்தென மருங்கின் கிடை சூழ்ந்தார்,
மையனைய மேகமொடு வானுடு நிகர்ப்ப
மொய்யளக பந்திமலர் மாலிகை முடித்தார்

பொருள் : தோழியர்; அழகிய சிவந்த ஒளிமிக்க செம்மை சான்ற துகிலை (கூறை) கன்னியின் துவண்ட இடையில் ஒழுங்குபட மடிப்புகள் அமையும் படி உடுத்தனர். அதன்பின் கருமை கொண்ட முகில் போன்ற கூந்தலை அழகுசெய்து முடித்தனர். அதன் மேல் ஒளிமிக்க நட்சத்திரங்கள் போன்ற தலை அணிகளைப் புனைந்தனர். மணம் மிக்க மலர்மாலைகளை ஒழுங்குபடக் கூந்தலில் சூடினர். இது கருமுகிலிடத்து நட்சத்திரங்கள் மின்னுவது போல் இருந்தது. [0] நீவி = கெய்சகம் = கொய்யகம் = முக்தானை

19. தாரணி யொழுங்கு வளைத் தலைதயங்கு (கக)
நேரென விழித்துணையின்மை வரிநிறைத்தார்
பேரருவிவெற்பிணையெனப் பெருமுலைக்கண்
ணாரவடமிட்ட கிலு மாரமுமணிந்தார்.

---

பா.வே. 13 அத்தனதுமின்னன, 14 மையருமமேகமொடு, 15 மெய்யளகபங்கிமலர்

*தாரணி ஒழுங்கு குவளைத் தலை தயங்கு*
*நேரென விழித்துணையின் மைவரி நிரைத்தார்,*
*பேரருவி வெற்பு இணையெனப் பெரு முலைக்கண்,*
*ஆரவடம் இட்டு அகிலும் ஆரமும் அணிந்தார்.*

பொருள் : குவளை மலர் போன்ற அழகிய தலையில், கூந்தலில், மலர்மாலைகள் அழகுபட விளங்கின. நேரிய நோக்குக் கொண்ட அவளது கண் இமைகட்டு மையிட்டு அழகு செய்தனர். இருமலைமுகடுகள் இணைந்தது போல் விளங்கும் இருதனங்களும் அழகு பெற, முத்துக்களும் மணிகளும் பதித்த அணிகளை அணிந்தனர். அது மலைமுகட்டிலிருந்து அருவி நீர். சொரிவது போல் இருந்தது. இவற்றினைச் செய்தபின் அகில்க் குழம்பும் சந்தனக் குழம்பும் பூசிச் சிறப்புச் செய்தனர்.

20. *அணிக்கமலம்வால வெயிலண்ணியதெனச் செம்* *(உ0)*
*மணிக்கடகமங்கை தன் மலர்கையிலடுத்தார்*
*பணிக்குழை செவிக் குழையணிந்து பதமேற்கிண்*
*கிணிக் குரல் சிலம் பொடு சிலம்பு கிளர்வித்தார்.*

*அணிக்கமலம் வாலவெயில் நண்ணியது எனச், செம்*
*மணிக் கடகம் மங்கைதன் மலர்க்கையில் அடுத்தார்*
*பணிக்குழை செவிக்குழைஅணிந்து பதமேல், கிண்*
*கிணிக்குரல் சிலம்பொடு சிலம்பு கிளர்வித்தார்.*

*பொருள்: அழகுமிகு தாமரைமலர், காலை இள வெய்யில் கண்டு மலர்ந்து அழகு செய்வது போல இராத்திரிகரியின் மலர்க்கைகளுக்குச் சிவந்த மணிகளால் அமைக்கப்பட்ட கங்கணங்களை (காப்பு) அணிந்தனர். நாகபடம் போன்றமைந்த பொன்குண்டலங்களைப் புயத்தில் அணிந்தனர். காதுகளில் பொன்னால் ஆக்கப்பட்ட குண்டலங்களை அணிந்தனர். அழகிய பாதத்தின் மேல் மென்மையான இசை மிளிற்றும் பாத அணியினைச் சூடினர். காலில் ஒலி எழுப்பும் சிலம்பினை அணிந்தனர்.*

21. *கிளர்ந்தவழகுக்கழகு செய்[16] கிரியை யென்ன* *(உக)*
*வளர்ந்தமுலைவல்லியையிவ்வாறழகு செய்தா*
*ரிளந்தளிரடித் துணைசிவப்பவெழுகென்றார்*
*தளர்ந்தவிடையாள்சிறிது மெல்லநடைதந்தாள்*

*கிளர்ந்த அழகுக்கு அழகுசெய் கிரியை என்ன,*
*வளர்ந்த முலை வல்லியை இவ்வாறு அழகு செய்தார்,*
*இளந்தளிர் அடித்துணை சிவப்ப எழுகென்றார்,*
*தளர்ந்த இடையாள் சிறிது மெல்ல நடை தந்தாள்,*

---

*பா.வே. 16 கிரியதென்ன.*

பொருள் : இயல்பாகப் பொருந்திய அழகு வெளிப்பட்டு நிற்க, அவ்வழகினை மேலும் துலக்கமுறும்வண்ணம் செய்யப்பட்ட செயற்பாடுகள் மூலம்- அழகுக்கு அழகு செய்தனர். இதனால், வளர்ச்சி பெற்ற தனங்களையுடைய வல்லிக் கொடிபோன்ற இராத்திரிகரி மிக்க அழகுடையவளாகத் தோன்றினாள். அவ்வண்ணம் அழகுடன் பொலிவுற்று நின்ற கன்னியை மணமேடைக்கு எழுந்து வருகெனத் தோழியர் கூறினர். அவ்வுரைகேட்ட மெல்லிடையாள் தன் இடை தளர்ந்து துவள சிற்றடியினை எடுத்து வைத்து மெல்ல நடந்து வந்தனள்.

22 தந்தை பெரிதன் புருக நின்று சரண்மீதே (உஉ)
சிந்தையின் மகிழ்தவள் பணிந்தருகு சென்றா
ளந்தமுனிகண்டு வகையாழியமர்ந்தான்
வந்தவர்முனிக்கவளைவாமமுறைவைத்தார்.

தந்தை பெரிது அன்புருக நின்று சரண்மீதே,
சிந்தையின் மகிழ்ந்தவள் பணிந்து அருகு சென்றாள்,
அந்தமுனிகண்டு உவகை ஆழி அமர்ந்தான்,
வந்தவர், முனிக்கு அவளை வாமமுறை வைத்தார்.

பொருள் : கன்னியின் தந்தையான இராத்திரிகன் என்பான் தன்மகனின் மணக்கோலங் கண்டு உளம் மகிழ்ந்து நின்றான். உள மகிழ்ச்சி கொண்ட கன்னி தன்மணக்கோலத்துடன் சென்று தந்தையின் அடி பணிந்து அவன் பக்கலில் சென்றனள். அவளது மணக்கோலத்தையும் அழகினையுங் கண்ட முனிவன் விச்சிரவாகு மகிழ்ச்சிகடலில் மூழ்கினான். திருமண நிகழ்வினைச் செய்ய வந்த மறையோர் மணப்பெண்ணை முனிவனின் இடப்புறத்தே இருத்தினர்.

23 வைத்த பொழுதங்கையியிலிலைச் சுருண்மலர்ப்பந் (உங)
தித்தகைய வேந்தியொருகாப்பு மினிதிட்டுச்
சித்திரமணிக்கலையணிந்து சிலை வேளுங்
கொத்து மலர்தூவலொடு கொம்பருகிருந்தான்.

வைத்த பொழுது அங்கையில் இலைச்சுருள் மலர்ப்பந்(து)
இத்தகைய ஏந்தி ஒரு காப்பும் இனிது இட்டுச்,
சித்திர மணிக்கலை அணிந்து சிலை வேளும்
கொத்துமலர் தூவலொடு கொம்பருகிருந்தான்.

பொருள் : அவ்வண்ணம் இருந்த மணமகளின் அழகிய உள்ளங் கையில் வெற்றிலைச் சுருளினையும் மலர்ப்பந்தினையும் வைத்தனர். இவற்றினை ஏந்திய கைக்குத் திருமணக்காப்பினைத் தெற்பைப்புல் கொண்டு கட்டினர். அவள் பக்கலில் கரும்பு வில் தாங்கிய மன்மதன் போன்ற அழகு மிக்க விச்சிரவாகு முனிவனும், சித்திர வேலைப்பாடமைந்த அழகுமிக்கமணவுடை அணிந்து மலர்க்கொத்துக்களாலான மாலை சூடி மணவினை காண வந்தோர் மலர்தூவி வாழ்த்த மணக்கோலத்துடன் இருந்தனன்.

---

பா.வே 17 மணையாக

24. இருத்தலுமுனக்கென்மகளின்பமணமாகக் (உச[1])
கருத்தொடு கொடுத்தனனெரிக்கடவுள்காண
நிருத்தனுமுரைத்தபடி யென்றுநிருதன்கை
விரித்தவுதகம்பொழியவேதவமுனி கொண்டான்.

இருத்தலும் உனக்கு என்மகள் இன்ப மணமாகக்,
கருத்தொடு கொடுத்தனன் எரிக்கடவுள் காண,
நிருத்தனும் உரைத்தபடி, என்று நிருதன்கை
விரித்த [0] உதகம் பொழிய, வேதமுனி கொண்டான்.

பொருள் : அவ்வண்ணம் மணக்கோலங் கொண்டிருந்த விச்சிரவாகு முனிவனை இராத்திரிகரன் நோக்கி, எனது மகளை உனது வாழ்வு மலர்ந்து மணம்பரப்ப, மிக்க விருப்பத்துடன் தீக்கடவுள் முன்னிலையில் கொடுக்கின்றேன் எனக் கூறினன். கூறிய வண்ணம் தன்கையில் புனிதநீர் கொண்டு முனிவன்கையில் சொரிந்து தன்கன்னியைக் கொடையாகக் கொடுத்தனன். வேதமுனிவனான விச்சிரவாகுவும் அக்கொடையினை மனம் மகிழ்ந்து ஏற்றனன்.

[0] உதகம் = இடம்நோக்கிப் புனிதநீர் எனக் கொள்ளப்பட்டது.

25. கொண்டலின்முழுங்கினவலம்புரிகள் கொம்பின் (உரு)
முண்டகமலர்க்கை விரல்பற்றி முனி சுற்றி
மண்டுமனலக்கடவுடன்னைவலம்வந்தா
னண்டருமகத்திடர் புறத்துமகிழ்வானார்.

கொண்டலின் முழங்கின வலம்புரிகள், கொம்பின்
முண்டக மலர்க்கை விரல்பற்றி முனி சுற்றி,
மண்டும் அனல் அக்கடவுள்தன்னை வலம் வந்தான்,
அண்டரும் அகத்திடர் புறத்து மகிழ்வானார்.

பொருள்: இம்மண நிகழ்வு நேரத்தில் கீழ்கடலில் வலம்புரிச் சங்கங்கள் முழங்கின. அவை ஒன்றிணைந்து முழங்கியதால் சூல் கொண்ட முகிலின் முழக்கம் போலிருந்தது. முனிவனும், இளந்தளிர் கொண்ட கொம்பு போன்ற கன்னியின் தாமரைமலர் போன்ற கையினைத் தன் வலக்கரத்தால் பற்றி அவள் விரலுடன் தன்கையினை இணைத்துக் கொண்டு, ஓங்கிக் கொழுந்து விட்டெரியும் தீக்கடவுளை வலம் சுற்றி வந்தான். இந்த நிகழ்வினால் தேவர்கள் உள்ளத்தே துன்பம், அடைந்தனர். ஆயின் புறத்தே மகிழ்வு கொண்டவர் போல் காட்டிக் கொண்டனர்.

26. வேறு

நாரியுமுனிவனுநாரிமாருடன் (உசா)
சீரியமணவறை சென்று புக்கனர்
காரெனுமிராத்திரிகரன் பணித்தலா
லூரினைநோக்கினரும்பர் யாவரும்.

நாரியும் முனிவனும் நாரிமாருடன்
சீரிய மண அறை சென்று புக்கனர்,
காரெனும் இராத்திரிகரன் பணித்தலால்,
ஊரினை நோக்கினர் உம்பர் யாவரும்.

பொருள் : கன்னியும் முனிவனும் அழகிய திருமண வறை சென்று புகுந்தனர். மணமக்களுடன் கன்னியின் தோழியரும் உடன் சென்றனர். இராத்திரிகரி யென்பான் மணவினைக்கு வந்த அனைவரையுந் தத்தம் இடங்கட்குச் செல்லுமாறு பணித்து விடை கொடுத்தனன். விடைபெற்ற வானகத்தோர் தத்தமிடம் நோக்கிச் சென்றனர்.

27. வருமுனிமருவினால்மகாரைத்தந்திவ (உஎ)
டருகுவள்சுரர்க்கிடர்தருமுன்னேயிவர்
பிரிவது நன்றிருள் [18] பெருக்குமோ வெனா
விரிகதிரவன்குடவெற்பின் மேவினான்

வருமுனி மருவினால் மகாரைத் தந்திவள்,
தருகுவள் சுரர்க்கு இடர், தருமுன்னே இவர்
பிரிவது நன்று, இருள் பெருக்குமோ எனா,
விரி கதிரவன், [0] குடவெற்பின் மேவினான்

பொருள்: மணமகனாக வந்த முனிவன் இவளுடன் இணை விளைச்சுச் செய்தால் மக்களைப் பெறுவாள். அதனால் தேவர்கள் துன்புறுவர். அத்துன்பத்துக்கேதுவான நிகழ்வு நடைபெறுமுன்பே இவர்கள் பிரிந்து செல்வது நன்று. ஆயின் இவர்கள் பிரியாதிருக்கும் வண்ணம்; இருள் பெருகிவிடுமே என எண்ணியது போன்று விரிந்துபரவும் கதிர்களையுடைய கதிரவன் மேற்குத் திசை சென்று குடமலை புகுந்தனன் [0] குடமலை = மேல்திசைமலை

28. மேவியவிச்சிரவாவும் வெய்யகட் (உஅ)
[19] காவியுமிராத்திரிகரியுமன்பினாற்
பாவிய மலரணைப் பள்ளியெய்தலு
[0] மோவிய மனைய வளுறக்க முந்தினாள்.

---

பா.வே. 18 பெருக்குவோமெனா, 19 காவியினி

மேவிய விச்சிரவாவும், வெய்யகட்
காவியும் இராத்திரிகரியும் அன்பினால்
பாவிய மலரணைப் பள்ளி எய்தலும்,
ஒவியம் அனையவள் உறக்கம் முந்தினாள்.

பொருள் : இரவு வந்ததனால் விச்சிரவாகுமுனிவனும், சிவந்தகண்களையும் காமக் குறிப்பையும் கொண்ட நங்கை இராத்திரிகரியும் அன்புடன் மலர்மஞ்சம் அமைக்கப்பட்ட பள்ளி அறைக்குச் சென்றனர். அவ்வண்ணம் சென்றதும் ஒவியம் போல்மிக்க அழகுடைய கன்னி இராத்திரிகரி உறக்கம்வருதலும் முனிவனுக்கு முன்பதாகவே தூக்கத்தில் ஆழ்ந்தனள்.

[0] பாட வேறுபாடு. மேவிய

[0] மேவிய மனையவள் உறக்கம் உந்தினாள் எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். இது பொருட்சிறப்பன்று மூன்றாம் அடிக்கு இயைவுபடப் பொருள் கொள்ளப்பட்டது.

29. முந்தவேளெய்கென மொழிந்த வெம்பிரா (உகூ)
னந்தமாரணையினியகலென்றேவினான்
சிந்தையில் விரகமாங்குறும்பு தீர்ந்தற
நிந்தையின் முனிக்கு முன்னெறி பிறந்ததே

முந்த வேள் எய்கென மொழிந்த எம்பிரான்,
அந்த மாரனை இனி அகல் என்று ஏவினான்,
சிந்தையில் விரகமாம் குறும்பு தீர்ந்து அற,
நிந்தையின் முனிக்கு முன்நெறி பிறந்ததே.

பொருள்: முன்பு முனிவனிடஞ்சென்று இணைவிளைச்சுக்குரிய உணர்வினைத் தூண்டும்படி கூறிய சிவன், மீண்டும் மன்மதனை நோக்கி இனிமுனிவனைவிட்டு நீங்குக எனப்பணித்தனன். அதனால் முனிவன் உள்ளத்தில் பிறந்த காம உணர்வும் அதனால் ஏற்பட்ட விரகதாகமும் மெய்பாட்டுணர்வும் அறவே நீங்கியது. அம்மயக்கநிலை நீங்கியதால் முனிவனுக்குத் தான் முன்வாழ்ந்த அருநெறியான தவநெறியில் மனம் விருப்புக் கொண்டது.

30. தேமரு[20]வரைதனிலரக்கன் சேர்ந்ததுங் (௩0)
காமருமணமொழிக்கடனுமக்கடன்
றோமுறப்பலித்ததுந்துயின்ற பேர்கனா
வாமெனத் தோன்றிய தவனுக்கன்றரோ

தேமரு வரைதனில் அரக்கன் சேர்ந்ததும்,
காமரு மணமொழிக் கடனும், அக்கடன்
தோமுறப் பலித்ததும், துயின்ற பேர்கனா
ஆமெனத் தோன்றியது, அவனுக்கு அன்றரோ.

---

பா.வே. 20 வரையினில்,

பொருள்: தேன்சொரியும் பூஞ்சோலைகள் நிறைந்தகந்தமாதன மலையிடத்துக் கரன் வந்ததும், அவன் காமவிளைவைத்தரும் திருமணநிகழ்வை வேண்டி நின்றதும், அவ்வேண்டுதல் இனிமையுடன் மகிழ்வுபெற நிறைவுற்றதும் தூக்கத்தில் கண்ட பெரியகனவு போன்று தோன்றியது-தவமுனிவன் விச்சிரவாகுவுக்கு.

31. [21] அன்றவளிராத்திரிகரிதன்னங்கமு (௩௧)
மன்றலம் பசுந்தளிர் வடிவு நோக்கலும்
வென்றியினரக்கியர் [22] மேனியாகிமு
னன்றென விருந்தது நவையுண்டாயதே

அன்று அவள் இராத்திரிகரி தன் அங்கமும்,
மன்றலம் பசுந்தளிர் வடிவு நோக்கலும்,
வென்றியின் அரக்கியர் மேனியாகி, முன்
அன்றென இருந்தது நவை உண்டாயதே.

பொருள்: அன்றிரவு இராத்திரிகரி என்ற நங்கையின் உறுப்புகள், பூஞ்சோலையில் மலர்ந்த மலர்போன்றும் இளந்தளிர் போன்றும் இருந்த செழுமை கொண்ட அழகினை இழந்து, திறல் மிக்க அரக்கியர் உடல்போல் இருந்ததனைக் கண்டு நகைத்தனன் முனிவன் விச்சிரவாகு.

32. ஆயவளுருவுகண்டன்பு நீங்கினன் (௩௨)-
போயது நோன்பென்ப்புகைந் தெழுந்தனன்
தூயநான்மறைகளுஞ்சுடர்விளங்கிட
மேயினன் கந்தமாதனத்தின் மீதரோ

ஆயவள் உருவுகண்டு அன்பு நீங்கினன்,
போயது நோன்பெனப் புகைந்து எழுந்தனன்,
தூய நான்மறைகளும் சுடர் விளங்கிட,
ஏயினன் கந்தமாதனத்தின் மீதரோ.

பொருள் : கன்னி இராத்திரிகரியின் வடிவினைப் பள்ளியறையில் கண்ட முனிவன், அவள்மேல் உள்ள அன்பினை விட்டனன். தன் தவம் கெட்டதே எனச் சினந்து எழுந்தனன். மேன்மை கொள் நான்கு மறைகளும் சிறப்புற்று விளங்கக் கந்தமாதன மலைக்குச் சென்றனன். அரோ அசைப்பொருளில் வந்தது.

33. மீயுயரருவி வீழ்வெற்பின்சென்னியிற் (௩௩)
போயொருவட தருப்புறத்திற்புற்றய
லாயிடையோக மோடமர்ந்தனனித்
தாயிடைப்பிறந்திடாத்தவஞ்செய்தன்மையான்.

---

பா.வே 21 அன்றவனிரர்த்திரி, 22 மேனியாதலால்

மீயுயர் அருவி வீழ் வெற்பின் சென்னியில்,
போயொரு வடதருப் புறத்தில் புற்று அயல்,
ஆயிடை யோகமோடு அமர்ந்தனன் இனித்,
தாயிடைப் பிறந்திடாத் தவம் செய் தன்மையான்

பொருள் : மிக்க உயரத்திலிருந்து வீழும் நீரருவிகள் கொண்ட கந்தமாதன மலையின் உச்சிக்குச் சென்று, அம்மலையின் வடதிசையின் ஓர்பால் அமைந்த பெருமரத்தின் அயலில் அமைந்த புற்றுக்களின் அண்மையில் இனிதாக யோகம் செய்திருந்தனன். தாயிடைப் பிறவாத்தவம் செய்யும் இயல்பமைந்த விச்சிரவாகு முனிவன்

34. தன்பொருட்டிருள் செய்து முனியைத்தையல்பாற் (௩ச[1])
றுன்புறப்பிரித்தவடுயிலுணர்த்தியே
மின்புலம்புந்திறம் பார்ப்ப வெய்ய வன்
பொன்புறழ்குணதிசைப் பொருப்பிற்றோன்றினான்

தன்பொருட்டு இருள் செய்து, முனியைத் தையல்பால்
துன்புறப் பிரித்து, அவள் துயில் உணர்த்தியே,
மின் புலம்புந் திறம் பார்ப்ப வெய்யவன்
பொன்புறழ் குணதிசைப் பொருப்பில் தோன்றினான்.

பொருள் : சூரியன் தன் செயலால் இருள் செய்து இராத்திரிகரியாகிய பெண் துன்புற அவள் கணவன் விச்சிரவாகு பிரிந்து செல்லும்படி செய்தனன். பின் அவள் நித்திரையிலிருந்து விழித்தெழும் வண்ணம் ஒளிக்கற்றையினைப்பரப்பிக் கீழ்திசையமைந்த அழகிய உதயமால்வரையில் தோன்றினன்.

35. தோன்றலுந்திசைதிசை தோறுஞ்செங்கதிர் (௩ரு)
கான்றது முனிமனக்காமமாமிரு
ளேன்றவன்றீயினாற்பிரிந்தவாறென
வான்றமேதினியிருளனைத்தும் போயதே

தோன்றலும், திசைதிசை தோறும் செங்கதிர்
கான்றது, முனி மனக்காமமாம் இருள்
[0] ஏன்றவன் தீயினால் பிரிந்தவாறென,
ஆன்ற மேதினி, இருள் அனைத்தும் போயதே

பொருள்: கதிரவன் தோற்றத்தால் திசைகள் அனைத்தும் செம்மை சான்ற ஒளிபரந்தது, அழிந்தது முனி மனத்தில் இருந்த காம இருள், அதுபோல் உலகினை மூடியிருந்த இருளும் நீங்கியது. இது உலகமுதல்வனான சிவன் ஏந்திய தீயினால் உயிர்களைப் பந்தித்த ஆணவ இருள் நீங்கியது போலிருந்தது.

0 ஏன்றவன் = சிவன்

---

பா.வே 23 தீவினை

36. போயபின்ராத்திரிகரி தன்பூவணைத் (௩சா)
தூயகண்டு யில் பவடுணுக்கெனாவிழித்
தாயிழைமுனிவணையருகிற் கண்டிடல
ளே யெனவணைத்தனளிரங்கியேங்கினாள்.

போயபின் இராத்திரிகரி தன்பூவனைத்,
தூயகண் துயில்பவள் துணுக்கெனா விழித்து,
ஆயிழை, முனிவனை அருகில் கண்டிலள்.
ஏயென அணைத்தனள், இரங்கி ஏங்கினாள்.

பொருள்: முனிவன் விட்டுப்போகவும் - இருள் நீங்கவும், இராத்திரிகரி தன்பூம் படுக்கையில் இருந்து, அழகிய கண்துயிலைத் திடீரெனவிட்டு விழித்து நோக்கினாள். திருந்திய அழகு மிக்க வேலைப்பாடுகள் அமைந்த அணிகள் பூண்ட இராத்திரிகரி, தன் அருகில் தன் கணவனான விச்சிரவாகு முனிவனைக்காணாதவளானாள் என்ன நிகழ்ந்ததோ வென மனக்கவலை கொண்டு தன் துணைவனான முனிவனுடன் துயில் கொண்ட பஞ்சணையினை அணைத்துக்கொண்டு இரக்கமுற்று ஏங்கினாள்.

37. நாண்மலர்ச்சுரிகுழல்சரியநல்வடி (௩எ)
வாண் மலர்க்கண்மழை வழிந்துகால்பொரத்
தோண்மலர்த்தொடையலுந் தோடுஞ்சிந்திட
நீள்மலர்கையினை நெரித்து வீழ்ந்தனள்.

நாண்மலர்ச் சுரிகுழல் சரிய நல்வடி,
வாண் மலர்க்கண் மழை வழிந்து கால்பொரத்,
தோள் மலர்த் தொடையலும் தோடும் சிந்திட
நீள்மலர்க் கையினை நெரித்து வீழ்ந்தனள்.

பொருள் : தன்கணவனான முனிவனைக் காணது ஏங்கிய நங்கை இராத்திரிகரி அன்றலர்ந்த மணம் மிக்க மலர்சூடி ய - சுருள் கொண்ட அழகிய கூந்தல் குலைந்து சரிந்து அவள் அழகிய பாதங்களைத்தழுவ , ஒளிமிக்க மலர்போன்ற மென்மையான கண்களிலிருந்து மழைபோல் சொரியும் கண்ணீர் மலைக்குவடுகளிலிருந்து சொரியும் அருவி நீர் போல் தடமுலைகள் மேல் பாய்ந்து வழிய, தோளிலும் கழுத்திலும் அணிந்த மாலைகளும் அம்மாலைகளில் உள்ள மலர்களின் இதழ்களும் சிந்திட தன் அழகிய மலர்க்கைகள் இரண்டினையும் ஒன்றுடன் ஒன்று இணைத்து நெரித்தனள். துன்பச் சுமைதாங்காது நிலத்தில் வீழ்ந்தனள்.

## வேறு

38. வீழ்ந்தபொழுதெழு[24] முன்னே வெவ்வினையேன் பொல்லாக்கண் (௩அ)
சூழ்ந்து துயிலெழுமுன் பிரிந்தெங்கேதுவள்கின்றாய்
தாழ்ந்தகுலந்தெம்மரபுன்றன் மரபுக் கொவ்வாதோ
வாழ்ந்த குடி வாழ்க்கையுமிம்மணவறையும் போதுமோ

---

பா.வே. 24 முன்னே

வீழ்ந்த பொழுது எழுமுன்னே,
வெவ்வினையேன் பொல்லாக் கண்
சூழ்ந்து துயில் எழுமுன்,
பிரிந்து எங்கே துவள்கின்றாய்,
தாழ்ந்த குலத்து எம்மரபு
உந்தன் மரபுக்கு ஒவ்வாதோ,
வாழ்ந்த குடி வாழ்க்கையும்
இம் மணவறையும் போதுமோ,

பொருள்: கதிரவன் இரவு நீங்கி எழுவதற்கு முன்னே, கொடுவினைக்குள்ளானேன். என்கண்களைச் சூழ்ந்த இருள்கலையுமுன் என்னைவிட்டு எங்கு சென்றனை. அதனால் நீ எப்படித் துன்புறுவையோ அறியேன். தாழ்ந்த குலத்து எமது மரபு உந்தன் முனிமரபுக்கு ஒவ்வாதோ. உன்னோடு நான் வாழ்ந்த இந்த வாழ்வும் அதன் குறியீடாய் அமைந்த மணவறையும் என்வாழ்வுக்குப் போதுமோ?.

39. போதொன்றுமனைமீதுன்புயந்தமியேன்புணர்ந்தறியேன் (௩௯)
யாதொன்றும் பலகாலும்பயிலாமுன்னிகழுதியோ
தாதொன்று குழலாரும் வேறு சிலர்தாமுளரோ
தீதொன்றுமில்லாதாற்கீது மொரு செய்கையோ

போதொன்று மனைமீது, உன்புயம்
தமியேன் புணர்ந்து அறியேன்,
யாதொன்றும் பலகாலும்,
பயிலாமுன் இகழுதியோ,
தாதொன்று குழலாரும்
வேறு சிலர் தாமுளரோ,
தீதொன்றும் இலாதாற்கு ஈதும்
ஒரு செய்கையோ,

பொருள் : இம்மனையில் ஒரு பொழுதுதானும் உன்தோள் தழுவிப் புணர்ந்து இன்பம் பெற்றிலேன். என்னோடு இணைந்து எந்தவொரு செயலிலும் ஈடுபடாது - பல முறை என்னோடு கூடிவாழாது என்னை இகழ்தனையோ ? அன்றி, அன்றலர்ந்த - தேன் - சொறியும் மலர்கள் புனைந்த கூந்தலுடைய அழகிய பெண்கள் வேறும் சிலர் உமது மனையின்பத்திற்குரியவராய் உள்ளனரோ. தீச் செயல்கள் எதுவுமற்ற முனிவனான உமக்கு இது தக்கவொரு செய்கையோ.

40. செய்ய விதழ்க்கந்திருவக்கன்னிய ரோதெய்வகுலத் (௪0)
தையலரோ[25] வரக்கிய ரோவெவர்தாமோதமக்கன்பால்
வெய்ய தொருமாயத்தா லுனைக்கொடுபோய்[26] விட்டார்க
ளய்யனிராத்திரிகரனுக்கவரெல்லாமஞ்சாரோ

செய்ய இதழ்க் கந்திருவக்
கன்னியரோ, தெய்வ குலத்
தையலரோ, அரக்கியரோ
எவர்தாமோ, தமக்கன்பால்
வெய்யதொரு மாயத்தால்
உனைக்கொடுபோய் விட்டார்கள்
ஐயன் இராத்திரி கரனுக்கு
அவரெல்லாம் அஞ்சாரோ

பா.வே. 25 வியக்கியர், 26 விட்டனரோ

பொருள் : சிவந்த அதரங்களையுடைய கந்திருவக் கன்னியரோ அன்றித் தெய்வகுலத்தவரான தேவப் பெண்களோ- அரக்கமாதரோ- வேறேவரோ உம்மேல்கொண்ட அன்பால் கொடிய மாயஞ் செய்து கொண்டு சென்றுவிட்டனர். என் தந்தை இராத்திரிகரனுக்கு அவர்கள் அஞ்சமாட்டார்களா? அஞ்சுவரே.

41. அஞ்செழுத்துந்திருமார்பு மகன் மார்பிற் புரிநூலுஞ் (ச[1]க)
செஞ்செவியுங் குண்டலமுஞ் சடைமுடியுந்திரடோளும்
விஞ்சுமணந்தனிலென்னைக்கடைக்கணித்த விழிநோக்கும்
வஞ்சமற யான் காண வின்னமிங்ஙன்வருவாயோ.

அஞ்செழுத்தும் திருமார்பும்,
அகன்மார்பில் புரிநூலும்,
செஞ்செவியும் குண்டலமும்,
சடைமுடியும் திரள்தோளும்,
விஞ்சுமனம் தனில் என்னைக்
கடைக்கணித்த விழிநோக்கும்,
வஞ்சமற யான்காண,
இன்னமிங்ஙன் வருவாயோ.

பொருள்: சிவயநம என்ற ஐந்தெழுத்தும் புனித மொழியும், அழகு மிக்க தடமார்பும்- அந்த அகன்ற மார்பில் முப்புரிநூலும் சிவந்த செவியில் அமைந்த குண்டலமும்- அழகிய சடைமுடியும் -திரண்ட வனப்புமிக்க தோளும் -என்னை விருப்புடன் மணந்தபோது என்னை நோக்கிய அன்புகனிந்த அருள்மிகு கடைக்கண்பார்வையும் யான்காண இனி மீண்டும் இங்கு வாராயோ என்தலைவா?

42. வரும் போதப் போதென்னை மணம்புரிந்து கரம்பிடித்துத் (ச[1]உ)
தரும்போது தொடைசூட்டித்தழற்கடவுள் வலஞ்சூழ்ந்து
பெரும்போதிற்[27] பள்ளியறைபுகந்தளவிற் பிரிவோமென்
றிரும்போதமனத்தினினைந்[28] தெய்தினையோவறியேனே

வரும்போது, அப்போது என்னை
மணம்புரிந்து கரம்பிடித்துத்,
தரும்போது தொடை சூட்டித்
தழற்கடவுள் வலஞ்சூழ்ந்து,
பெரும்போதில் பள்ளியறை
புகுந்தளவில், பிரிவோம் என்று
இரும்போது மனத்தின் நினைந்து,
எய்தினையோ அறியேனே.

பொருள்: என்தலைவா! நீர்வந்து என்னைத்திருமணம் புரியக் கைப்பிடித்துத் தந்த போது, மலர்மாலை சூட்டித் தீக்கடவுளை வலஞ் சுற்றி,

---

பா.வே. 27 அமளியறை 28 இருந்தனையோ

நல்லோரையில் இரவு நேரத்தில் படுக்கையறை புகுந்த பொழுதே, பிரிவோம் என உன் பேரறிவு கொண்ட மனதிடை நினைந்து வந்தனையோ யான் அறியேன்

43. அறியேனைத்துயிலெழுப்பியறிவித்து வெறுத்தணையேற் (ச[1]ங)
சிறியேனையிவணிறுத்திச் [29] சென்றக்காற்றீங்குண்டோ
நெறியேபின்வரவெனினுநின் மொழியான் மறப்பேனொ
மறியேந்து மெம்பெருமான் [30] றிருவாக்குவழுவாமோ.

அறியேனைத் துயில் எழுப்பி
அறிவித்து வெறுத்தணையேற்
சிறியேனை இவண் நிறுத்திச்
சென்றக்கால் தீங்குண்டோ,
நெறியே பின்வரவெனினும்
நின்மொழி யான் மறப்பேனோ,
மறியேந்தும் எம்பெருமான்
திருவாக்கு வழுவாமோ,

பொருள்: எதனையுந் தெளிந்தறியாத வென்னை, நித்திரைவிட்டு எழுப்பி என்னில் உள்ள குறைபாட்டினை - தவறினை அறிவித்து; சிற்றறிவினளாகிய என்னை இவ்விடம் விட்டுச் சென்றனையாயின் தீச்செயல் எது தான் நிகழ்ந்திருக்கும், அன்றி என்வழியில் பின்னேவாவென்று அழைத்திருந்தால் உனது கூற்றினை யான் மறுத்திருப்பேனா? சத்தியைத்தன் பாகமாகக் கொண்டு கையினில் பெண்மானை ஏந்தி நடம்புரியும் எம்தலைவன் சிவனின் அருள் மொழியும் பொய்படுமோ குற்றம் பொருந்தி யதோ,!

44. வழுவறவென்குலத்தாதையுனைக்குறுகிவணங்கியநா (ச[1]ச[1])
ளழகியநின்மகட்குமணமது செய்வான் வரந்தந்தே
னெழுகெனநீயுரைத்தபடியிப்படிவைத்தே [31] குதற்கு
விழுமியமாதவற்கெல்லாம் பொய் சொல்விதியுண்டோ,

வழுவற என்குலத் தாதை,
உனைக் குறுகி வணங்கியநாள்,
அளகிய நின்மகட்கு மணமது
செய்வான் வரந்தந்தேன்
எழுக என, நீ உரைத்தபடி
இப்படி வைத்து ஏகுதற்கு
விழுமிய மாதவற்கு எல்லாம்,
பொய் சொல்ல விதி உண்டோ.

பொருள்: ஐயனே! குற்றமற்ற முறையில் என்தந்தை எங்கள்' குலத்தந்தை; என்னை அணைந்து வணங்கி நின்ற காலத்தில், என் தந்தையை நோக்கி உனது

---

பா.வே. 29 சென்றாக்கால் 30 திருவாக்கும் 31 ஏகுதற்கோ

அழகிய மகளை யான் மணம் செய்வேன் எனப்பகர்ந்து எழுந்து வந்தனை அவ்வண்ணமே செய்தனை. ஆயின் என்னை விலக்கிவைத்துச் சென்றனை. இவ்வண்ணஞ் செய்த செயல் உயர்ந்த தவத்தோர்க்கு அழகோ. பெருந்ததவத்தோர் பொய் சொல்வதற்கு என்ன விதியுண்டு.

45. உண்டோ வென்னுடன் முனிவுண்டானா லுரையாயேல் (ச[1]ரு)
[32] வண்டாடுங்குழற் சேடி மடவார்க்குமுரையாயோ
வெண்டோளாற்கருச்சனை செய்தெந்தை யெனை வரம் வாங்கிக்
கொண்டோகையாற் பெற்றான் மற்றிதற்கோ கோமானே

உண்டோ என்னுடன் முனிவு,
உண்டானால் உரையாயேல்,
வண்டாடும் குழற் சேடி.
மடவார்க்கும் உரையாயோ,
வெண் தோளாற்கு அருச்சனை செய்து
எந்தை, எனை வரம் வாங்கிக்
கொண்ட ஓகையால் பெற்றான்
மற்றிதற்கோ கோமானே.

பொருள்: என் அன்புக்குரிய தலைவனே ! என்மேல் உனக்குச் சினம் உண்டோ ? அப்படி இருந்திருக்குமேல் எனக்கு உரைக்கவில்லையே . தேன்வண்டுகள் குலவும் அன்றலர்ந்த மலர்கள் சூடிய என் தோழியர்க்குக்கூட உன் உள்ளக் கிடக்கையினைக் கூறமாட்டாயா? திருநீற்றினை அணிந்த வெண்மையுங் தூய்மையுங்கொண்ட தோளினையுடைய சிவனார்க்குப் பூசனை செய்த என் தந்தை அச்சிவன்பால் வரம் பெற்றான் . அவ்வரபலத்தால் மகிழ்ச்சி கொண்டு என்னை ஈன்று புறந்தந்தான். இவ்வண்ணம் என்தந்தை வரம் வாங்கிப் பெற்றது இத்தகைய இழி நிலை அடைவதற்கோ !

46. மானாரைப்புணராமற்றவம்புரியமதித்தனையோ (ச[1]சா)
லானாமலென்னையுடன் கொண்டேகினையேலடியேனுங்
கானாரு மலர்தந்தும் புனலளித்துங்கந்தமுடன்
றேனாரும்கனியீந்தும் பிரியாமற்றிரியேனோ

மானாரைப் புணராமல்
தவம்புரிய மதித்தனையேல்,
ஆனால் எனை உடன்கொண்டு
ஏகினையேல், அடியேனும்
கான் ஆரும் மலர் தந்தும்,
புனல் அளித்தும், கந்தமுடன்
தேன் ஆரும் கனி ஈந்தும்,
பிரியாமல் திரியேனோ,

பொருள் : பெண்களுடன் இணைவிளைச்சுச் செய்யாமல் தவம்புரிய உன் மனத்தில் எண்ணியிருந்தாயாயின், என்னையும் உன்னுடன் கூட்டிச்

பா.வே. 32 வண்டோடும்

சென்றிருக்கலாம். அவ்வண்ணம் செய்திருந்தால் உன் அடியவளாகிய யானும், சோலைகளில் உள்ள மணம் நாறும் நன் மலர்களைப் பூசனைக்குத்தந்தும், புனிதநீர் தந்தும், கிழங்குடன் தேன்சுவை கொண்ட இனிய பழங்களைத்தந்தும் உன்னைவிட்டு நீங்காது என்றும் திரியமாட்டேனோ? என்றும் நலம் படப் பணிசெய்திருப்பேனே.

47. நோற்கின்றதவங்களினு மறைமுதலாநூனீங்கள் (ச[1]எ)
பார்க்கின்ற கல்வியினுங் கைப்பிடித்த பாவையரைச்
சீர்குன்றத்தனியேவைத்தொருதனியே செய்தரும
மேற்கின்றதரும மென்ற துண்டோ வந்தியம் பாயே

நோற்கின்ற தவங்களிலும்,
மறைமுதலாம் நூல் நீங்கள்
பார்க்கின்ற கல்வியினும்,
கைப்பிடித்த பாவையரைச்
சீர்குன்றத் தனியே வைத்து,
ஒருதனியே செய்தருமம்,
ஏற்கின்ற தருமம் என்றது,
உண்டோ வந்து இயம்பாயே,

பொருள் : பெருந்தகையே! புலன் அடக்கிச் செய்கின்ற பெருந்தவங்களிலும்- நீங்கள் கற்ற மறைகளிலும் - ஆகமங்களிலும்- நீதி நூல்களிலும் - மற்றைய கல்வித் துறைகளிலும், வாழ்க்கைத் துணையாகக் கைப்பிடித்து ஏற்றுக்கொண்ட பெண்களை, அவர்கள் பெருமை சீர்கெட்டுப் போகும்படி தனித்திருக்க வைத்துச்செல்லும் ஆண்கள் செய்கின்ற - அறநெறி என ஒன்று உண்டோ? அப்படி உண்டாயின் அதனை எனக்கு வந்து கூறாயோ!

48. பாயிருளென்றொருபாவி வரப்பாவியேன்றுயின்றேன் (ச[1]அ)
போய தொருநினைவெறுக்கக்காரணமென்புகழோனே
சேயிருவிண்ணவருலகோவயனுலகோசிவனுலகோ
நீயிருக்கு முலகேது யானும்வரநிகழ்த்தாயே,

பாயிருள் என்றுஒரு பாவிவரப்,
பாவியேன் துயின்றேன்,
போயது ஒருநினைவு வெறுக்கக்
காரணம் என் புகழோனே,
சேயிரு விண்ணவர் உலகோ,
அயன் உலகோ, சிவன் உலகோ,
நீ இருக்கும் உலகேது,
யானும்வர நிகழ்த்தாயே,

பொருள்: சான்றோனே! மிகக் கொடிய பாவியாகிய இருள் வந்ததனால் புண்ணியப் பேறற்ற பாவியேன் நித்திரையில் முழ்கினேன். என்னை விட்டுப் போவதற்கு நீ என்னிடம் கண்ட குற்றம் என்ன? என்னை ஏன் வெறுத்தீர். தவத்தால் புகழ்கொண்ட என்தலைவா! நீ எங்கு சென்றனை? செம்மை சான்ற தேவருலகுக்கா

அன்றி நான்முகன் உலகுக்கா- அவற்றிலும் மேம்பட்ட சிவன் உலகுக்கா நீயிருக்கும் உலகு எதுவென அறியேன் அவ்வுலகுக்கு யானும் வரதற்கு எனக்கு அருள்வாயோ.

49. ஏனென்றாயில்லையினியிரங்கேலென்றாயுமில்லை (ச[1]கூ)
நானென்றாலுய்வதில்லைநன்முனிவர்குலக்கோவே
தேனொன்றுமொழியார்யான் செய்குறையுண் டென்னாரோ
வூனொன்றுந்தனியேயிங்குயிர்போயுமிருக்குமோ

ஏன்என்றாய் இல்லை, இனி
இரங்கேல் என்றாயும் இல்லை,
நான்என்றால் உய்வதில்லை,
நன்முனிவர் குலக்கோவே,
தேன்ஒன்றும் மொழியார்
யான்செய் குறையுண்டு என்னாரோ,
ஊன் ஒன்றும் தனியே, இங்கு
உயிர் போயும் இருக்குமோ,

பொருள்: சான்றாண்மை மிக்க முனிக்குலத் தலைவா! யான்படும் கொடுந்துயரை ஏனென்று நீ கேட்கவில்லை. இனிமேல் யானுனக்கு இரங்கமாட்டேன் என்றும் கூறவில்லை. இந் நிலையில் யான் எவ்வண்ணம் உய்வேன். தேன்போன்ற இனிய மொழிபகரும் நங்கையர்கள் யான் செய்த தவறு என என்னை வைவரே. உன்பிரிவால் உடல் சுருங்கிப் பசலை நோய் வாய்ப்பட்டுத் தனித்திருப்பேனோ- என் உயிர் உடலை விட்டுப் போகாதிருக்குமோ- என்செய்வேன்.

50. இருக்க முடியாது தனியென்ற[33]ழுதே விழுந்தாளம் (ரு0)
மருங்குழலார் பலரருகேவந்தவளையெடுத்தேந்திச்
சுருக்கழக முஞ்சொருகிச்[34] சோதிவிழிநீர்துடைத்து
நெருக்குமிளமுலைநல்லாய் நீயிரங்கலெனமொழிந்தார்.

இருக்கமுடியாது தனியென்று
அழுதே வீழ்ந்தாள், அம்
மருக்குழலார் பலர் அருகேவந்து,
அவளை எடுத்து ஏந்திச்
சுருக்கு அழகமும் சொருகிச்
சோதி விழி நீர்துடைத்து,
நெருக்கும் இளமுலை நல்லாய்
நீ இரங்கல் என மொழிந்தார்

பொருள்: நங்கை நல்லாள் இராத்திரிகரி, இனிமேல் தனிமையில் இருத்தல் இயலாதென அழுது புலம்பிக் கொண்டே நிலத்தில் வீழ்ந்தாள். அழகிய மருக்கொழுந்து போன்ற மணம்மிக்க கூந்தலையுடைய அவள் தோழிகள் அருகே வந்து தூக்கி அணைத்தனர். சுருண்ட அவளது அழகிய கூந்தலை அள்ளி முடித்தனர்.

பா.வே. 33 அழுதாள் கீழ்விழுந்தார், 34 சொரிவிழிநீரும்

ஒளிமிக்க அழகியகண்களில் இருந்து வழியும் நீரிணைத்துடைத்தனர். பின்பு அவளை நோக்கி, நீக்கமின்றி இணைந்து நிற்கும் இளங் கொங்கைகளைக் கொண்ட நல்லியல்பு பொருந்திய நங்கையே, நீ இரங்கித் துன்புறல் வேண்டாம் என மொழிந்தனர்.

51. மொழிமறையுந்தவநெறியுமுழுதுணர்ந்த முனிதானே (ருக)
பழியிது வென்றறியானே பாவமிதென்றெண்ணானே
விழியிணைநீர்ததும்பவுனைவிடுத்திருப்பதும் முறைமைக்
கிழிவெனவு மெண்ணானேலிவ் வுலகங் கொள்ளுமோ

மொழிமறையும் தவநெறியும்
முழுதுணர்ந்த முனிதானே,
பழி இதுவென்று அறியானே
பாவம் இது என்று எண்ணானே,
விழி இணை நீர்ததும்ப
உனைவிடுத்து இருப்பதும் முறைமைக்கு
இழிவு எனவும் எண்ணானேல்
இவ்வுலகம் கொள்ளுமோ.

பொருள் : மறைகள் நவிலும் புனித மொழியினையும் அவ்வழித் தவ நெறியினையும்- தெளிவுபட உள்பொருள் எதுவென உணர்ந்த முனிவனல்லவா விச்சிரவாகு, அவன் தன் செயல் பழியுடையதென அறிய வில்லையா? உனது இருகண்களிலும் நீர்ததும்பி வழிய உன்னைத் தன்செயலால் பாவவினை சூழுமென எண்ணவில்லையா? தனித்திருக்கவிட்டிருப்பது அறவாழ்வுக்கு இழிவுடைய தென்று எண்ண வில்லையே. இத்தகைய செயல் உயர்ந்தோர்மாட்டிருந்தால் உலகம் தாங்குமோ எனத் தோழியர் பகர்ந்தனர்.

52. கொள்ளுகையும் பெரியோர் தாங்[35]குறையையுமியாமறிவோமோ (ருஉ)
தெள்ளருவிப் பெருங்கிரிக்கேதவனெறிக்கேசென்றானோ
வெள்ளநதிப்புனித நீர்க்கெய்தின னோமீண்டின்ன
முள்ளுருகிவாரா தொழியானீ துயர மொழி கென்றார்

கொள்ளுகையும் பெரியோர் தம்
குறையையும் யாம் அறிவோமோ,
தெள்ளருவிப் பெருங் கிரிக்கே
தவநெறிக்கே சென்றானோ,
வெள்ள நதிப் புனிதநீர்க்கு
எய்தினனோ, மீண்டின்னம்
உள்ளுருகி, வாராதொழியான்,
நீ துயர் ஒழிகென்றார்.

பொருள்: உயர்வுடையோரின் நோக்கத்தினையும் அவர்களுக்கு ஏற்படும் குறைகளையும் எம்மால் அறிதல் இயலாது. முனிவன் உன்தலைவன்.

---

பா.வே. 35 குறிப்பை

புனிதநீர் அருவிபாயும் கந்தமாதனமலைக்குத் தவஞ் செய்யச் சென்றனனோ- அன்றி நீர் பெருக்கெடுத்தோடும் புனிதகங்கைக்குச் சென்றனனோ தெரியவில்லை. உளம் கசிந்து அன்பு செய்ய வாராது விடமாட்டான் . உன்துயரத்தை விடுவாயாக எனத் தோழியர் கூறினர்.

53. என்றலு மவ்வுரை கேட்டவிலங்கிழையுமகங்குழைந்து (ருங)
சென்றகதிர் வரக்காணாத்தாமரை போற்சீரழிந்து
துன்றுமழையிலாதிரங்கு தோகையும் போலத் தோகை
யன்றுமுனி சென்றவழியினைப்பார்த்தே யாங்கிருந்தாள்.

என்றலும் அவ்வுரை கேட்ட
இலங்கிழையும், அகம் குழைந்து
சென்ற கதிர் வரக்காணாத்
தாமரைபோல் சீரழிந்து,
துன்றும் மழையிலாது இரங்கு
தோகையும் போலத், தோகை
அன்று முனி சென்ற வழியினைப்
பார்த்தே ஆங்கு இருந்தாள்.

பொருள்: அழகிய சித்திர வேலைப்பாடு கொண்ட அணிகள் பூண்ட மங்கை நல்லாள் இராத்திரிகரி, தோழியரின் இனிய ஆறுதல் மொழிகளைக் கேட்டு உள்ளம் குழைந்து நெகிழ்ச்சியுற்றாள். சென்று மறைந்த கதிரவன் மீண்டும் வராததனால் மலர்ச்சியினை இழந்த தாமரை மலர் போல் வனப்பிழந்தாள். மழைமுகில் காணாத் தோகைமயில், தன் ஆட்டம் இழந்து வாடி நிற்பது போல் சோர்வுற்று ஏங்கினள். இத்தகைய மெய்பாடுகள் உள்ளத்திலும் உடலிலும் ஏற்பட்டுத் துன்பஞ் செய்யத் தன் தலைவன்- முனிவன் சென்ற வழியினை நோக்கி அவ்விடத்திலேயே இருந்தனள்.

## வேறு

54. இருந்துயர் கொண்டிங்கி வளிருந்தனள். (ருச[1])
விரிந்தகந்தமாதனமிசைக்கணே
பொருந்து[36] மாநிழற்றபுற்று மூடுற
வருந்தவஞ் செய்தேயவனிருந்தனன்.

இருந்துயர் கொண்டு இங்கு இவள் இருந்தனள்,
விரிந்த கந்தமாதனம் மிசைக்கணே,
பொருந்து மாநிழற் புற்று மூடுற,
அருந்தவம் செய்தே அவன் இருந்தனன்.

பொருள்: இராத்திரிகரி யென்ற நங்கை பெருந்துயருக்குட்பட்டு தன் வாழ்விடத்தில் இருந்தனள். முனிவன் அகன்று பரந்த கந்தமாதன மலையிடத்துப் பொருந்திய பெரும் ஆல்நிழலில் புற்று மூடிய நிலையில், பெருந் தவத்தினைச் செய்து கொண்டிருந்தனன்.

---

பா.வே. 36 மால்நிழல்,

55. இருநிலம் பெறும் பிரமனென்பவன் (ருரு)
றருமகற்கொருதனயனானவ
னருமைமெய்த்தவத்தலது வேறுவே
றுரிமையிற்கருத்தொன்று மெண்ணிலன்

இரு நிலம் பெறும் பிரமன் என்பவன்,
தரு மகற்கு ஒரு தனயன் ஆனவன்,
அருமை மெய்த்தவத்து அலது, வேறு வேறு
உருமையில் கருத்து ஒன்றும் எண்ணிலன்.

பொருள்: பேருலகினைப் படைத்த பிரமன் பெற்றெடுத்த மகனான புலத்திய முனிவனின் ஒரே மகன், விச்சிரவாகு முனிவன். இவன் தவம் செய்யும் பணியினைத் தவிர எத்தகைய எண்ணத்திற்கும் இடங்கொடாது இருந்தனன்.

56. இலகும்யோக மிவ்வகையிருந்துழி (ருசா)
யுலவுமான்மரத்தும்பர் கொம்பின்மேற்
[37] குலவுபுட்குலம் பேடைகூடவோ
[38] ரலகிலாதபேரண்டன்வாழுமால்

இலகும் யோகம் இவ்வகை இருந்துளி,
உலவும் மான்மரத்து உம்பர் கொம்பின்மேல்,
குலவு புட்குலம் பேடை கூட ஓர்
அலகிலாத * பேரண்டன் வாழுமால்,

பொருள்: முனிவர் தன் தவச்செயலில் கருத்தொன்றும் எண்ணாது இருந்த போது, அவன் தவஞ்செய்யும் இடத்தில் அமைவுற்ற பெருமரத்தின் மேல்கிளையில், குற்றம் குறையற்ற * பேரண்டன் என்ற பெயர் கொண்ட பறவையொன்று, அன்புடன் குலவி இன்புறும் பேடுடன் வாழ்ந்திருந்தது.

* பேரண்டன் = காக்கையென்பர்

57. ஆலமர்ந்த பேரண்டன் மற்றொர்நாட் (ருஎ)
சூல மர்ந்தன்பேடை துய்த்திடச்
சீலவுண்டி கொண்டின்று சேர்வனென்
றேல மென்பெடை விடுத்தெழுந்ததே

ஆலமர்ந்த பேரண்டன் மற்றொரு நாள்,
சூல் அமர்ந்த தன்பேடை துய்த்திடச்,
சீல வுண்டி கொண்டு இன்றுறு சேர்வன் என்று,
ஏலமென் பெடை விடுத்து எழுந்ததே,

பொருள்: ஆலமரத்தில் தன்பேட்டொடு வாழ்ந்து வந்த பேரண்டன் என்ற பெயர் கொண்ட ஆண் பறவை, தன் சூழ்கொண்ட பேட்டுக்கு இன்று உண்பதற்கு, நல்லுணவு கொண்டுவருவேன் என எண்ணித் தன்னினியதுணையைத் தனியே விட்டுச் சென்றது.

---

பா.வே. 37 குலவுதன் குலப்பேடுடொடு, 38 அலகுசொல்லுங் கோரண்டம்

58. தேடுகுன்றமுந்திசையும் வாவியுங் (ருஅ)
காடு மெங்கணுஞ் சிறகுகால் விரித்
தோடிநீடு தூரத்தொருண்டிகன்
டாடிவாய்மடுத்தகமகிழ்ந்ததே

தேடு குன்றமும், திசையும் வாவியும்,
காடு எங்கணும் சிறகு கால் விரித்து,
ஓடி நீடுதூரத்து ஒருஉண்டி கண்டு,
ஆடி வாய் மடுத்து அகம் மகிழ்ந்ததே,

பொருள்: பேரண்டன், மலையும் திசையும் குளமும் காடும் என்ற பல்வேறு இடங்களையும் தன் சிறகின் காற்று விசையால் ஓடிக் கடந்து மிக்க தூரத்தில் உணவு ஒன்றினைக்கண்டது, அதனால் மகிழ்ச்சி கொண்டு ஆடி அவ்வுணவை வாயில் ஏந்தி உளம் மகிழ்ந்தது.

59. மகிழ்ந்து புள்ளுமீள்வழி கொடேகலு (ருகூ)
நிகழ்ந்த செங்கதிர்க் கடவுள்ணீள் பரி
யகழ்ந்தமேல்கடற்கரையடைந்தது
திகழ்ந்த வந்தி வானிருள் சிறந்ததே

மகிழ்ந்து புள்ளும் மீழ்வழிகொடு ஏகலும்,
நிகழ்ந்த செங்கதிர்க் கடவுள் நீள்பரி,
அகழ்ந்த மேல்கடல் கரை அடைந்தது,
நிகழ்ந்த அந்திவான் இருள் சிறந்ததே,

பொருள் : உள்ளம் மகிழ்ந்த பறவை தன்னிருப்பிடம் நோக்கி மீழ்வதற்குரிய வழியிற் செல்லலும், பகல் செய்த செங்கதிர்க் கடவுளாள சூரியனின் தேரிற்பூட்டிய குதிரைகள் ஆழம்மிக்க மேற்குத் திசைக் கடலினை அடைந்தன. அதனால் அந்திவானத்தில் இருள் சூழ்ந்தது.

60. தேடுமேயெனைச்சினைவயிற்றுடன் (சா0)
வாடுமே வரும் வழியை நாடியென்
பேடுவீடுமேயென்று [39] துன்புறா
வோடியோடி மென்சிறகரோய்ந்ததே

தேடுமே எனைச் சினை வயிற்றுடன்
வாடுமே வரும் வழியை நாடி, என்
பேடு வீடுமே, என்று துன்புறா,
ஓடி ஓடி மென்சிறகர் ஓய்ந்ததே.

பொருள்: கருவினைத் தாங்கிய என் துணைப் பேடு என்னைத் தேடுமே. காணாது துயர் கொண்டு வாடுமே. நான் வந்தவழி பார்த்துத் தேடி நோக்குமே என்று துன்புற்று ஓடி ஓடித் தன்மென் சிறகு ஓயக் களைப்புற்றுது பேரண்டன்.

---

பா.வே. 39 பேதுறா

61. ஒயுமோயு நின்றுன்னு[40] முன்னுமே (சாக)
மாயுமாயுமவ்வழியி[41] ருட்டெலாம்
போயுமீளும்வாய்புலரும் வெய்யவன்
சாயுமோவெனக் கொடுமைசாற்றுமால்

ஒயும் ஒயும் நின்று உன்னும் உன்னுமே,
மாயும் மாயும் அவ்வழி இருட்டெலாம்
போயும் மீளும் வாய்புலரும் செய்யவன்
சாயுமோ எனக் கொடுமை சாற்றுமால்

பொருள் :உணவுகொண்டு எழுந்த பேரண்டன் பறந்தோடிக்களைப்புற்று ஒய்ந்து ஒய்ந்து மீண்டும் மீண்டும் முயலும். அதன் முயற்சி கைகூடாததனால் துன்புற்றுத் துன்புற்று வருந்தும். அங்குள்ள வழிகளெல்லாஞ் செல்லும், இருட்டினால், வழிதெரியாது மீழும். களைப்பினால் வாய் புலரும் கதிரவன் மறைந்தனனோ- என்னே கொடுமையெனக் கூறும்.

62. மாலிருட்கடல்வந்துமூடலு (சாஉ)
மாலினிற்[42] கரிதரிதுபோவதென்
றோலமிட்டுறைந்துடலலைந்துசெஞ்
சேலடுத்ததோர்வாவி சென்றதே

மால் இருட்கடல் வந்து மூடலும்,
ஆலினுக்கு அரிதரிது போவதென்று,
ஒலம் இட்டு உடல் அலைந்து செம்,
சேல் அடுத்ததோர் வாவி சென்றதே,

பொருள் : மயக்கம் செய்யும் இருளாளாய பெருங்கடல் செறிந்து பரவுதலும் ஆலமரத்திற்கு இனிப் போவது அருஞ் செயலாகும். அது இனி இயலாது எனக் கூக்குரலிட்டு மனம் வெதும்பி உடல் களைப்புற்றுத் தாமரைமலர்நிறைந்த ஓர் நீர்த்தடஞ் சென்றது பேரண்டன்.

63. சென்றொராயிரஞ் செவ்விதழ்ப்புறந் (சாங)
துன்றுதாமரைத்துய்யநாண்மல
ரொன்றின் மீதிரண்டடியுமூன்றிநின்
றன்றிராவெலாமவனிருந்ததே

சென்றொரு ஆயிரம் செவ்விதழ்புறம்,
துன்று தாமரைத் துய்ய நாண்மலர்,
ஒன்றின் மீது இரண்டடியும் ஊன்றி நின்று,
அன்று இராவெலாம் அவன் இருந்ததே,

பொருள்-: அவ்வண்ணம் சென்ற பேரண்டன் ஆயிரம் சிவந்த இதழ் கொண்ட புறம் குவிந்த கூம்பிய தாமரை மலர் மீதில் தன் இரு அடிகளையும் ஊன்றி நின்று அன்றைய இரவெல்லாம் அவ்விடத்திலேயேயிருந்தது.

---

40 உன்னுமெய், 41 இருட்டலாற் 42 இனியரியது.

64. இருள்பரந்திங்[43]கண்டனின்னமும் (சாச[1])
வருகிலன்னிதுமாயமோவெனாக்
கருவயிற்றுடன்சிறகுகால்புடைத்
துருகுபேடைநின்றுழலுமங்கரோ

இருள் பரந்தது, இங்கு அண்டன் இன்னமும்
வருகிலன், இது மாயமோ! எனாக்
கரு வயிற்றுடன் சிறகு கால் புடைத்து,
உருகு பேடை நின்றுழலும் அங்கரோ

பொருள்: இருள் எங்கும் பரந்தது. இங்கு அண்டன் இன்னும் வரவில்லை. இது என்ன மாயமோ என்று நினைந்து, கருக்கொண்ட வயிற்றுடன் இரு சிறகுகளையும், காற்றுப்புறப்படும்படி கால்களுடன் சேர்த்து அடித்துக் கொண்டு மனம் வெதுப்புற்று நெகிழப் பேடானது வருந்தி வேதனைப்பட்டது.

அரே ஈற்றசை

65. அங்குமிங்கு[44] நாமாகநீதனித் (சாரு)
தெங்கணேகினை யெவர்தடுத்தனர்
கங்குல்வாய்வழிகாணொணணாது போயத்
தங்கினாய் கொ லோதாமதஞ்செய்தாய்

அங்கும் இங்கும் நாமாக நீ தனித்து
எங்கண் ஏகினை எவர் தடுத்தனர்,
கங்குல் வாய்வழி காணொணாது போய்த்
தங்கினாய் கொலோ, தாமதஞ் செய்தாய்,

பொருள்: அங்கும் இங்குமாக நாம் இருவரும் பிரிந்தோம். நான் இங்கிருக்கின்றேன். நீதனிவழி எங்கு சென்றனை. உன்னை யார் தடுத்தார். இருள்வழி சென்று வழிதடுமாறி நான் காணமுடியா விடத்தில் தங்கினையோ? நீ என்னிடம் வருவதற்கு ஏன் தாமதஞ் செய்தனை.

66. செய்யவாயிரைதேடிவந்தது (சாசா)
முய்யநான்மகிழ்ந்துண்டிருந்ததும்
வெய்யதோரிராவினைவிளைத்தது
மையகோவிதென்றழகிதாயதே

செய்ய வாயிரை தேடி வந்ததும்
உய்ய நான் மகிழ்ந்து உண்டிருந்ததும்
வெய்யதோர் இராவினை விளைத்ததும்
ஐயகோ இதென் அழகிதாயதே

பொருள்: செம்மை வாய்ந்த உணவினை உன்சீர் பெற்றவாயினால் தேடிவந்ததும், நான் உய்யும்படி உண்டு மகிழ்ந்திருந்ததும்போய், துன்பம் மிகுந்த இந்த இரவினை நான்பெற்றதும் அழகிதாமோ. ஐயகோ இது என்னே கொடுமை.

---

பா.வே. 43 சேரண்டன் 44 நானாக

67. ஆயபுள்ளெலாமடவியெங்கணும் (சாஎ)
போயும் வாயிரைபுசிப்பதில்லையோ
மேயநீயும்போய்மீள்வதில்லையோ
தீயதின்றையிற் [45] செய்வதென்கொலோ

ஆய புள் எலாம் அடவி எங்கணும்,
போயும் வாயிரை புசிப்பது இல்லையோ,
மேய நீயும் போய் மீள்வது இல்லையோ,
தீயது இன்றையில் செய்வது என்கொலோ,

பொருள்: பறவையினங்களெல்லாம் காடு எங்கும் சென்று தம் வாயினால் உணவினை உண்பது இல்லையோ. உணவு தேடப்போகும் நீயும் சென்று மீள்வதில்லையோ. இன்று இத்தீச்செயல் நிகழ்ந்தது ஏன்.

68. என்னையும் மறந் எங்ஙனேனுமோர் (சாஅ)
கன்னியம் பெடை கண்டுளாய் கொலோ
வுன்னையன்றி யென்னுயிரிருக்குமோ
மன்னவென்றுதன் வாயரற்றுமால்

என்னையும் மறந்து எங்ஙனேனும், ஓர்
கன்னி அம்பெடை கண்டுளாய் கொலோ,
உன்னையன்றி என் உயிர் இருக்குமோ,
மன்ன என்று தன் வாயரற்றுமால்.

பொருள்: மன்னா! என் தலைவனே !! என்னை மறந்தனையோ வேறு எங்கேனும் கன்னிமைமிக்க அழகிய பேட்டினைக்கண்டனையோ. அதனுடன் உன் வாழ்வினை இணைத்துக் கொண்டனையோ? உனை மறந்து வாழ்வேனோ? என்னுயிர் இனி உடலில் இருக்குமோ? எனத்தன் வாயினால் பேடு துன்புற்று அரற்றியது. ஆல் ஈற்றசை

## வேறு

69. மாலுறுமிதயத்தோடு பேடையிவ்வருத்தங்கூர (சாகூ)
மேலுறுதுயரோ [46] டன்டன்கமலத்து மேவுங்காலைப்
பாலுறுமதியை நீக்கிப்பனியிருளகற்றி யொற்றைக்
காலுறுபரித்தேர் வீரன் குணதிசைக்கடலில்வந்தான்.

மாலுறும் இதயத்தோடு பேடை,
இவ்வருத்தங் கூர,
மேலுறு துயரோடு அண்டன்
கமலத்து மேவுங்காலைப்,
பாலுறு மதியை நீக்கிப்,
பனியிருள் அகற்றி, ஒற்றைக்
காலுறு பரித்தேர் வீரன்,
குணதிசைக் கடலில் வந்தான்.

பொருள்: துன்பத்தால் மயக்கமடைந்த உள்ளத்துடன் இருந்த பேடானது தன் வருத்தத்தினைக் கூறிப் புலம்பியிருந்த வேளையில் - அண்டன் அதனிலும் மிக்க துன்பத்துடன் தாமரை மலரில் இருந்தனன். அவ்வேளையில் பால் போன்ற நிலவினைத்தரும் சந்திரனை விலக்கிக் கொண்டு குதிரைகள் பூட்டிய ஒற்றைக்கால் தேரில் கதிரவன் கீழ் திசைக் கடல் வந்தனன்.

பா.வே. 45 செய்கை 46 கேரண்டன்,

70. வந்தது வெயிலின் சோதி[47] வரி வண்டு திரண்டு பாடக் (எ0)
கந்த மென்பொகுட்டு மூடு மிதழெனுங்கதவுநீங்கம்
புந்தியின் மகிழ்ந்தகஞ்சம் போல வேர [48]ண்டனெஞ்ச
மந்தியிற்புகுந்தன்பமடங்கலும் போயிற்றாங்கே.

வந்தது வெயிலின் சோதி
வரிவண்டு திரண்டு பாடக்,
கந்தமென் பொகுட்டு மூடும்
இதழ் எனும் கதவு நீங்கப்,
புந்தியின் மகிழ்ந்த கஞ்சம்
போலவே, அண்டன் நெஞ்சம்,
அந்தியில் புகுந்த துன்பம்
அடங்கலும் போயிற்றாங்கே,

பொருள்: அழகிய வரிகளையுடைய வண்டுகள் கூட்டமாய் ஒன்றிணைந்து இன்னிசை பாடிவரவேற்கக் கதிரவன் தன் ஒளியினைப்பரப்பி வந்தனன். அவ்வேளையில் மணம் மிக்க தாமரை மலர்கள், தம் இதழ்களாகிய கதவினைத் திறந்து மரகந்தப் பொடியினைப் பரப்பி மனம் மகிழ்ந்து முகம் செம்மைபடர்வதுபோல, அண்டனின் உள்ளமானது, அந்திவேளையில் புகுந்த துன்பம் நீங்க தன் பேடை தங்கியிருக்கும் ஆலமரத்தை நோக்கிச் சென்றடைந்தது.

71. ஆங்கறிவுடையோர்தம் மோடறிவு ளோர்கலந்தகாலைத் (எக)
தீங்குறி[49] லிருபாலோர்க்குஞ் செல்வமுநலமுஞ்சீரு
மோங்குறி[50]லிருபாலோர்க்குமாயிருந்துறைவரென்ப
தீங்குறு[51] கமலமேய் வேரண்டன் பாற்கண்டேமன்றே.

ஆங்கு அறிவுடையோர் தம்மோடு
அறிவுளோர் கலந்தகாலைத்,
ஈங்குறில் இருபாலோர்க்கும்
செல்வமும் நலமும் சீரும்,
ஓங்குறில் இருபாலோர்க்கும்
ஆயிருந்து உறைவர் என்பது,
ஈங்குறு கமலம் ஏய் ஏரண்டன்பால்
கண்டேம் அன்றே.

பொருள்: அறிவுடையோர் இருக்குமிடத்தில், அறிவுடையோர் வந்து கூடிக்கலந்தகாலை இருபாலார்க்கும் செல்வமும் நலமும் பெருஞ்சிறப்பும் ஒருங்கே வந்த சேரும், அவர்கள் அன்புறவு ஓங்கப்பெற்றால் இருபாலாரும் ஆக்கம் பெற்று நல்வாழ்வு வாழ்வர். இதனை இங்கு தாமரைமலரில் இரவு தங்கிக் காலையில் தன் பெடையொடு கூடச் சென்ற ஏரண்டன் பால் கண்டோம் அல்லவா.

72. கண்டதுவெயிலின்சோதி[52] யேரண்டன்களிப்புவீங்கிக் (எஉ)
கொண்டதோருண்டி நென்னற்க[53]துவியகூர்வாயோடும்
புண்டரீகத்தினின்று மெழுந்ததுபுடையில்வீசித்
தண்டலிற்சிறகுச்சண்டமாருதந்தயங்கிற்றம்மா

பா. வே. 47 வரிவண்டு பாட 48 கேரண்ட நெஞ்சத் 49 இருபாலோரும், 50 இருபாலோருமொருவழிப்படுவரென்ப 51. கமலமேவும் கேரண்டனிடங் கண்டேமால் பா.வே. 52 கேரண்டன் 53 கவ்விய

கண்டது வெயிலின் சோதி, ஓரண்டன்
களிப்பு வீங்கிக்,
கொண்டதோர் உண்டி, நென்னல்
கதுவிய கூர்வாயோடும்,
புண்டரீகத்தின் நின்றும் எழுந்தது
புடையில் வீசித்,
தண்டலில் சிறகுச் சண்டமாருதம்
தயங்கிற்று அம்மா,

பொருள்: கதிரவன் ஒளியினைக்கண்ட ஏரண்டன் மிக்கமகிழ்ச்சி கொண்டான். முதநாள் தேடியவுணவினைத் தன் கூர்வாயிடத்துக் கவ்விக் கொண்டு தாமரைமலரின் நின்றும் புறப்பட்டது. மகிழ்ச்சி கொண்டு புறப்பட்ட அவ்வெளிச்சியினால் சிறகுகளில் இருந்து வீசியகாற்றானது அயல் எல்லாம் பரந்தது. அதுதாவிப்பறந்ததால் சிறகிடத்திருந்து வீசியகாற்றினால் சண்டமாருதம் என்னும் பெருங்காற்றும் மெலிவுற்றது -அம்மா.

*அம்மா பொருள்சிறப்புற வந்த ஈற்றசை.*

73. மாயிருஞாலமுண்டோன் மலர்பதக்கலுழன் போலப் (எங)
போயதுவிசும்பினூடே வழியெதிர்புகுந்துபேடை
யேயெனவரற்றித்தேடி வயிறலைத்திரங்கி வீழ்ந்து
தீயவெந்துயரங்கூரும் காலங்குசென்றதன்றே.

மாயிரு ஞாலம் உண்டோன்
மலர்ப்பதக் கலுழன் போலப்,
போயது விசும்பின் ஊடே,
வழி எதிர் புகுந்து பேடை,
ஏயெனவரற்றித் தேடி
வயிறலைத்து இரங்கி வீழ்ந்து,
தீயவெந் துயரங் கூரும்கால்,
அங்கு சென்றதன்றே.

பொருள்: இவ்வுலகனைத்தையும் உண்ட அருள்த்திருவடிகளையுடைய திருமாலின் ஊர்தியான அழகியகால்களையுடைய கலுழன் போல், அண்டன் வானூடு பறந்து சென்றது. அண்டன் சென்ற வழி தேடி எதிர் சென்றபேடைபலவகையாகத் தன் துன்பத்தினை வாய்விட்டு அரற்றிக்கொண்டே கைகளாகிய சிறகால் வயிற்றினில் அடித்துக் கொண்டது. அவ்வேளையில் பேரண்டன் தன் பேடுவாழும் ஆலுகுச் சென்றது.

74. சென்றதன் சேவன்மேனி தாமரைச் செவ்விப் போதின் (எச[1])
மன்றலம்புதியசுண்ணமணப்பமுன்வரலும்பேடை
துன்றிருளுழந்தநோயுந்துயரமுமொழிந்ததன்க
ணின்றெரிபிறக்கநோக்கிநெடி துயிர்த்திருந்த தோர்பால்

---

பா.வே. 52 கேரண்டன் 53 கவ்விய

சென்றதன் சேவன்மேனி,
தாமரைச் செவ்விப் போதின்,
மன்றலம் புதிய சுண்ண மணப்ப
முன்வரலும், பேடை
துன்றிருள் உழந்த நோயும்,
துயரமும் ஒழிந்து, தன்கண்
நின்று எரிபிறக்க நோக்கி,
நெடிது உயிர்த்து இருந்தது ஓர்பால்.

பொருள்: தன் துணைவனான சேவல் தன்முன் வந்த வேளையில் பேடு அதனை நோக்கியது. சேவலின் உடலில் சிவந்த தாமரையின் மணம் மிக்க தாதுப் பொடிகள் மணம்பரப்பக் கண்டது. அதனால் துன்பஞ் சூழ்ந்த இரவில்; தான் கொண்ட நோயும் துயரமும் நீங்கியது. தன்கண்களிலிருந்து தீபோல் சினப்பொறி வெளிப்படச் சேவலை உறுத்து நோக்கி நீண்ட துன்ப -முழுச்சினை விட்டுக் கொண்டே ஒருபால் சென்றிருந்தது.

75. ஓர்புடையிருந்தபேடையூடலைக்கண்டு சேவல் (எரு)
சோர்வொடுநென்னன்மாலைதுயருழந்திருந்ததின்று
பேர்வறத்தமியேனிங்ஙன்வருதலும் பிரிந்ததென்மே
லார்வம்விட்டிருந்த தென்கொலெனப்[54] பரிந்தணைத்தன்றே.

ஓர்புடை இருந்த பேடை,
ஊடலைக் கண்டு சேவல்,
சோர்வொடு நென்னன் மாலை
துயருழந்து இருந்தது இன்று,
பேர்வறத் தமியேன் இங்ஙன்
வருதலும், பிரிந்த தென்மேல்
ஆர்வம்விட்டு இருந்தது என்கொல்,
எனப் பரிந்து அணைத்ததன்றே.

பொருள்: ஒருபால் சென்றிருந்த பேட்டின் சினத்தினை அதனால் எழுந்த ஊடலைச் சேவல்கண்டு, நேற்றுமாலை துயருற்றுச் சோர்வுற்றிருந்தேன். இன்று அத்துன்பம் நீங்க யான் இவ்விடம் வந்ததும் என்னை. வந்தணையாது பிரிந்து சென்றனை. என் மேல் உள்ள அன்பினை விட்டு இவ்வண்ணம் இருந்தேன் எனக் கேட்டு அன்பு மேலீட்டால் பேட்டினை அணைத்து.

76. அணைத்தலும் [55] பதைத்துப் பேடைசிறகிடையடங்காதாகி (எசா)
யிணைத்தனவாயிற்சேவலிரைதருவாயுந்தள்ளிப்
பணைத்தகான் மீதுகோத்தபடருகர்க்காலு நீக்கித்
துணைத்தகண்சிவந்த கண்டஞ்சுரித்து மெய்விதறிற்றம்மா

அணைத்தலும் பதைத்துப் பேடை,
சிறகிடை அடங்காதாகி,
இணைத்த தனவாயிற் சேவல்
இரைதரு வாயும் தள்ளிப்,
பணைத்த கால்மீது கோத்த
படருகிர் காலும் நீக்கித்,
துணைத்த கண் சிவந்த கண்டம்
சுரித்து, மெய் விதறிற்றம்மா.

பா.வே. 54 என வெண்ணியணைத்தன்றே 55 பணைத்து

பொருள்: சேவல் அணைத்தலும், பேடு பதைத்துச் சேவலின் அரைவனைப்பில் அதன்சிறகிடை அடங்காதாகி விலகிற்று. தன்வாயினையிணைத்து உணவூட்ட முயன்ற சேவலின் வாயினையும் புறத்தே தள்ளிற்று. தன் அழகிய திரண்டகாலுடன் இணைந்து படர்ந்திருந்த காலினையும் நீக்கியது. சேவலைக் கண்சிவக்க நோக்கியது. தன்கழுத்தைச் சுழித்து உடம்பினை அதன் பிடியிலிருந்து உதறித்தள்ளியது. அம்மா வியப்பிடை வந்த ஈற்றசைச் சொல்.

77. மாலையிற்கிடைத்தவுண்டி கொண்டிங்ஙன் வருமுன்வெய்யோன் (எஎ)
வேலையிற்படிந்தான் கஞ்சமீதொரு பொய்கைவைகிக்
காலையிற்கடிது வந்தேன் கலங்கிய துயரெண்ணாதென்
பாலயிர்த்திகழ்வதென்கொலென்றதுபரிந்து சேவல்.

மாலையில் கிடைத்த உண்டி கொண்டு,
இங்ஙன் வருமுன், வெய்யோன்
வேலையில் படிந்தான், கஞ்சமீது
ஒரு பொய்கை வைகிக்,
காலையில் கடிது வந்தேன்,
கலங்கிய துயர் எண்ணாது, என்
பால் அயிர்த்து, இகழ்வது என்கொல்
என்றது, பரிந்து சேவல்

பொருள் : பேட்டின் ஊடல் கண்ட சேவல்: நான் உணவுதேட மாலையாகி விட்டது. கிடைத்த உணவினை இங்கு கொண்டு வருமுன் கதிரவன் மேற்குத்திசை சென்று கடலில் புகுந்தனன். ஓர் நீர்த்தடத்தின் உள்ள தாமரை மலரில் இரவு தங்கினேன்.விடிந்ததும் மிகவிரைந்து உன்னிடம் வந்தேன் யான் பட்டதுன்தினைச் சிறிதும் நினையாது சலிப்படைந்து இகழ்வதேன் என அன்புடன் கேட்டது.

78. சேவலதுரைப்பப் பேடைநின்றிருமேனிச்செவ்விப் (எஅ)
பூவலர்மணப்ப வேறோர் பெடையொடு புணர்ந்து வந்தாய்
மேலவனின்னை யென்ன வென்னையோ வெறுத்தியென்பா
லாவல்விட்டிருந்தாயன்றியிருட்குநீயஞ்சுவாயோ

சேவல் அது உரைப்பப்,பேடை
நின் திருமேனிச் செவ்விப்
பூ அலர் மணப்ப வேறோர்
பெடையொடு புணர்ந்து வந்தாய்,
மேவலன் நின்னை என்ன,
என்னையோ வெறுத்தி, என்பால்
ஆவல்விட்டு இருந்தாய்,அன்றி
இருட்கு நீ அஞ்சுவாயோ,

பொருள்: சேவல் கூறியவற்றைக் கேட்ட பெடை , அதனை நோக்கி உனது அழகிய உடலில் பூவின் மகரந்தப் பொடிகள் உள்ளன. அவற்றிள் நறுமணம் வீசுகின்றது. நீ வேறொரு பெடையொடு இணை வினைச்சுச் செய்து வந்தாய்.இனி உன்னை விரும்பி அணை யேன். உன்னை,அணைக்கவும் விடேன் எனக் கூறிற்று. அதனைக் கேட்ட சேவல்,பேட்டினை நோக்கி, என்னை யோவெறுத்தனை யெனச் கேட்டது. அதற்குப் பேடு என்மேல் உள்ள விரும்பினை - அன்பினை விட்டிருந்தாய். அதுவன்றி வேறொன்றுமில்லை. இருளைக்கண்டு நீ அஞ்சவதில்லையே எனக் கூறிற்று.

79. அஞ்சுவையுண்டியென்கொலருந்துணையென்கொலிந்தப் (எகூ)
பஞ்சரமென்கொலிந்தப்[57] பார்ப்பென் கொல்பலவுமென்கொல்
வஞ்சகம்புரிந்தநின்கண்காணவேவலிதென்னாவி
துஞ்சுவதொன்றேநன் றென்றெழுந்தது துணிந்து பேடை

அஞ்சுவை உண்டி என்கொல்,
அருந்துணை என்கொல், இந்தப்
⁰பஞ்சரம் என்கொல், இந்தப்
*பார்ப் பென்கொல், பலவு மென்கொல்,
வஞ்சகம் புரிந்த நிண்கண்,
காணவே வலிதென் ஆவி,
துஞ்சுவது ஒன்றே நன்று என்று,
எழுந்தது துணிந்து பேடை.

பொருள்: அருமை வாய்ந்த இனிய சுவையுடைய உணவுதான் எதற்கு. நீயே எனது அரியதுணை என்பதால் என்ன பயன். இன்பம் பயக்கும் படுக்கை கொண்ட கூடுதான் எதற்கு. என்வயிற்றிலிருக்குங் குஞ்சுதான் எதற்கு. மற்றுஞ் சிறப்பு மிக்க இன்பம் பொருட்கள்தான் எதற்கு. என்னை வஞ்சித்து நடந்தனையே. வஞ்சனை செய்த உன்னைக் காணவே - உனது கண்ணின் பார்வைபடவே என் உடல் அணைத்தும் வலிக்கின்றது. இனி இறப்பது ஒன்றுதான் எனக்கு நலஞ் செய்வது எனக்கூறிய பேடு இறப்பதற்குத் துணிந்து எழுந்தது.

⁰பஞ்சரம் = கூடு. *பார்ப்பு = குஞ்சு

80. பேடையைவிலக்கிச் சேவ லுனையன்றிப்பிறவற்றோடுங் (அ0)
கூடயானென்றுமில்லைக்கூடியதின்றுமில்லை
வாடுதலொழிதித்தமனைவியர்சலிப்பவேறு
நாடுவர் புறம் போயென்றானரகமற்றதுபோ லுண்டோ

பேடையை விலக்கிச் சேவல்
உனையன்றிப் பிறவற்றோடும்,
கூட யான் என்றும் இல்லைக்,
கூடியது இன்றும் இல்லை,
வாடுதல் ஒழித்தி, தத்தம்
மனைவியர் சலிப்ப, வேறு
நாடுவர் புறம்போய் என்றால்,
நரகம் மற்றதுபோல் உண்டோ.

பொருள்: இறப்பதற்கு விரைந்தெழுந்த தன் துணைப்பேட்டினைத் தடுத்தசேவல் அதனை நோக்கி; அன்பே! உன்னைத்தவிரயான் பிறபேடுகளுடன் இணை விளைச்சினை என்று;மே செய்ததில்லை. இன்றும் அதனைச் செய்யவில்லை. இனிமேலும் அப்படிச் செய்யமாட்டேன். மனத்துன்பம் அடைந்து வாடுதலைக் கைவிடுக. தத்தமது மனைவியர் வேதனைப்பட வெறுப்படைய, வேறு பெண்களைப் புறத்தேபோய்த் தேடிக் கூடி வாழ்வது போல் இழிதகவு கொண்ட நரக வாழ்வு வேறுண்டோ? இல்லையே.

---

பா.வே. 57 பரிவு

81. உண்டொருவஞ்ச மென்பாலீங்கினிதுரைப்பன் கோண்மோ (அக)
வண்ட ருங்கிரியிலிந்த வாலின் மேற்புற்றூர்வைகு
முண்டகன் பேரனான முனிபுகுநரகம்யானு
மண்டுறப்புகுவேனென்று சேவல் வாய்மலர்ந்ததன்பால்

உண்டொரு வஞ்சம் என்பால்,
ஈங்கு இனிதுரைப்பக் கேண்மோ,
வண்டருங் கிரியிலிந்த ஆலின்
மேல் புற்றுள் வைகும்,
முண்டகண் பேரனான, முனிபுகும்
நரகம் யானும்,
அண்டுறப் புகுவேன் என்று, சேவல்
வாய் மொழிந்தது அன்பால்.

பொருள்: எனதன்பே! யான் ஒருவஞ்சினத்தை இவ்விடத்தில், உன் முன்னிலையில் பகர்கின்றேன். அதனை அன்புடன் கேட்பாயாக. பிறரால் அணுகுதற்கரியகந்தமாதனம் என்ற மலையில், வண்டுகள் தேனுண்டுகளிக்கும் சோலைகள் சூழ்ந்த இடத்தில், ஆலமரத்தின்கீழ் மேற்கித்திக்கில் ஒற்புற்றுண்டு. அப்புற்றிடத்திலிருந்து தவஞ்செய்யும் பிரமனின் பேரனான விச்சிரவாகு முனிவன் அடையும் நரகத்தினை யானும் அடைவேன் என்று சேவல் பேட்டினை நோக்கிக் கூறிற்று.

82. அன்புறுபெடையோடந்தச் சேவலன்றமைத்த வாய்மை (அஉ)
யன்புறுதவத்திநிற்குமுனிசெவியடுத்த லோடுந்
துன்புறுமனத்தி னெண்ணித்துண்ணென வெழுந்துநோக்கி
யென்பிறிதுரைத்தா யென்னைப்பறவைநீயிம்பு கென்றான்.

அன்புறு பெடையோடு அந்தச் சேவல்
அன்று அமைத்த வாய்மை,
அன்புறு தவத்தின் நிற்கும் முனி
செவி அடுத்தலோடும்,
துன்புறு மனத்தில் எண்ணித்
துண்ணென எழுந்து நோக்கி,
என்பிறிது உரைத்தாய் என்னைப்
பறவை நீ இயம்பு கென்றான்.

பொருள்: பேரண்டன் என்ற சேவல் தன்பேட்டுடன் அன்புடன் உரையாடிய கூற்றினை,-அன்புற்று நற்றவஞ் செய்யும் விச்சிரவாகுமுனிவன் கேட்டனன். அதனால் முனிவன் மனத்தில் துன்பம் புகுந்தது. அத்துன்பத்தினால் வேதனைப்பட்டு உலைவுற்றுப் புற்றைவிட்டு விரைந்தெழுந்தனன். எழுந்த முனிவன், சேவலை நோக்கிப் பறவையே நீ கூறியது என்ன? அதனை எனக்கும் பகர்வாயென்றனன்.

83. இயலறம்பொருளோடின்பம்வீடெனவிசைக்குந் தொன்னூல் (அங)
செயலுமின்பஞ் செய்துபின்பன்றோசேர்வார்வீடு
மயலொடு மனைவியங்ஙன்வருந்தவிங்கிருந்தநோன்பு
முயலிலென் முயன்றாயில்லையாகிலென்முனிவர் கோவே

இயலறம் பொருளோடு இன்பம்
வீடென இசைக்கும் தொன்னூல்,
செயலும் இன்பம் செய்து
பின்பன்றோ சேர்வார் வீடு,
மயலொடு மனைவி அங்ஙன்
வருந்த, இங்கு இருந்து நோன்பு
முயலிலென் முயன்றாய் இல்லை

*பொருள்:* முனிவர்களில் உயர்ந்தோனே! இயல்பாய் அமைந்தவாழ்வே அற நெறிக்குட்பட்டது. அதுவே உள் பொருள். தெளிவினைத்தருவது. நன்நெறிக்குரியது. அதனால் உலகியலில் பெறவேண்டிய நலமனைத்தையும் பெறுதல் இயலும். அதனால் வாழ்வின்பங்கிடைக்கும். அவ்வின்ப வாழ்வில் அமைதிகண்டவனுக்கே வீட்டின்பம்பெறும் பேறுண்டு. இது பழைமைமிக்க மறையின்முடிபு. எனவே இயற்கையாய் அமைந்த செயலைத் துறக்காது செயல் புரிதல் வேண்டும். ஆச்செயலே வாழ்வின்பந்தருவது. அதன்பின்பே ஆன்மவிடுதலைக்கு வழியுண்டு. உன்னைத்துணையெனக்கொண்ட உன்மனைவி, தன்வீட்டில் தனித்திருந்து ஏங்கித்துன்புற, நீ இங்கிருந்து பெருந்தவஞ் செய்வதில் பயன் என்ன? அவ்வண்ணம் செய்யாது விட்டால்தான் என்ன. உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமையே எனப் பகர்ந்தது சேவல்.

84. வேதநீ உரைத்தாயேனு மெய்த்தவம்புரிந்தாயேனு (அச1)
மாதவண்மயங்கும்பாவம் வருமுனக்கறுதியையா
பேதமிலென்பெடைக்குயானொருபிழைசெய்தேனேற்
பாதகமெனக்குமுன்போலிவ்வழிபலிக்கவென்றேன்.

வேத நீ உரைத்தாயேனும்,
மெய்த்தவம் புரிந்தாயேனும்,
மாதவள் மயங்கும் பாவம்,
வரும் உனக்கு அறிதி ஐயா,
பேதமில் என் பெடைக்கு
யான் ஒரு பிழை செய்தேனேல்,
பாதகம் எனக்கும் உன்போல்
இவ்வழி பலிக்க என்றேன்.

*பொருள்:* வேதம் உணர்ந்தவனே! நீ வேதத்தினை முறைப்படி ஓதினாலும், உள்பொருள் எது என உணர்வதற்குத் தவஞ்செய்தாலும், அவற்றினால் வரும் நலன்கள்; உனது செயலுக்குரிய பயனைத் தடுத்துவிடா. உனது மனைவி; தனித்திருந்து வருந்தும் கொடிய துன்பத்தினால் ஏற்படும் பாவத்தினை, நீவிலக்குதல் இயலாது. அப்பாவம் உன்னை உறுதியாக வந்தடையும். வஞ்சனையற்ற என்துணையான பெடைக்கு, யான் தவறு செய்திருந்தால் உன்போல் நானும் பழிக்கு உள்ளாவேன். இதுவே மறையின்முடிபு.

85. என்றுரை செய்ததந்த வேரண்டனிருடி நன்று (அரு)
நன்றிதுசரதமென்னவிதயத்துணாடி நாடி
நின்று நின்றேங்கியேங்கிநெடிதுயிர்த்துயிர்த்து விம்மித்
தன்றுணை விழிநீர்மல்கத்தையலைநினைந்து நைந்தான்.

---

பா.வே. 58 வேதமில்

என்றுரை செய்தது அந்த ஏரண்டன்

இருடி நன்று

நன்றிது சரதமென்ன,

இதயத்துள் நாடி நாடி,

நின்று நின்று ஏங்கி ஏங்கி,

நெடிது உயிர்த்து உயிர்த்து விம்மி,

தன் துணை விழிநீர் மல்க,

தையலை நினைந்து நைந்தான்.

பொருள்: பேரண்டன் உரையினைக்கேட்டமுனிவன்; இது நன்று- நன்று இது இயல்பு நெறிதான் என்று நினைந்து மிக்க வேதனைப்பட்டான். பெருமூச்சினைவிட்டு உயிர்த்துடிப்புக்கொண்டான். வேதனையால் விம்மினான். இருகண்களிலும் கண்ணீர் சொரிய தன் மனைவியை நினைந்து உள்ளம் நைந்தான்.

86. தானவர் பல்குங்காலம்பிறப்பதோதளர்ந்து நொந்து (அசா)
வானவரஃகுங்காலம் வருவதோமதிக்க வொண்ணாக்
கானமரளகக் கோதை இராத்திரிகரி தன்காதல்
போனதுமுனிக்கு மீண்டு புகுந்தது மனத்தினூடே

தானவர் பல்குங் காலம்

பிறப்பதோ, தளர்ந்து நொந்து

வானவர் அஃகும் காலம்

வருவதோ, மதிக்க ஒண்ணாக்

கானமர் அளகக் கோதை,

இராத்திரிகரி தன்காதல்,

போனதும் முனிக்கு மீண்டு

புகுந்தது மனத்தின் ஊடே.

பொருள்: அசுரர்கள் வாழ்வு பெறுங்காலம் வந்ததோ. தேவர்கள் வேதனைப்பட்டுத் துன்புறுங்காலம் வருவதோ. அவர்கள் இன்ப வாழ்வு குறுகியதோ எனக் கருதும் வண்ணம், இன்பந்தருஞ் சோவையில் துன்புற்றிருக்கும் அழகிய கூந்தலையுடைய போற்றற்கரிய பெருமைமிகு இராத்திரிகரி யென்பாள் மேல், விட்டுப் போன காதல் உணர்வு மீண்டும் முனிவனின் உள்ளத்தினூடே புகுந்தது.

87. ஊடுறுதுயராலன்னோனொருபது[59]வருடமாகத் (அஎ)
தாடுறுவேற்கண்ணாளைப்பிரிந்தநாளளவென்றெண்ணி
வாடுறுமனத்தனாகிவரையினுமிழந்து போயக்
கோடுறுமுலையாள் வைகுந்கொடி நகர்கடிதுபுக்கான்.

ஊடுறு துயரால் அன்னோன்,

ஒருபது வருடமாகத்

தாள் உறு வேற்கண்ணாளைப்

பிரிந்தநாள் அளவென்று எண்ணி,

வாடுறு மனத்தான் ஆகி

வரையினும் இழிந்துபோய், அக்

கோடுறு முலையாள் வைகும்,

கொடி நகர் கடிது புக்கான்.

---

பா.வே. 59 வருடமாய்த்

பொருள்: உள்ளத்தை ஊடறுத்த பிரிவுத்துன்பத்தினால், தன்னடி தொழும் தன்துணையைப் பிரிந்த காலத்தினை முனிவன் எண்ணினன். அது பத்து ஆண்டுகள் எனக் கணித்தனன். அவ்வெண்ணத்தால் மனவேதனைப்பட்டு வாட்டமுற்றான். அதனால் தான் தவஞ்செய்த கந்தமாதன மலையினை விட்டு நீங்கி நிமிர்ந்த முலைக்காம்புகள் கொண்ட செம்மை மிக்க தனங்களையுடைய தன் மனைவி வாழும், அழகு மிக்க கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட நகரிடை விரைந்து புகுந்தனன்.

## வேறு

88. புக்கனன்முனியெனப்பலருமுன்புகலலுந் (அஅ)
தக்கராத்திரிகரிதரிவுறாப்பிரிவினா
ணெக்கிநெஞ்சுருகிவந்தெதிர் கொடேநியமனைக்
கைகுவித்திருபதம்பரவினாள்கருணையால்

புக்கனன் முனியெனப் பலரும்
முன் புகலலும்,
தக்க ராத்திரிகரி தரிவுறாப்
பிரிவினால்,
நெக்கி நெஞ்சு உருகி வந்து
எதிர்கொடே நியமனைக்
கைகுவித்து இரு பதம்
பரவினாள் கருணையால்

பொருள்: முனிவன் நகருள்புகுந்தனன் எனப்பலரும் கூறினர். அதனைக்கேட்ட பெண்மை மிகப்பெற்ற இராத்திரிகரி, தன்துணைவனைப் பிரிந்து வாழ்ந்த பிரிவுத்துயரினை நினைந்து உளம் நைந்து நெகிழ்ச்சியுற, முனிவனான தன் கணவன் முன்னே எதிர்கொண்டு வந்தனள். அவனை இருகை கூப்பி வணங்கினாள். அன்பின் மேலீட்டால் இருபாதங்களையும் அணைத்து வணங்கி மகிழ்ந்தாள்.

89. கருணையங்கொழுநனைக்கடி மனைக்கொடுபுகுந் (அகூ)
தருணபங்கயமுகத்தழகெழுந்தணிகலந்
தருண கொங்கையிலணிந்தகின்மணந்தனை[60] யணிந்
திணருறுங்குழன் முடித்திருகண்மையெழுதினாள்.

கருணையங கொழுநனைக்
கடி மனைக் கொடு புகுந்து,
அருண பங்கயம் முகத்தழகு
எழும் அணி கலந்து,
அருண கொங்கையில் அணிந்து,
அகில் மணம் தனை அணிந்து
திணருறும் குழல் முடித்து,
இருகண் மை எழுதினாள்.

---

பா.வே. 60 அளைந்

பொருள்: தன்மேல் அன்பு கொண்டுவந்த கணவனைக் காவல் நிறைந்த தன்னழகிய மனையிடத்து இட்டுச்சென்றனள். அவ்வேளையில், அவள்முகம் அழகு மீதூர்ந்து சூரியனைக் கண்ட தாமரை மலர் போல் செழுமை பெற்று விளங்கியது. அவள் பல்வகைப்பட்ட அணிகளை அணிந்திருந்ததனால், அவற்றின் ஒளியால் அவளின் கொங்கைகளும் கொங்கைகளின் ஒளியால் அணிகளும் அழுகு பெற்றன. அகில்மணம் ஊட்டப்பட்ட அலையலையாய்த் திணறிப்பரந்த கூந்தலை ஒப்பனை செய்து, தன்கண்களுக்கும் மைதீட்டி அழுகு செய்தனள்.

90. எழுதரும் வடிவினாளவளுயிர்க்கணவனிப் (கூ0)
பொழுதும்வந்தனனெனப்பொருவரும் பதியுளார்.
முழுதுமத்தாதையுமுகமலர்ந்துருகினார்
பழுதிலா விருவருங்கலவியுட்பழகினார்

எழுதரும் வடிவினால், அவள்
உயிர்க் கணவன் இப்
பொழுதும் வந்தனன் எனப்,
பொருவரும் பதியுளார்
முழுதும் அத்தாதையும்,
முகம்மலர்ந்து உருகினார்,
பழுதிலா இருவரும்
கலவியுட் பழகினார்.

பொருள்: எழுதிக்காட்டுதற்கும் அரிய அவளது அழகின் சிறப்பால் அவளது உயிர்க்கணவன் இற்றைப் பொழுதாகிலும் வந்தன னெனப், பெருமை மிக்க அந்நாட்டகத்தார் அனைவரும் அவளது தந்தையும் மகிழ்ச்சி மேலீட்டினால் முகமலர்ச்சி பெற்று உள்ளம் மகிழ்ந்தனர். குறைவற்ற அனைத்துச் சிறப்புங் கொண்ட விச்சிரவாகு முனிவனும் இராத்திரிகரியும் இன்பவுணர்வால் தூண்டப்பட்டு ஒருவரோடு ஒருவர் இணைகலந்து பழகினர்.

91. நாரியும் முனிவனுநாடொறுங் கூடுறச் (கூக)
சேரும் விண்ணவர் செயுந் தீவினைத்திறனெலா
மோருருக் கொண்டதேயொப்பவப் பேதைபாற்
காருருக்கருவயிற்றுற்றதக்காலமே

நாரியும் முனிவனும்
நாள்தொறும் கூடுறச்
சேரும் விண்ணவர் செயும்
தீவினைத் திறனெலாம்
ஓர் உருக்கொண்டதே ஒப்ப
அப் பேதைபால்,
காருருக் கரு வயிற்று
உற்றது அக்காலமே,

பொருள்: நலம் சான்ற முனிவனும், அழகு மிகு கரி யெனும் நங்கை நல்லாளும் நாள் தோறும் இணைகலந்து இன்புற்றுச் சேர்வதனால், தேவர்கள் செய்யும் தீச் செயல்களின் பயனெலாம் சேர்ந்து ஓர்வடிவினைப் பெற்றது போன்று, பெரும் வலிமை சான்ற கரு அப்பெண்ணின் வயிற்றில் அவ் வேளையில் உருப் பெறலாயிற்று.

92. காலிளைத்திள [61] முலைக்கண்கறுத்திதழ்வெழுத் (கூஉ)
தாலிலைத்திருவயிற்றடி புடைத்த [62] தடிதடித்
தோலையிற்குழைபொரும்விழிகுழிந்[63]துடல்பழுத்
தேல்மடிச்சுவைபுளிப்பிவை சுவைத்தெய்தினாள்

கால் இளைத்து இளமுலைக்கண்
கறுத்து, இதழ் வெழுத்து,
ஆல் இலைத் திருவயிற்றடி
புடைத்து அடி தடித்து,
ஒலையிற்குழை பொரும் விழி
குழிந்து, உடல் பழுத்து,
ஏல்மடிச் சுவை புளிப்பவை
சுவைத்து எய்தினாள்

பொருள்: கால்கள் இளைத்தன. இளமுலைக்காம்புகளின் துணி கறுத்தது வாய்யிதழ் வெளிறியது. ஆல் இலை போன்ற வடிவமைப்புக் கொண்ட அழகிய வயிற்றின் அடிப்பாகம் விம்மி எழுந்தது தடிப்படைந்தது. அழகிய தோடணிந்த காதளவோடியகண்கள் குழி விழுந்தன. உடல் மாமைநிறால்கொண்டு பழுத்தது. கருக்கொண்ட அக்காலத்தில் விரும்பிய உணவுவகையையும் புளிச்சுவையினையும் நங்கை சுவைத்தாள்.

93. எய்து மவ்வ[64]வ்வநோயெவையும் வந்துறுதலும் (கூங)
பெய்தகோல் வளையினாளொருமகப் பெற்றனள்
[65] கையிரண்டொருபதுங்கதிரெயிற்றதரமோ
டையிரண்டானனந்தானுமுண்டதாயதே

எய்தும் அவ் அவயவ நோய்
எவையும் வந்து உறுதலும்,
பெய்த கோல் வளையினாள்
ஒரு மகப் பெற்றனள்
கை இரண்டொரு பதும்
கதிர் எயிற்று அதரமோர்
ஐயிரண்டு ஆனனம், தானும்
உண்டாகியே.

பொருள்:பேறுகாலத்துக்குரிய நோக்கள் உறுப்புகளிடையே தோன்றலும், கைகளில் தங்க அணிகள்பூண்ட அழகிய கரி என்பவள் மகவொன்றினை ஈன்று புறந்தந்தாள். அக்குழந்தை இருபது கைகளோடும், ஒளிமிக்க பற்களமைந்த இதழ்கள் கொண்ட பத்துத் தலைகளோடும் தோன்றியது.

---

பா.வே. 61 இணைமுலை, 62 இடைதடித்து 63 பசுந்தோல்மடித்து,
பா.வே 64 வயவு 65 கைகளோரிருபது 66 உண்டாகியே

94. ஆகமேபுய லுமாயசனியே சொல்லுமாய் (கூச)
வேகமாயடுசுடர்க் குஞ்சியாய்விஞ்சுமா
னாகநீள்பெலமுழைச் செவியுமாய்நவையிலா
வாகனாமகனைமின்மடியில்வைத்துருகினாள்

ஆகமே புய லுமாய்,
[0] அசனியேய் சொல்லுமாய்
வேகமாய் அடுசுடர்க்
குஞ்சுயாய், விஞ்சுமா
நாகநீள் பெலமுழைச்
செவியுமாய், நவையிலா
ஆகனாம் மகனை, மின்மடியில்
வைத்து உருகினாள்.

பொருள்: புயல் போன்ற உடல்வலி கொண்டவனாகவும், வானத்தில் தோன்றும் இடிமுழக்கம் போன்ற ஒலி கொண்ட சொற்களையுடையவனாகவும், மிக்க வேகங்கொண்டவனாகவும் வெப்ப ஒளி பரப்பும் சூரியக் கதிர் போன்ற தலைமுடியுடையவனாகவும், மிக்குயர்ந்த மலையிடத்தமைந்த குகை போன்ற காதுகளையுடையவனாகவும், எவ்வித குறைபாடுகளுமற்ற உடல் வளம் உடையவனாகவும் தன்வயிற்றிடைப்பிறந்த மகனை, இராத்திரிகரி, அழகிய ஒளிபொருந்திய மடியினில் வைத்து மனம் நெகிழ்ந்தனள்.

0 அசனி = இடிமுழக்கம்.

95. நாளுமப்பருமுலைப்பெருகுபானல்கிமின் (கூரு)
றோளணைத்தரதனத்தொட்டிலிட்டசைதரத்
தாளினிற்றடவ லுந்தளருமென்டையுமாய்
வாளெயிற்றிதழ் மழக்குமரனும் வளருநாள்

நாளும் அப்பருமுலைப் பெருகு
பால் நல்கி, மின்
தோள் அணைத்து, அரதனத்
தொட்டில் இட்டு அசைதரத்,
தாளினில் தடவ லும் தளரும்
மென்நடையுமாய்,
வாள் எயிற்று இதழ்
அழக் குமரனும் வளருநாள்

பொருள் : நாள்தோறும், பெருமுலையிடத்திருந்து பெருகும் பாலினையூட்டி, அவனது ஒளிமிக்க அழகிய தோள்களை அணைத்து, நாகமணிகற்களால் அழகு செய்யப்பட்ட சந்தனமரத்தாலான தொட்டில் இட்டு அதனை அசைத்தாட்டி மகிழ்வாள் அவன் அன்னை. அவன்தன் சிறிய அடியினை யூன்றி நிலத்தினைத் தடவித் தவழ்ந்தும், மெல்லடிவைத்துச் சிறுநடை செய்தும் அழகுமிக்க குழந்தையாய் வளரும் நாளில்; [0] அரதனத்தொட்டில் = நாகமணிபதித்த சந்தணமரத்தொட்டில்

96. வளருமாமதலையைமாதவத்தாதையும் (கூசா)
கிளருமார்புடணத்தருமறைக்கிரியையா
லழகுமென்சவுளமுமழ நமுந்நூலுமங்
குளமகிழ்ந்துதவினானுவகையாலுருகுவான்

பா.வே 64 வயவு 65 கைகளோரிருபது 66 உண்டாகியே

வளரும் மாமதலையை
மாதவத் தாதையும்,
கிளரும் மார்புடன் அணைத்து,
அருமறைக் கிரியையால்
அழகு மென் சவுளமும்
அழகு முந்நூலும் அங்கு
உளம் மகிழ்ந்து உதவினான்,
உவகையால் உருகுவான்.

பொருள்: வளர்கின்ற பெருமைமிகு தன்குழந்தையை; பெருந்தவமுனிவனான விச்சிரவாகு விம்மிதங் கொண்ட தன்மார்புடன் தழுவி அணைத்தனன். மறைநவின்ற முறைப்படி நற்செயற்குரிய சடங்குகளைச்செய்தனன். அதன்பின் அழகுமிக்க மென்மையான ஆடையினை அணிந்து முப்புரி நூலுமிட்டு உளம்மகிழ்ந்தனன். அம்மகிழ்ச்சியின் பெருக்கால் உள நெகிழ்ச்சி கொண்டான்.

97. உருவமாமைந்தனுக்குமைதிருப்பாகனார் (கூஎ)
தரும்வரம் வேண்டுமென்றெண்ணியத்தவமுனி
திருமகற்கொண்டுபோய்த்தெய்வ வான்கயிலைபுக்
கருநெறித்தவநிலென்றவனைவைத்தேகினான்

உருவ மா மைந்தனுக்கு,
உமைதிருப்பாகனார்
தரும் வரம் வேண்டும்
என்று எண்ணி அத்தவமுனி,
திருமகற் கொண்டு போய்த்
தெய்வ வான் கயிலை புக்கு,
அரு நெறித் தவநில் என்று
அவனை வைத்து ஏகினான்.

பொருள்: விச்சிரவாகுமுனிவன்; அழகுமிகக் கொண்ட பெருமைமிகு தன்மகனுக்கு, மலைமகளைத் தன் பாகமாய்க் கொண்ட சிவனாரின் நல்வரங்கள், வாழ்த்துக்கள் வேண்டுமென எண்ணினன். அவ்வெண்ணத்தால் உந்தப்பட்ட முனிவன் தன்மகனைத் தெய்வத்தன்மை பெற்ற பெருமைமிகு கயிலை மலைக்குக் கூட்டிச் சென்று அருமை பொருந்திய தவநெறியினைச் செய்க எனப் பணிந்து அங்கிருந்து சென்றனன்.

98. ஏகலுந்தீச்முகன்றவ[68]மெரிக்கிடைசெய (கூஅ)
நாககங்கணனுமுன்வந்து வாணாளவற்
காகமுக்கோடி தந்தகவிலங்கையுமளித்
தோகையாலிராவணப்பேருமன்றுதவினான்

ஏகலும் தசமுகன் தவம்
எரிக்கு இடைசெய,
நாக கங்கணனும் முன்வந்து,
வாழ்நாள் அவற்கு
ஆகமுக்கோடி தந்து,
தகவிலங்கையும் அளித்து,
ஓகையால் இராவணப் பேரும்
அன்று உதவினான்.

---

பா.வே. 67 தெசமுகன், 68 நதிக்கிடைசெய, 69 மாயோன் போந்து
70 மூன்று கோடி முதல்வவுணக்கீது

*பொருள்:* முனிவன் சென்றபின்; தசமுகன் எரியோம்பிச்செய்த தவத்தால், பாம்பணி பூண்ட சிவன் மகிழ்ந்து அவன்முன் தோன்றினன். தசமுகனுக்கு மூன்றுகோடி வாழ்நாளும் நல்வளமும் கொண்ட இலங்கைநாட்டினையும் கொடுத்து இராவணன் என்ற பெயருஞ்சூட்டி உதவினான்.

### வேறு

99. உதவுஞ்சிவன்பால்வரம்பெற்றுளவாளரக்கன் (கூகூ)
மதவெங்களிற்றின் வரம்[69] மான்மறையோனில்வந்து
முதுவிண்ணவருக்கு[70] முக்கோடி வாணளுனக்கீ
ததிகமிலைமீண்டரைக்கோடிவாங்கென்றறைந்தான்.

உதவும் சிவன்பால் வரம்
பெற்றுள வாளரக்கன்,
மத வெங் களிற்றின்வர,
மால், மறையோனின் வந்து,
முது விண்ணவருக்கும் முக்கோடி
வாழ்நாள், உனக்கீது
அதிகமிலை, மீண்டு அரைக்கோடி
வாங்கு என்று அறைந்தான்

*பொருள்:* புகழ்கொண்ட தசமுகன் சிவன்பால் வரம் பெற்று, மதம் கொண்ட சினம் மிக்கயானையைப் போல் மீண்டு வர, திருமால் ஓர் அந்தணன் வடிவு கொண்டு அவன் முன்னே தோன்றினன். அவ்வனம் தோன்றிய திருமால் தசமுகனை நோக்கிப் பழைமிக்க தேவர்களுக்கும் மூன்றுகோடி வாழ்நாள் உண்டு. அவர்களிலும் பார்க்க உனக்கு இது அதிகமான வாழ்நாள் அன்று, மீண்டும் அரைக்கோடி வாழ்நாளினை வாங்கென்று கூறினான்.

100. அறைந்தான்[71] மொழிகேட்டவ் வாளரக்கனரன் பாற்போய்ச் (க00)
[72] சிறந்தயோர்முக்கோடியரைக்கோடி நாளாகச் செய்தாற்
[73] புறந்தானிடுமென்பெரும்போர்க்குவானோர்தம்போரு
நிறந்தாழ்சடையாயெனத்தந் தேனென்றானிமலன்.

அறைந்தான் மொழிகேட்டு,
அவ்வாளரக்கன், அரன்பால் போய்,
சிறந்த ஓர் முக்கோடி
அரைக்கோடி நாளாகச் செய்தால்,
புறந்தானிடும் என் பெரும் போர்க்கு
வானோர்தம் போரும்,
நிறந்தாழ் சடையாய் எனத்,
தந்தேன் என்றான் நிமலன்.

*பொருள்:* மறையோனாக வந்த திருமால் கூறியதனைக்கேட்ட புகழ்கொண்ட தசமுகன்; மீண்டும் சிவனிடம் சென்று சிறந்த இம்முக்கோடி வாழ் நாளை அரைக் கோடியாகச் செய்தால், வானவர்களுடன் யான்செயும் போரில், அவ்வானவர்கள் புற முதுகிடுவர். செஞ்சடையுடைய பரனே! எனக்கு இவ்வரத்தினைத் தந்தருள்க என வேண்டினன். சிவனும் நீவிரும்பிய வண்ணமே தந்தேன் எனப் பகர்ந்தனன்.

---

*பா.வே. 67 தெசமுகன், 68 நதிக்கிடைசெய, 69 மாயோன் போந்து 70 மூன்று கோடி முதல்வவுனக்கீது பா.வே. 71 மொழியின்படியேயரக்கன்கயிலைசென்று 72 சிறந்தாய் மூன்றுகோடி அரைக்கோடி [illegible] செய்தாற் 73 புறந்தானிடுவர்போர்க்குப் போந்த தேவரெவரும்*

**101.** மலரார் தடங்கட்டிருமால்[74]புரிகின்றமாய (கºக)
மலராமனத்தானறியான்[75]களிப் போடகன்றான்
புலராமுகப்புன்முறுவல்[76]புல்வோரும்பூத்தார்
[77]செலராசிவெற்பாற்கடைந்தோனகைத்தேதணந்தான்.

மலரால் தடங்கண் திருமால்,
புரிகின்ற மாயம்,
அலரா மனத்தான் அறியான்,
களிப்பொடு அகன்றான்,
புலரா முகப் புன் முறுவல்
புலவோரும் பூத்தார்,
செலராசி வெற்பால் பால்கடைந்தோன்,
நகைத்தே தணந்தான்.

பொருள் : அன்றலர்ந்த தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமால் செய்கின்ற மயக்கம் நிறைந்த செயலினைப்புரியாது. தெளிவுறா மனத்தையுடையவனாகிய தசமுகன், அதனை அறியாது மகிழ்ச்சியுடன் சென்றான். தசமுகனின் வரபலத்தால், மகிழ்ச்சியிழந்து முன்முறுவலற்று ஏங்கியிருந்த தேவர்களும், மகிழ்ச்சி கொண்டு புன்முறுவல் பூத்தார். மந்தரமலையால் பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற்ற. திருமாலும் நகைத்துக்கொண்டே அவ்விடம் விட்டகன்றான்.

**102.** தணந்தான்கயிலைச்சயிலந்தனை [78] வாளரக்கன் (க0உ)
[79] மணந்தான் தனதூர்த்தமரோடுதந்தைதாய்மகிழக்
குணந்தான்[80] கொடியோன்குடியெடுத்தன்றுதன்குலத்தோர்
[81] கணந்தான்புறஞ்சூழக்கடலிலங்கை போய்க்கலந்தான்.

தணந்தான் கயிலைச்
சயிலந்தனை வாளரக்கன்,
மணந்தான் தனது ஊர்த் தமரோடு
தந்தை தாய் மகிழக்
குணந்தான் கொடியோன், குடியெடுத்து
அன்று தன்குலத்தோர்
கணந்தான் புறம்சூழக், கடல் இலங்கை
போய்க் கலந்தான்.

பொருள்: வீரப்புகழ்கொண்ட இராவணன் கயிலைமலையினைவிட்டு நீங்கினன் . அவ்வண்ணம் சென்றோன் தன் ஊரில் உள்ள உற்றார் உறவினரோடும் தந்தை தாயோடும் கூடினன். அதனால் அனைவரும் மகிழ்ந்தனர். அதன்பின் குணத்தால் கொடியவனான இராவணன், தனக்குரிய குடிகளும் உற்றார் உறவினரும் தன்புறத்தே சூழ்ந்து வரக், கடல்சூழ் இலங்கை சென்றடைந்தனன்.

---

74 வந்தமாயவியற்கை, 75 அளியினோடுமகன்றான், 77 சலராசியை வெற்பதனால் கடைந்தவற்றணந்தான். பா. வே 78 வாள்கொளரக்கன், 79மணந்ததாயுந்தந்தைமரபிலுள்ளயாருங், 80 கொடியனேனும்குடிக்ளோடுஞ் சென்று, 81 கணங்களாகிச்சூழக் கடற்கனிலங்கை கலந்தான்.

103. [82] கலனோடிலங்கைப்புயத்தான்கடல்சூழிலங்கைப் (கoங)
[83]புலனோடெறிக்குநகராய்ப்புகுந்தாளு மெல்லை
நலனோட[84]வன்றாயுலக்கையைவலக்கையாநளினத்
[85]தலனோடு பற்றிநெற்குற்றாளைக்கண்டுளந்தளர்ந்தான்.

கலனோடு இலங்குகைப் புயத்தான்,
கடல்சூழ் இலங்கைப்
புலனோடு எறிக்கும் நகராய்ப்
புகுந்து ஆளும் எல்லை,
நலனோடு அவன்தாய் உலக்கையை,
வலக்கையால் நளினத்
தலனோடு பற்றி, நெல்
குற்றாளைக் கண்டு உளந்தளர்ந்தான்.

பொருள்: அணிகள் பூண்டு விளங்குகின்ற கைகளையும் அழகிய புயங்களையும் கொண்ட இராவணன், புலன்களுக்கு இன்பந்தரும் புகழ் ஒளி கொண்ட நகரிடைப் புகுந்து நாட்டினை ஆளும்காலத்தில், நலம் நிறைந்த அவன் அன்னை இராத்திரிகரி; உலக்கையினைத் தன் வலக்கையால் பற்றி இசைவுபட அழகோடு நெல் குற்றுவதனைக் கண்டான். இவ்வண்ணம் கண்டகாட்சி அவன் உள்ளத்தினை வருத்தியது. அதனால் உளத்தளர்ச்சியடைந்தான்.

வேறு

104. தானேநெற்குற்றுழக்குந்துயரென்சொல்லுனக்கெனனுந்தாயுங்கேட்டு (கoச1)
மானேயுங்கரத்தானை மாப்பிடியின் வடிவமைத்து வணங்கவென்ன
யானே[86]யித்தலைவாழநெற்குற்றுதலியல்போவென்றிலிங்கம் வாங்க
வானோறுஞ்சிவபெருமான்வடகயிலைத்திருமலை போயடைந்தானன்னான்

தானே நெற்குற்று உழக்கும் துயர் என்சொல்
உனக்கெனலும், தாயும் கேட்டு
மானேயும் கரத்தானை மாப்பிடியின்
வடிவமைத்து வணங்க என்ன,
யானே இத்தலைவாழ நெல்குற்றுதல்
இயல்போஎன்று, இலிங்கம் வாங்க
வானேறும் சிவபெருமான் வடகயிலைத்
திருமலை போயடைந்தான் அன்னான்.

பொருள்: தன்தாய் நெற்குற்றுதலைக்கண்ட இராவணன் தாயை நோக்கி அன்னையே! நீயாக நெல்குற்றுவதற்கு உனக்குற்ற துன்பம் யாது எனக் கேட்டனன். அதனைக் கேட்ட அவன் அன்னை, மானேந்தும் கையுடைய சிவனை, மாவின் பிடியினால் வடிவமைத்து வணங்குதற்கென்று கூறினாள். அதனைக்கேட்ட இராவணன் யான் இங்கிருந்து அரசவாழ்வு வாழ நீ நெல் குற்றுதல் ஏற்ற செயலோ எனக்கூறி, இலிங்கம் பெறுவதற்காக சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் வானளாவிய வடகயிலையாகிய திருமலை சென்றடைந்தான்.

105. அன்னான் வந்திறைஞ்சவரனீபோந்ததென்[87]கெலெனவவனென்னன்னை (கoரு)
நின்னாகம் பூசிப்பவோரிலிங்கந்தரவேண்டு நிமலவென்ன
மின்னார் பொற்சடையோன் வழங்குதலு மவனேந்திமீளுங்காலை
நன்னாரணன்[88]முடியத்தொடர்ந்தொர்முனியாக வழிநடுவே நின்றான்

---

82 கலனோடிலங்கும்புயத்தான் கடல்சூழிலங்கைமேவிப், 83 பொலனோடு
84 இவன்றாய், 85 தலனோடுரனெலிட்டுக் குற்றக்கண்டு தளர்ந்தான் பா.வே.
86 தரையாள,

அன்னான் வந்து இறைஞ்ச, அரன்
நீ போந்த தென் கெலன, அவன், என் அன்னை
நின் ஆகம் பூசிப்ப ஓர் இலிங்கம்
தரவேண்டு நிமல என்ன,
மின்னார் பொற் சடையோன்
வழங்குதலும், அவன் ஏந்தி மீழும்காலை
நன் நாரணன் முடியத் தொடர்ந்து
ஓர் முனியாக வழிநடுவே நின்றான்.

பொருள்: இராவணன் வந்து வணங்குதலும் சிவன் அவனை நோக்கி நீ இங்கு வந்ததேன் என வினவுதலும்; இராவணன் இறைவனை நோக்கி என் அன்னை நின்திருவுருவை வணங்குதற்கு ஓர் இலிங்கம் தரல் வேண்டும் என வேண்டினன். அவன் வேண்டுதலையேற்ற அழகுமிகு ஒளிமிக்க சடைகொண்ட சிவன் அதனை வழங்கினான். இராவணன் அச்சிவலங்கத்தினை வாங்கி மீண்டு வரும் பொழுது திருமால் அவன்வரும் வழியில் ஓர் முனிவடிவு கொண்டு நின்றனன்.

**106.** ஆனனம்பத்துடையவடலரக்கன்வரும்பொழுதவனுக்கலர்ந்து தெண்ணிர்ப் (கOசா)
பானமதுசெய்வதற்கோர்தவநெடுமால் கொடுப்பப்பதறிப் போந்து
மாநிருதனந்தமுனிவரனைநோக்கிப்புனலருந்தி[89] வாயுட்சிட்ட
நீநளினக்கையேந்த வேண்டுமிந்தவிலிங்கமெனநெடிதுசொற்றான்.

ஆனன் அம்பத்துடைய அடல் அரக்கன்
வரும்பொழுது, அவனுக்கு அலர்ந்து தண்ணீர்ப்
பானமது செய்வதற்கோர் தவநெடுமால்
கொடுப்பப், பதறிப் போந்து
மாநிருதன் அந்த முனிவரனை நோக்கிப்
புனல் அருந்தி வாயுட்சிட்ட,
நீ நளினம் கை ஏந்த வேண்டும்
இந்தலிங்கம் என நெடிது சொற்றான்.

பொருள்-: ஆக்கம் அனைத்தும் பெற்ற அழகுமிக்க பத்து முடிகள் கொண்ட வலிமைமிகு இராவணன் வரும்போது, திருமால் தவமுனிவன் வடிவு கொண்டு அவனுக்குத் தாகத்திற்கு நீர் குடிக்கக் கொடுக்க முன்வந்தனன் அதனைக்கண்டு பெருமை மிகு இராவணன் பதட்டம் அடைந்தனன். அதனால் முனிவனை நோக்கி நீர் குடித்து வாய் அலம்பி வரும் வரை நீ இந்தப் புனிதலிங்கத்தினை உனது அழகிய கையில் ஏந்திவைத்துக் கொள்ளுதல் வேண்டுமெனப் பகர்ந்தான்.

**107.** நெடியமுனிவரனுநின்னை மூன்றுதரங்கூவுவனன் னேரம்வாரா (கOஎ)
விடிலமரரூர்க்கடைவைனென்றிடலு மரக்கனுந்தன் வேடையாற்றான்
கடிதலனுக்கொருமித்துச்சிவலிங்கமாமுனிதன்கைமேல் வைத்துக்
கொடிமலர்ப்பூவாவியிற்போய்க்குறுதலுமுக்குரலுமுனி கூவாநின்றான்.

---

பா.வே. 86 தரையாள, 87 கொலென, 88 கருதிமுனியாகத்தொடர்ந்து வழிநடுவே நின்றான். பா.வே. 89 வருமட்டும்

நெடிய முனிவரனும், நின்னை மூன்றுதரம்
கூவுவன், அந்நேரம் வாரா
விடில், அமரரூர்க்கு அடைவன்
என்றிடலும், அரக்கனுந் தன் வேடையாற்றான்
கடிது அதனுக்கு ஒருமித்துச்,
சிவலிங்கம் மாமுனிதன் கைமேல் வைத்துக்,
கொடி மலர்ப்பூ வாவியிற்போய்க்
குறுகலும், முக்குரலும் முனி கூவாநின்றான்.

பொருள் : இராவணன், நடுவழி நின்ற திருமாலாகிய தவத் தோனிடம் சிவலிங்கத்தினைத் தாங்கி நில் என்று வேண்டிய பொழுது, அந்த மாயவனான முனி அதற்கு உடன்பட்டனன். பின் இராவணனை நோக்கி உன்னை யான் மூன்று தரம் கூவி அழைப்பேன். நீ அந்நேரத்தில் வராவிடின் யான்தேவருலகு சென்றடைவேன் எனப் பகர்ந்தான் அதற்குடன்பட்ட இராவணன் விரைவுடன் சிவலிங்கத்தை முனிகையின் மேல்வைத்து, மலர்க் கொடிகள் நிறைந்த நீத்தடாகத்திற்குச் சென்றனன். அவன் அப்படிச் சென்றடைந்த வேளையில், முனிவன் மூன்றுதரம் இராவணனைக் கூவி அழைத்தனன்.

108. கூவுமொருமுக்குரர்க்கும் வந்திலடுன்றந்தமுனிகுளிர்பொற்கையின் (க0அ)
மேவுமிலிங்கத்தையயன் மேயுமொருகோச் செவியில் விளங்கநாட்டி
யாவரசைத்தா லுமசையாதிவணேயிருக்க வெனவிறைஞ்சிப்போனான்
றேவரதைக்கோகர்ன மெனப்புகழ்ந்தார் தசமுகனுந்திரும்பிப்போந்தான்.

கூவும் ஒரு முக்குரர்க்கும் வந்திலன் என்று
அந்தமுனி, குளிர் பொய்கையின்
மேவும் இலிங்கத்தை அயன்மேயும்
ஒரு கோச்செவியில், விளங்க காட்டி,
யாவர் அசைத்தாலும் அசையாது
இவனே இருக்க என இறைஞ்சிப் போனான்,
தேவர் அதைக் கோகர்னம் எனப் புகழ்ந்தார்,
தசமுகனும் திரும்பிப் போந்தான்.

பொருள்: கூவி அழைத்ததன் குரலுக்கு இராவணன் வரவில்லை என்றுநினைந்து, குளிர்ந்த நீர் நிறைந்த நீர்த்தடத்தின் கரையில் பிரமன் வந்து செல்லும் இடத்தில் விளக்கமுற நிலை கொள்ளச் செய்தனன். பின் அச் சிவலிங்கத்தினைத் தொழுது எவர் வந்து அசைத்துக் தூக்க முயன்றாலும் அசைவின்றியிவ் விடத்தில் இருத்தல் வேண்டுமென வேண்டிச் சென்றனன். முனிவடிவில் வந்த திருமால், தேவர்கள் அதனைக் கோகர்னம் எனப் புகழ்ந்தார். தசமுகனும் திரும்பிப் போந்தான்.

வேறு

109. போந்தான் முனியைப்புடைகண்டிலமென் (க0கூ)
றாய்ந்தான் சிவலிங்கமொராக்குழையின்
வாய்ந்தாலயமாகிவயங்குதல்கண்
டேந்தாவிருக்கைகொடெடுத்தனனால்

போந்தான், முனியைப் புடைகண்டிலம் என்று
ஆய்ந்தான், சிவலிங்கம் ஒராக்குழையின்
வாய்ந்த ஆலயமாகி வயங்குதல் கண்டு,
ஏந்தா இருக்கைகொடு எடுத்தனனால்

பொருள்: இராவணன் நீர்குடித்துத் திரும்பிவந்து பார்த்த பொழுது முனிவனை அயலிடத்தில் காணானாயினன். அதனால் சுற்றுப்புறத்தினை யாராய்ந்தான். சிவலிங்கம் ஓர் ஆலமரத்தின்கீழ் ஆலயமாய் அமைந்திருக்கக் கண்டனன். அதனைக் கோயில் கொண்ட இடத்துடன் பெயர்த் தெடுக்க முனைந்தனன்.

**110.** ஆலம்பருகும் பொருளச்சுதனார் (கக0)
சீலம்பரிசொற்படி சேவடி[90] வோ
தாலம்புகுலிங்கசயம்புவதாய்க்
கோலம்பேயராது கொழுந்தேழுமால்

ஆலம்பருகும் பொருள், அச்சுதனார்
சீலம்பரி சொற்படி, சேவடி வோ
தாலம்புகு லிங்க சயம்புவதாய்,
கோலம் பெயராது, கொழுந்தெழுமால்,

பொருள்: ஆலகாலநஞ்சினை உண்ட தேடற்கரும் பொருளான சிவன்; சீலம் மிக்க திருமாலின் வேண்டுதலின்படி - சிவலிங்கத் திருமேனியின் திருவடிகள் ஓங்காரப் பொருளதாய் நிலத்தில் இயற்கையாய் அமைந்த இலிங்கத்திருமேனிகொண்டு பூமியினை ஊடறுத்து ஒளிச்சுடர் மேல் எழ நின்றனன்.

**111.** [91] எழுந்தானிறையைத்தழுவிக்கொடெடா (ககக)
விழுத்தானடி வேர்பறிமேரு வென
வழுந்தார்முடி யத்தனையுஞ்சிதறிச்
செழுந்தாரகையிற்புடைசிந்தினவால்

எழுந்தான், இறையைத் தழுவிக்கொடு எடா
விழுந்தான், அடி வேர்பறி மேருவென
வழுந்தார் முடி அத்தனையும் சிதறிச்
செழும் தாரகையில் புடை சிந்தினவால்

பொருள்: பூமியில் தன் அடியினை ஊடறுத்துப்பதித்துக் கொழுஞ்சுடராய் நின்ற சிவலிங்கப் பெருமானை, இராவணன் தன்கைகளால் தழுவி எடுக்க முனைந்தான். அவ்வேளை மேருமலை தன் அடி பெயர்ந்து விழுந்தது போல் நிலத்திடை வீழ்ந்தான். செழுமையும் நறுமணமுங் கொண்ட மாலைகள் அணிந்த அவனது முடிகள் பத்தும் சிதறின. அம்முடிகளில் பதித்த ஒளிவீசும் அழகிய செம்மை மிகும் மணிகள் வானின் நின்றும் நட்சத்திரங்கள் சிதறிப் பரந்தது போல் இராவணன் வீழ்ந்த சுற்றம்புறமெல்லாஞ் சிதறின.

---

பா.வே. 90 வேர் 91 எழுந்தான்தனியே

112. சிந்தாகுலமுற்றசினக்கொடியோ (கக௨)
னொந்தான் மெய்யொடுங்கிநுடங்கினனென்
றைந்தாருவினாடவரார்த்து நகைத்
தெந்தாயென வீசனையேத்தினரால்

சிந்தாகுலம் உற்ற சினக் கொடியோன்
நொந்தான், மெய்ஒடுங்கி நுடங்கினனென்று
[0]ஐந்தாருவின் ஆடவர் ஆர்த்து நகைத்து,
எந்தாய்யென ஈசனை ஏத்தினரால்

பொருள்: கொடிய இயல்பினையும் சினத்தினையுங் கொண்ட இராவணன் உள்ளம் நைந்து வேதனை கொண்டான். உடல் நொந்து ஒடுங்கிச் சோர்வுற்றான் என்று கற்பகதருவுக்குரிய வரும், நறுமணம் மிக்க மல்லிகை, முல்லை, செண்பகம், மகிழ் - செங்கழுநீர் மலர்களால் புனையப்பட்ட மாலைகளை அணிந்தவர்களுமான தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்து மகிழ்ந்தனர். எமது தந்தையே! தலைவா!! எனப் போற்றிப் பரவினர். [0] ஐந்தார்= கற்பகதரு; ஐவகை மலர்கள் கொண்டு புனையப்பட்ட மாலை.

113. ஆலித்திருமண்டரதிர்ப்பினெதிர் (ககங)
கோலக்கிரிமந்தரமுங்குமுறக்
காலிட்டதன் வேர்பறியக்கடவா
மேலிட்டலைவேலையின்[92] வீசினவாய்

ஆலித்திடும், அண்டர் அதிர்பின் எதிர்,
கோலக்கிரி மந்தரம் எங்கும் கூறக்
காலிட்ட தன் வேர்பறியக் கடவா
மேலிட்ட அலை வேலையின் வீசினவால்

பொருள்: மகிழ்ச்சி ஆரவாரஞ்செய்த தேவர்களின் ஆர்ப்பொலியால் எழுந்த அதிர்வலைகள் செழுமையும் அழகுங் கொண்ட மந்தரமலை யெங்கும் பரந்தது. அதனால் பூமியிடத்தூன்றிய அதன் அடியினை அவ்வதிர்வலைகள் வேரோடு பறித்து அலைகடலிடத்து வீசின.

114. சின்னம்படவக்கிரியைச்சிதைவித் (ககச[1])
தின்னங்கயிலைத்தலையேக[93] வெனாத்
தன்னந்தனிபோயினைத்தறுகண்
மன்னன்வழிமே லொருமால்வருவான்

சின்னம்பட அக்கிரியைச் சிதைவித்து,
இன்னம் கயிலைத் தலையேக என்னாத்
தன்னந்தனி போயினன், அத்தறுகண்
மன்னன், வழிமேல் ஒரு மால் வருவான்.

பொருள்: இந்நிகழ்வுகளால் சினங்கொண்ட இராவணன்; அந்த மலையினைச் சிதறும்படி சிதைத்து மீண்டும் கயிலைமலை செல்வதென எண்ணித் தான் ஒருவனேயாகிச் சென்றனன். அவ்வண்ணம் சென்ற வழியில் மாயம் செய்யும் திருமால் வருவானாயினான்.

---

பா.வே. 92 வீசினனால் 93 வேனாத்

115. வான்மிக்கநரைத்திரைவண்ணவுடற் (ககரு)
கூன்மிக்கபுறம்பிடிகோலுடனூன்
மேன்மிக்கதொர்வேதியனாகிநடந்
தேன்மிக்கவுனக்கிவ்விளைப்பெனலும்

வான்மிக்க நரைத்திரை வண்ணவுடல்,
கூன்மிக்க புறம்பிடி கோலுடன், ஊன்
மேன்மிக்க ஓர் வேதியனாகி, நடந்து
ஏன்மிக்க உனக்கு இவ்விளைப்பு எனலும்.

பொருள்: மேன்மை பொருந்திய தோற்றப் பொலிவும் நரைத்தமுடியும் வயோதிபத்தை உணர்த்தும் உடலின் சுருக்கமும் கொண்ட தவத்தால் அழகு பொருந்திய கூனல் தோற்றமும் புறத்தேயூன்றிய கோலுமாய் ஓர் வேதியன் வடிவு கொண்டு இராவணன் வரும் வழிநோக்கி நடந்து வந்தனன் மாயவனான திருமால், இராவணனைக் கண்டதும் அவனை நோக்கியமாயவன், உனக்கு இந்த இளைப்பு ஏன் மிகுதிப்பட்டதெனக் கேட்டனன்.

116. என்னன்னை தொழற்கொரிலிங்கமுமை (ககசா)
மன்னன்றரவாங்கியதோர்முனிகோ
கன்னம்புகவைத்ததுகண்டமலன்
முன்னம்புகவின்னமுயன்றனனால்

என் அன்னை தொழற்கு ஒரு இலிங்கம் உமை
மன்னன் தர வாங்கி, ஓர் முனிகோ
கன்னம்புக வைத்தது கண்டு அமலன்
முன்னம்புக இன்னமும் முயன்றனனால்.

பொருள்: அதற்கு இராவணன் அந்த மாய வேதியனை நோக்கி என் அன்னை வணங்குவதற்காக ஒரு இலிங்கத்தினை உமைபாகனான எத்தலைவன் சிவன் தர வாங்கினேன். அதனை ஒரு பெருமுனிவன்கையில் கொடுத்துச் சென்ற பொழுது அம் முனிவன் அச்சிவலிங்கத்தை மண்புக வைத்துச் சென்றனன். அதனைக்கண்ட யான் மீண்டும் எம் தலைவனான சிவன் முன் சென்று அவனைத் தொழ முயல்கின்றேன் என்றனன்.

117. நால்வேதியதூரநடந்துடல (ககஎ)
மேல்வேடையடைந்து மெலிந்ததெனா
நீல்வேடநியம்பலுநீண்மறையி
நூல்வேறுபடாதவனுந்நுவல்வான்

நால்வேதிய தூர நடந்து உடலம்
மேல்வேடை அடைந்து மெலிந்த தெனா
நீல்வேடன் இயம்பலும், நீண் மறையின்
நூல் வேறுபடாதவனும் நுவல்வான்.

---

93 வேனாத்

பொருள்: அருமறை உணர்ந்த அந்தணரே! நீர் உடல்மேலும் வாட்டம் அடைந்து துன்புற்ற மெலிவண்டய ஏன் நடந்தீர் எனக் கரு நீலகண்டத்தவனான சிவன் வினவுதலும், பெருமறையின் தெளிவார்ந்த உள்பொருளாய் அதனின்னின்றும் வேறுபடாதவனான சிவனை வணங்குபவனும்-மறைமொழியினை உணர்ந்து மாறுபாடின்றி நடப்பவனுமான இரவு வண்ணன் பகர்வான்.

118. வானோர் பணியும் வடவெண்கயிலைத் (ககஅ)
தேனோடுகுவட்டொரு[94]திண்குவடு
தானோதவிலங்கை[95]தரித்தனை
யேனோர்கிலையாது முணர்ந்தறிவாய்

வானோர் பணியும் வட வெண்கயிலைத்
தேனோடு, குவட்டொரு திண்குவடு
தான் ஓத இலங்கை தரித்தனை,
ஏனோர்கு இலையாதும் உணர்தறிவாய்

பொருள்: தேவர்கள் தொழுது வணங்கும் வடபுலத்தே அமைந்துள்ள வெள்ளியங்கிரியில் தேன்போன்ற மலைமகளோடு எழுந்தருளியிருக்கும் சிவனோடுகுவட்டினைப் பெயர்த்தெடுத்து, அலை ஒலிக்குங் கடல் சூழ்ந்த இலங்கையில் கொண்டு வைப்பேன் மற்றையோர்க்கு இல்லாது செய்வேன்.

119. ஆயும் பொழுதும்மலை தென்கயிலை (கககூ)
யேயுஞ்சிவலிங்கமும்[96] மங்குளநீ
[97]தோயுந்துயர்விட்டவனோடுகெனக்
காயுந்நிருதன்கை குவித்தகல்வான்

ஆயும் பொழுது அம்மலை தென்கயிலை
ஏயும், சிவலிங்கமும் அங்குள, நீ
தோயும் துயர் விட்டு அவன் ஓடு எனக்
காயும் நிருதன் கைகுவித்து அகல்வான்.

பொருள்: நன்கு ஆராய்ந்து சிந்தித்தால் அக்கயிலைமலையும் தென்கயிலையினை ஒத்ததே. இறைவனின் அருள் வடிவான சிவலிங்கமும் தென்கயிலையாகிய திருமலையிடத்தில் உண்டு. துன்பத்துள் தோயாது அதில் இருந்து விடுபட்டு திருமலைக்கே விரைந்து செல்வாய் எனத் தவத்தோன் சொல்ல, சினத் தோடிருந்த நிருதர் தலைவனான இராவணன் தவத் தோனை வணங்கி அவ்விடம் விட்டுச் செல்வான்.

120. அகலாழியிலங்கைய[98]க்ன்பதிபுக் (கஉ0)
கிகலா[99]விரதம்பிறிதேறியொரைம்
முகனார்திரிகோணமுதற்பொருளைப்
புகநாடிவலஞ்செய்துபோற்றினனால்

அகலாழி இலங்கை அகன்பதி புக்கு,
[0] இகலா விரதம் பிறிதேறி ஓர் ஐம்
முகனார் திரிகோண முதற் பொருளைப்
புகநாடி வலம்செய்து போற்றினனால்

பா.வே. 94 தென்குவடு 95 தரித்தபடி 96 இங்குள 97 ஓயும்

*பொருள்:* இராவணன் மிக்க சிறப்புடைய தன் தேரில் ஏறி, அகன்றதும் ஆழம்மிக்கதுமான கடல்சூழ்ந்த இலங்கையினை அடைந்தனன். விடுதல் அறியா விருப்பினனாகி நோன்பு பலமேற்கொண்டு ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம் சத்தியோ சாதம் என்ற ஐந்து முகங்களையுங் கொண்ட சிவன் எழுந்தருளியிருக்கும் திரிகோணமலையினைச் சென்று வலம் வந்து போற்றி வணங்கினன்.

[0] இவ்வுரையில் இகலா விரதம் என்பதைத் தேர் எனவும் நோன்பெனவும் கொள்ளப்பட்டுள்ளது.

வேறு

121. போற்றிநின்றிரதமுத்தரதிசைப்புறம்விடுத் (கஉக)
தூற்றவெற்பினொருகீழ்த்திசையினேறியுரவோ
னாற்றலிற்கொடியகையிருபதுங் கொடணைசெய்
தேற்றமிக்கவனெடுப்பவிறையோனுமசையான்

போற்றி நின்று இரதம்,
உத்தரதிசைப் புறம் விடுத்து,
ஊற்ற வெற்பின் ஒரு
கீழ்த்திசையின் ஏறி, உரவோன்
ஆற்றலில் கொடியகை இருபதும்
கொண்டு அணை செய்து
ஏற்றம் மிக்கவன் எடுப்ப
இறையோனு மசையான்.

*பொருள் :* திருமலையினை அடைந்த இராவணன், இறைவனை வணங்கி நின்று தேரினை வடபுறத்தே விடுத்தனன். அவ்வணம் விடுத்த இராவணன் மேன்மையும் திண்மையுங் கொண்ட திருமலையின் கீழ்த்திசைக் கண் ஏறினான். தன்வலிமிக்க கொடியகைகள் இருபதினையுங் கொண்டு திருமலையினைத் தழுவி எடுத்தனன். அவ்வணம் எடுத்த பொழுது இறைவன் அசைவற்றிந்தான்.

122. அசைகிலன் சிறிய மென்றகலவிட்டவனுமீண் (கஉஉ)
டிசையுமங்கைகளொரெட்டிறைவன் மேனியுறலாய்
மிசையின்மற்றவைபடப்படியின் மார்பு விரவத்
தசமுகன்றழுவி நம்ப வெழுகென்று தளர

அசைகிலன் சிறிதும் என்று
அகலவிட்டு அவனும் மீண்டு
இசையும் அங்கைகள் [0] ஓர் எட்டு
இறைவன் மேனியுறலாய்
மிசையின் மற்றவை படப்
படியின் மார்பு விரவத்
தசமுகன் தழுவி நம்ப
எழுக என்று தளர

---

பா.வே. 98 தன்பதி 99 இரதம்

பொருள்: சிறிதுதானும் அசையாது இறைவன் இருந்தனன் என்று எண்ணிய இராவணன்; சிறிது அகன்று நின்று மீண்டும் அம்முயற்சியில் ஈடுபட்டனன். தன் உறுப்புகள் அணைத்தும் திருமலையினைத் தழுவ, மார்புநிலத்தில் பொருந்த அவன் திருமலையினை எடுக்க முனைந்தான். அப்பொழுது; எண்குணத்தவனான இறைவன் திருமேனியினைத் தழுவி, என் தலைவா எழுக எனத் தளர்ந்தனன். [0] ஒர- எட்டு = பொருந்த - எண்குணம்.

123. தளருமங்கைகளொரெட்டுறுதழும்பு பெருமான் (கஉங)
வளருமங்கமொடழுந்தியும்வராதமர்தலான்
மிளிருமண்டமழியூழியினுமேனியழியா
தொளிருமெய்தனது மெய்யெனவுணர்த்தினனரோ

தளரும் அங்கைகள் ஒர
எட்டுறு தழும்பு பெருமான்
வளரும் அங்கமொடு அழுந்தியும்
வராது அமர்தலான்
மிழிரும் அண்டம் அழி
ஊழியினும் மேனி அழியாது
ஒளிரும் மெய் தனது மெய்
யென உணர்த்தினனரோ

பொருள் : இராவணனது தளர்ச்சியுற்ற அழகிய கைகள் இறைவன் திருமேனியினைத் தழுவியபொழுது அணைத்த இடங்களில் விரல் அடையாளங்கள் பதிவு பெற்றன. பலங்கொண்டு வளர்ந்த இராவணது கைகள் அழுந்தப்பற்றியும் அவன் கையில் வராது ஒளிர்ந்தது இறைவன் திருமேனி. இதன்மூலம்; விளங்குறும் அண்டம் அழிந்துபடும் இறுதி ஊழி வந்தகாலத்திலும், தன்னொளி குன்றாத் தகைசான்று என்றும் அழிவற்று - நிலை பேறுடையதாய் நிற்கும் திருவடிவம் தனது என்று இறைவன் உணர்த்தினான்

அரோ = அசைச் சொல்

124. உணர்ந்தமாலயன்விழிக்கரிய மெய்யுலையுமோ (கஉச1)
வணிந்தவானுருவமானதுமகப்படு மதோ
பணிந்தபாதலமுறுத்துபதமும்பெயருமோ
தணிந்தஞானவொளியாய [100] வெளியுந்தளருமோ

உணர்ந்த மால் அயன் விழிக்கு
அரிய மெய் உலையுமோ,
அணிந்த வான் உருவமானதும்
அகப்படு மதோ,
பணிந்த பாதலம் உறுத்து
பதமும் பெயருமோ,
தணிந்த ஞான ஒளியாய
வெளியும் தளருமோ.

---

பா.வே. 98 தன்பதி 99 இரதம் பா.வே. 100 ஒளியும்

பொருள்: இறைவனின் திருவடிவம் காண்டற்கரியது. அளப்பெரும் பெருமை கொண்டது. எல்லையற்றது அவ்வடிவினை; உட்பொருள்த் தெளிவு கொண்ட- மறைமுடி புணர்ந்த பிரமனும் திருமாலும் தேடிக்காண முயன்றும் இயலாது போனது. அத்தகைய பெருமை சான்ற காண்டற்கரிய திருவடிவம் அசைந்து தன் நிலை பெயருமோ. இராவணனது கைக்கு அகப்படும் தன்மைக்குரியதோ. அண்டகோடிகளால் வணங்கப் பெறும் அத்திருவடிவத்தின் அடி இம்மண்ணினை ஊடறுத்துப் பாதலஞ்சென்று நிலை பெற்றுள்ளது. அந்நிலை பெற்றதன்மை பெயர்ச்சி யடையும் தன்மையதோ. தண்ணொளி கொண்ட பேரறிவாய் ஒளியாய் நிற்கும் ஆனந்தப் பெரு வெளியும் தளர்ச்சியடையுமோ.

125. மோசமுற்றநிருதன்முனிவுடன் கடிதெழுந் (கஉரு)
தீசனுற்றவரையைச் சினமொடெற்றுவனெனா
வீசு தெற்கிலுறவெட்டவவன் வாள்[101] வயிரமற்
றாசறுத்தநிருதித்திசை விழுந்தததுவே

மோசமுற்ற நிருதன்; முனிவுடன்
கடிது எழுந்து,
ஈசன் உற்ற வரையைச்
சினமொடு எற்றுவன் எனா,
வீசு தெற்கில் உற வெட்ட
அவன் வாள் வயிரம் அற்று,
ஆசறுத்த நிருதித் திசை
விழுந்தது அதுவே

பொருள்: தன்முயற்சியில் தோல்விகண்ட இராவணன்; சினம் மிகக் கொண்டான். திருவடிவம் நிலை பெயராத் தன்மை கண்டு வன்மங் கொண்டு விரைந்தெழுந்தனன். இறைவன் எழுந்தருளியிருக்குஞ் திருமலையினை எடுத்து வீசுவேன் எனச்சினந்து, திருமலையின் தென்பக்கத்தே வேகமுற வாளால் வெட்டினன். அவ்வண்ணம் வெட்டிய பொழுது வரபலங்கொண்ட வாளானது தன் வலி இழந்து, குற்றமற்ற புனிதம் நிறைந்த நிருதிதேவர்கள் காக்கும் தென்மேல் திசை சென்று விழுந்தது.

126. வேகவெங்கனல் விழிக்கடைப்பொறி சிதறநீண் (கஉசா)
மாவெண்பிறையெயிற்றகலவாய்புகை யெழச்
சேகரங்களொருபத்துமசையத்திசைதொறும்
போகவெங்கைவிசிறப்புலவர் மேனிகுலைய

வேக வெங்கனல் விழிக்கடைப்
பொறி சிதற, நீர்
மாகவெண்பிறை எயிறு அகல,
வாய் புகை எழச்,
சேகரம்கொள் ஒருபத்தும் அசையத்
திசை தொறும்
போக வெங்கை விசிறப்
புலவர்மேனி குலைய;

---

101 வயிரமிற்று

பொருள் : இராவணன் சினந்து திருமலையின் தென்புறத்தில் வெட்டிய பொழுது அவனது கடைக்கண்களிலிருந்து தீப்பொறிகள் சிதறிப்பறந்தன. நீண்ட பெரிய வெண்மைநிறங்கொண்ட ஒளிகாலும் மூன்றாம்பிறைச் சந்திரன் போன்ற பற்கள் வெளிப்பட வாய் அதனால் விரிவடைந்தது. அவ்வேளையில் வாயிலிருந்து சினத்தாற் கனன்ற நெருப்பிலிருந்து புகையெழுந்தது. அழகுமிகு செம்மைசான்ற முடிகள் பத்தும் அசைந்தன. அவனது இன்ப வாழ்வுக்குப் பலஞ்செய்த கைகள் திக்கெலாம் அளாவத் தேவர்கள் உடல் நடுக்க முற்றனர்,

127. குலைய[102]வேழுலகமுங் குலவுபாதல நெளிந் (கஉஎ)
தலைய வான்முகடடங்கலு மதிர்ந்துழலநின்
றுலையமேகபடலத்திடி யோரேழ்கடல்களு
[103] மலையவாயொருபதும் பெரிதுரப்பன்மலிய

குலைய [0] ஏழுலகமும், குலவு
பாதல நெளிந்து
அலைய வான் முகடு அடங்கலும்
அதிர்ந்து உழல, நின்று
உலைய, மேக படலத்து இடி
ஒரு [*] ஏழ் கடல்களும்
அலைய வாய் ஒருபதும்
பெரிது உரப்பன் மலிய

பொருள்: இராவணன் சினங்கொண்டு தன்வாய்பத்தினையும் திறந்து அனைத்துயிர்களுமஞ்சும்படி உரத்து ஒலி எழுப்பியதனால்; உலகம் ஏழும் நிலைகுலைந்தன. பாதாள உலகம் நொந்து அலைந்தது. அண்டமுகட்டில் அனைத்திடங்களும் அதிர்ந்து நிலை கெட்டன. முகிற்படலங்கள் ஒன்றோடொன்று மோதியதால் பேரொலி யெழுந்தது. அதனால் ஏழுகடல்களும் கலங்கின.

[0] புவனோற்பத்திச்சருக்கதில் 15ம் பாட்டின் உரையில் உலகங்கள் பற்றியும் * திருமலைச்சருக்கத்தில் 64ம் பட்டின் உரையில் கடல்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளன. * மலைய எனக் கொண்டும்- பொருள் காணலாம்.

* (ஒன்றுடன் ஒன்று மோத)

பா.வே. 102 மண்ணுலகம் 103 உலைய

128. பல்லெயிற்றொடுகடித்தபகுவாய்[104] முழைமடித் (கஉஅ)
தொல்லையிற்சின மெழுப்பி[105] யெரியுரோமவழிபோய்ச்
செல்வக்கடல்விடந்தனிதிரண்டவடிவீ
தல்லதொப்பிலை யெனப்பலருமஞ்சியலற

பல் எயிற்றொடு கடித்த
பகுவாய் முழை மடித்து,
ஒல்லையில் சினம் எழுப்பி
எரி உரோம வழிபோய்ச்
செல்லஅக், கடலில் விடம்
தனி திரண்ட வடிவு ஈது
அல்லது ஒப்பிலை எனப்,
பலரும் அஞ்சி அலற

பொருள்: இராவணன், தன் குகை போன்ற பிளந்த வாயில் உள்ள, கடைவாய்ப் பற்களும்- மற்றைய பற்களும் ஒன்றோடு ஒன்று பொருத ஒலி எழுப்பி வாய் மடித்துத் துன்பஞ் செய்யும் சினத்தினை வெளியிட்டனன். அச்சினத்தால் எழுந்த தீ மயிர்க் கண்கள் தோறும் அதன் வழியே வெளிச் சென்றது. இச்சினத்தீ; பாற்கடலைக் கடைந்த பொழுது வாசுகி கக்கிய ஆலகால நஞ்சுக்கு ஒப்பானதாயிருந்ததேயன்றி வேறெதற்கும் ஒப்பிட்டுக் கூறுதல் இயலாதெனக் கூறிப் பலரும் அஞ்சி அலறினர்.

129. அலறியாதவனுமம்புலியுமஞ்சியயல்போய் (கஉகூ)
விலகநீள்பெரியதோளவனறைந்த[106] வறையாற்
குலவுமேருவரைசாயமுதுகூற்றும் வெருவக்
கலகவூழியிதுகாலமெனநாகர்கதற

அலறி ஆதவனும் அம்புலியும்
அஞ்சி அயல் போய்
விலக நீள்பெரிய தோளவன்
அறைந்த அறையால்
குலவு மேருவரை சாய,
முது கூற்றும் வெருவக்
கலக ஊழி இது காலமென
நாகர் கதற.

பொருள்: இராவணது அலறலால்- அவன் தன்கைகள் பத்துங் கொண்டு அறைந்த அறையின் எதிர்த்தாக்கத்தால் கதிரவனும் சந்திரனும் அஞ்சி அயல் போய் அகன்றனர். நிலைபெற்றிருந்த மேருமலையும் நிலைகுழைந்து சாய்ந்தது. பழைமைமிக்க கூற்றுவனும் நிலைகெட்டு அஞ்சினன். கலக்கமிக்க அழிவினைத்தரும் இறுதிக்கால ஊழியோவெனக் கீழ் உலகினைச் சேர்ந்த நாகரும் ஒலமிட்டுக் கதறினர்.

130. கதமுதிர்ந்தமலர்தென்கயிலையிற்கடமிந் (கங0)
திதணையின்றடிபெயர்பனெனவெய்திநிருதன்
மதியமண்டலமடுத்தவரவுக்குவடிவாற்
புதியகுன்றடி[107] படிந்திடுபுயற்குநிகர்வான்

---

பா.வே. 104 தனைமடித்து, 105 எரி 106 விசையால், பா.வே. 107 பறித்திடும்

கதம் உதிர்ந்த மலர் தென்
கயிலையில், கடமிழிந்து
இதனை இன்று அடி பெயர்ப்பன்
என எய்தி, நிருதன்
மதிய மண்டலம் மடுத்த
அரவுக்கு வடிவால்
புதிய குன்று அடி படிந்திடு
புயற்கு நிகர்வான்

பொருள்: மரகந்தப் பொடிகள் சிந்தித் தேன்பிளிற்றும் மலர் நிறைந்த செழுமைமிகு தென்கயிலையாகிய திருமலைசென்று இதனை இன்று அகழ்ந்து அடிபெயர்ப்பேன் எனச் சொன்ன இராவணன்; புதியவடிவுகொண்ட திருமலையின் அடி தழுவிநின்றனன். இவ்வண்ணம் அவன் நின்றது, நிறை நாண்மதியாக விளங்கும் சந்திர மண்டலத்தை விழுங்கிய இராகுக் கோளுக்கு நிகர்த்தியிருந்தது. அவன்புயவலியோ பெரும் புயலை யொத்திருந்தது.

**131.** வானெடுத்தவரையைக்கரம்வளைந்துதழுவித் (கஙக)
தானெடுத்தலு நடுங்கினசங்கங்கள் முழுதுந்
தேனெடுத்ததிருவாயுமைதிகைத்து வெருவிக்[109]
கானெடுத்தசடையானிடைகலந்தனனரோ

வான் எடுத்த வரையைக்
கரம் வளைந்து தழுவித்
தான் எடுத்தலும், நடுங்கின
சங்கங்கள் முழுதும்,
தேன் எடுத்த திருவாய்
உமை திகைத்து வெருவிக்
கான் எடுத்த சடையானிடை
கலந்தனர். அரோ

பொருள்: வானளாவி மேல்நிமிர்ந்து நின்ற திருமலையினை இராவணன் தன்கைகளால் வளைத்துத் தழுவி எடுத்தலும் கடலிடைச் சங்கங்கள் அனைத்தும் அஞ்சங் கொண்டு முழங்கின. தேனினுமினிய அழகிய வாயினையுடைய மலைமகளும் திகைத்து அச்சங் கொண்டு, கங்கையைச் சடையில் கொண்ட சிவனின் இடைதழுவி அவனுடன் கலந்தனள் அரோ ஈற்றசைச்சொல்

**132.** கலத்தலுமுமைதழீஇயகையுடன்கைதழுவி (கஙஉ)
நலத்திடப்புறமவட்கருளு [109] நன்னடையுமாய்ப்
பொலத்தடக்கைகளொரெட்டுமொர்முகப்பொழிவுமாய்
வலத்திருப்புறமரக்கன் மிசைவைத்தசினமாய்

கலத்தலும் உமை தழீஇய
கையுடன் கைதழுவி,
நலத்து இடப்புறம் அவட்கு
அருளு நன் நடையுமாய்.
பொலத்தடக்கைகள் ஒருஎட்டும்
ஒருமுகப் பொலிவுமாய்,
வலத்து இருப்புற அரக்கன்
மிசை வைத்த சினமாய்.

---

பா.வே. 108 அயல்

பொருள்: உமை சிவனைக் கலந்து நின்றபோது அவளது கையுடன் தன்கையையுந்தழுவி அரைவணைத்து, நலம் பொருந்திய இடப்புறத்தில் உமை அம்மைக்கு நல்லருள் செய்பவனாய் வண்மைமிகு அருள்பொலியும் எட்டுக்கைகளும், அருள் செறிந்த முகப்பொலிவுங்கொண்டு வலம்புறம் அசைவற்று நிலைக்கும்படி இராவணன்மீது தன் சினத்தைச் செலுத்தினன்.

133. சினமழுத்துடி செறிந்ததிரிசூலமசைய (கஙங)
மனைவியைத் தழுவுகையின்மணிமால்வரைதொட
வனையநாகமதனங்குசமொடவ்வரதமு
மினையகை தொறுமமைத்தினிது தெற்குமுகமாய்

சினம், மழு, துடி, செறிந்த
திரி சூலம் அசைய,
மனைவியைத் தழுவு கையின்
மணிமால்வரை தொட
அனைய நாகம் அதன்
அங்குசமொடு அவ்வரதமும்
இணைய கைதொறும் அமைத்து,
இனிது தெற்கு முகமாய்

பொருள்: சினங்கொண்ட இறைவன், மழு உடுக்கு திரிசூலம் என்பன அசைய, தன்பாகமாகக் கொண்ட மனைவி உமையத் தழுவிய கையின் அழகிய மணிகள் திருமலையின் மேல் தொடுதல் செய்ய நாக அணிகளும் அங்குசமும் நீங்காது பொருத்தமுறக் கொண்டு, ஆன்மாக்களுக்குப் புகலிடமாய் விளங்கும் அருட்கையமைந்த வடிவுடன் அன்பருள் பொலிந்து தெற்கு நோக்கியிருந்தனர்.

134. மாயனாடரிய தோரடி மடித்தொரடிக்கீழ்த் (கஙச[1])
தோயவீரமுதிராசனமிருந்துதுணைவன்
சேயதோர்விரநுதிக்கொடுமுனிந்துசிறிதே
யாயராவணனை யெற்றலுமவன்[110]கதறினான்

மாயன் நாடரிய ஒரடி
மடித்து ஒரடிக் கீழ்த்
தோய, வீரமுதிர் ஆசனம்
இருந்து துணைவன்
சேயதோர் விரல் நுதிக்கொடு
முனிந்து சிறிதே
ஆய ராவணனை எற்றலும்
அவன் கதறினான்

பொருள்: திருமாலும் தேடிக் காண்பதற்கரிய தன் திருவடிகளில் ஒரடியினை மடித்து, மற்றைய ஒரடியினைக் கீழ் நோக்கிவிட்டு வலது தொடையில் இடப்புறமாய்க்காலினைவைத்து வீரஞ் செறிந்த இருக்கையில் இருந்தனன். அவ்வண்ணம் ஆன்மாக்களுக்கு நீங்காத்துணையாக இருக்கும் தலைவன் சிவபெருமான், சினந்து தன் செம்மைமிக்க விரல் நுனியினால் இராவணனைச் சிறிதே எற்றினன். அதனால் இராவணன் நிலைகுலைந்து ஒலமிட்டனன்.

---

பா.வே. 109 நன்னகையுமாய் 110 தவறினான்

**135.** நானிலங்களுமதிர்ந்துடனடுங்கவலறிப் (கஙரு)
பானுவின்சுடர்படுங்கடல்சிவந்தபடிபோன்
மேனியெங்கணும்விழுங்குருதிவெள்ளமொழுகத்
தானெருங்கியலையாழியிடைதாழ்ந்தனனரோ

நால் நிலங்களும் அதிர்ந்து
உடல் நடுங்க அலறிப்
பானுவின் சுடர்படும் கடல்
சிவந்தபடி போல்,
மேனி எங்கணும் விழும்
குருதி வெள்ளம் ஒழுகத்
தான் நெருங்கி அலை
ஆழியிடைத் தாழ்ந்தனனரோ

பொருள்: குறிஞ்சி-முல்லை-மருதம்-நெய்தல் ஆகிய செழுமை கொண்ட நன்நிலங்கள் பொருந்திய இம்மண்ணகம் அதிர்ச்சி பெற்று நிலைகுலைய இராவணன் அலறினான். சூரியனது செங்கதிர் ஒளியால் கடல்நீர் சிவந்து தோன்றுவது போல் இராவணனின் உடலில் இருந்து ஒழுகிய இரத்தப் பெருக்கானது ஒழுகிக் கடலுடன் கலந்தது. அதனால் இராவணன் நிலைகெட்டு நொந்து அலை நிறைந்த கடலிடத்துத் தாழ்ந்தனன்.

அரோ= ஈற்றசை

**136.** தாழ்ந்தனன்கனலிதிக்கொருதனித்த[111]சமுக (கஙசா)
னாழ்ந்ததென்கடலினன் றொருமைநாகமயர்வால்
வீழ்ந்ததொன்றுவமையல்லதயல்வேறுமுளதோ
சூழ்ந்துவிண்ணிடையினின்றமரர்துள்ளல்புரிவார்

தாழ்ந்தனன் கனலி, தித்கொரு
தனித் தசமுகன்
ஆழ்ந்த தென் கடலின்
அன்றொரு மைநாகம் அயர்வால்,
வீழ்ந்தது ஒன்று உவமை அல்லது,
அயல் வேறும் உளதோ,
சூழ்ந்து விண்ணிடையின் நின்று,
அமரர் துள்ளல் புரிவார்.

பொருள்: தீயினைக்கையில் ஏந்தியசிவன் தன்திருவடியினைத் தாழ்த்துதலும்; திக்கனைத்தையும் தன் ஆணையில் தானே ஒருவனாய் ஆளும் இராவணன் வீழ்ந்த காட்சி. அன்றொரு நாள் ஆழம்மிக்க தென்கடலிடை பெருமலையொன்று நிலைகெட்டு அடிபெயர்ந்து வீழ்ந்ததனைப்போன்றிருந்தது. இதனை வேறு உவமை கொண்டு விளக்குதல் இயன்ற தொன்றன்று. இந்நிகழ்வினைக் கண்ட தேவர்கள் வானகத்துக் கூடி நின்று மகிழ்ச்சியினால் துள்ளி ஆடினர்.

வேறு

**137.** வாரிவிழுந்தவன் மீள வெழுந்திலன் வாரானென் (கஙஎ)
றாருமவன்பரிதேரொரு சிந்தியுடைந்தேகச்
சீரியவங்கைகொடெற்றியெறிந்து தெளிந்தே நின்
றாரு மகிழ்ந்தினி தாடினர் பாடினரவ்வானோர்.

---

பா.வே. 111 தெசமுக

வாரி விழுந்தவன் மீள
எழுந்திலன் வாரான் என்று,
ஊரும் அவன் பரிதோரொடு
சிந்தி உடைந்தேகச்,
சீரிய அங்கைகொடு எற்றி
எறிந்து தெளிந்தே நின்று,
ஆரும் மகிழ்ந்து இனிது
ஆடினர் பாடினர் அவ்வானோர்.

பொருள் : கடலிடத்து வீழ்ந்த இராவணன் மீண்டும் எழுந்திலன். இனி வர மாட்டான். ஊரும் அவன் தேர் குதிரையுடன் உடைந்து அழிந்தது. எனக்கூறித்தமது அழகிய கைகளைக் கொட்டி மகிழ்ச்சியினை வெளியிட்ட தேவர்கள் அனைவரும் ஆடிப்பாடினர்.

138. வானவர்துள்ளுமகிழ்ச்சிகள் கோண மலைக்கே வாழ் (கந௲அ)
வானவர்கண்டு களித்தலு மானை முகத்தோனும்
ஞானவிரிஞ்சனும் வந்து வலந் தொழநல்வேலோன்
கானநறுந்துள வோனுடனின்று கசிந் தோத

வானவர் துள்ளும் மகிழ்ச்சிகள்,
கோண மலைக்கே வாழ்
வானவர் கண்டு களித்தலும்,
ஆனை முகத்தோனும்,
ஞான விரிஞ்சனும் வந்து,
வலஞ் தொழ, நல்வேலோன்
கான நறுந் துளவோன் உடன்
நின்று கசிந்து ஓத.

பொருள் : தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்து துள்ளும் ஓசையினைத் திருமலையிடத்து வாழ்கின்ற தேவர்கள் கேட்டு மகிழ்ந்தனர். ஆனை முகத்தினையுடைய கணபதியும் வேதம் ஓதும் தாமரைமலரோனான பிரமனும் வந்து வலஞ் சுற்றித் தொழுதனர். வெற்றி மிக்க வேல்தாங்கிய முருகனும், மணம் மிக்க நலஞ்செறிந்த திருத்துளாய் மாலை யணிந்த திருமாலும் அவர்களுடன் இணைந்து நின்று உள்ளங்கசிந்து இறைவனின் புகழை ஓதினர்.

139. ஓதநெடுங்கடனஞ்சமுவந்தினி [112] துண்டோர்பா (கந௲கூ)
லாதரவம்பினையுந்து யர்மாறினளன் பூரப்
போதமகிழ்ந்துவணங்கியிணங்கினர் பொன்னாடர்
வேதமுழங்கினகோணமலைத் தலைமீதன்றே.

ஓத நெடுங்கடல் நஞ்சம்
உவந்து இனிது உண்டோர்பால்,
ஆதர அம்பிகையும் துயர்
மாறினள் அன்பூரப்
போத மகிழ்ந்து வணங்கி,
இணங்கினர் பொன் நாடார்,
வேதம் முழகின, கோணமலைத்
தலைமீது அன்றே.

---

பா.வே. 112 உண்டோன்பால்

பொருள் : அன்று; அலையோசை கொண்ட பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சினை விருப்புடன் உண்டு உலகனைத்தையுங் காத்த தலைவன் சிவன்பால் அவனின் அரைவணைப்பிலிருந்த மலைமகளும் துன்பம் நீங்கினள். தேவர்கள், பேரறி வாளனான சிவனின் அருள்பெற்று மகிழ்ந்தனர். திருமலையின் உச்சியில் வேதங்கள் முழங்கின.

ஏ தேற்றேகாரம்

140. அன்றுமைபங்கொருபாதிவிளங்கவரன்பாதி (கச[1]0)
நின்றுருவாயருவாகியகம்புறநீங்காதா
யொன்றுமிரண்டுமிரண்டுடனொன்றுமுடன்[113]வேறாய்த்
துன்றுயிருக்குயிராயவர்தோன்றினர் தோன்றாதார்

அன்று; உமை பங்கு ஒரு பாதி
விளங்க, அரன் பாதி
நின்று உருவாய் அருவாகி
அகம் புறம் நீங்காதாய்,
ஒன்றும் இரண்டும் இரண்டுடன்
ஒன்றும் உடன் வேறாய்த்
துன்று உயிர்க்கு உயிராய்.
அவர் தோன்றினர் தோன்றாதார்.

பொருள் : தோற்றமும் முடிவுமற்ற இறைவன் அன்று உமையைத் தன்பாகமாய்க் கொண்டு விளங்கியவனாகியும் ; உருவுடையவனாகியும், அருவுருக் கொண்டவனாகியும், அருவேயாகியும், எங்கும் நீக்கமறப்பிரகிருதியின் உள்ளுமாய்- அதன் புறமுமாய் நின்று தானே அனைத்துமாய் ஏகமாய் ஒன்றாகித் தன் சத்தியுடன் இரண்டாகி- அச்சத்தியால் தோன்றிய பிரகிருதியாய இயற்கையாய் மூன்றாகி- இவை அனைத்திலும் நின்று வேறாகி உயிர்கள், அனைத்திற்கும் உயிர்க்குயிராகித் தோன்றினன்.

141. தாரணிநீர்கனல்கால்வளியேமுதறானானா (கச[1]க)
ரேரணியாதியனாதியதாயொரெழுத்தானார்
பேரணியண்டமகண்டமொடாணலிபெண்ணானார்
வேரணிதென்கயிலைத்தலையின்றொருமெய்யானார்

தாரணி நீர் கனல் கால் வளியே
முதல் தானானார்,
ஒரணி ஆதி அனாதியதாய்
ஓர் எழுத்தானார்
பேரணி அண்டம் அகண்டமொடு
ஆண் அலி பெண்ணானார்
வேரணி தென் கயிலைத்
தலையின் ஒரு மெய்யானார்.

பொருள்: சிவன்: நிலம் - நீர்- நெருப்பு -காற்று வான் என்ற ஐம்பூதங்கள் வழி தானே முதல்வனானான். திருமலையில் எழுந்தருளி அருள் செய்பவனாய்க் - குண்டலினியாகிய சக்தியை உடையவனாய்- தோற்றத்திற்கு உரியவனாய்த் தோற்றத்திற்கு அப்பாற்பட்டவனாய் ஓ என்ற மூல ஒலியானான். ஒழுங்குபட

---

பா.வே. 112 உண்டோன்பால் 113 பேறாய்

அமைந்த அண்டங்களானான். அண்டங்கள் கடந்த பெருவெளியானான். ஆணானான் பெண்ணானான். அலியானான், நிலை கொண்ட தென்கயிலையின்- அதன் குவட்டின் வடிவானான்.

## வேறு

142. ஆனவக்கடவுட் சோதியவிர்திருமேனிநோக்கி (கச[1]உ)
வானவர்தடக்கை கூப்பிமாலயன்வருந்திக்காணா
ஞானமாஞ்சுடரேயெங்கணற்றவப்பயனேயின்றோ
ரீனமாமரக்கனாலீடேறினம்யாமுமென்பார்

ஆன அக்கடவுள் சோதி,
அவிர் திருமேனி நோக்கி,
வானவர் தடக்கை கூப்பி,
மால் அயன் வருந்திக்காணா,
ஞானமாம் சுடரே எங்கள்
நற்றவப் பயனே இன்றோர்,
ஈனமாம் அரக்கனால் ஈடேறினம்
யாமும் என்பார்.

பொருள்: அனைத்துமாய்- ஒளிவடிவாய்ப் புனித வடிவு கொண்டுநின்ற இறைவனை இமையவர் அனைவரும் நோக்கித் தமது நீண்டு அகன்ற கைகளைக் கூப்பி, இறைவனே! திருமாலாலும்- பிரமனாலும் தேடிக் காண்பதற்கியலாத ஞானச்சுடரானவனே நாங்கள் செய்த பெருந்தவத்தின்பயனே உம்மைக் கண்டு வணங்கியது அதனால் நாம் மீட்சி பெற்றோம் என்றனர். இழிந்த அரக்கன் செயலால் பெரும்பேறு பெற்றோம் என வாழ்த்தினர்.

143. பாரியமறையினுச்சிபரத்துறைபதத்தின்செவ்வி (கச[1]ங)
கூரிய வரக்கனாற்கண்டிருவிழிகுளிராநின்றோம்
பூரியனென்னுநல்லோர்நிருதனைப்போலவுண்டோ
வாரியினஞ்சுண்டெங்களுயிர்தந்தாய் வாழியென்பார்

பாரிய மறையின் உச்சி,
பரத்துறை பதத்தின் செவ்வி,
கூரிய அரக்கனால் கண்டு
இருவிழி குளிரா நின்றோம்,
பூரியன் என்னும் நல்லோர்,
நிருதனைப் போல உண்டோ
வாரியின் நஞ்சுண்டு, எங்கள்
உயிர்தந்தாய் வாழி என்பார்.

பொருள்: இறைவனே! நீ மறையின் உச்சியாய் அதன் முடியாய் இருப்பவன். நீயே செம்மைசான்ற பரம் பொருள். அனைத்துமாய் நிற்கும் துணிபொருள். கொடுமையும் வீரமும் நிறைந்த இராவணனால்- அவனின் செயலால், உன்னை எமது இரு விழிகளாலும் இன்புறக்கண்டு நின்றோம். சிறந்த பண்புடையார் எனக் கூறும் நல்லவர்களில் இராவணனைப் போல் நல்லவர்கள் உண்டோ. பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சினையுண்டு எம்மைக் காத்தவனே- பரஞ்சுடரே உன்னை வாழ்த்தி வணங்குகின்றோம் என்றனர் தேவர்கள்.

144. வாழியவுலகீரேழுமியாங்களுமழியாவண்ண (கச[1]ச[1])
மாழிநஞ்சுண்டநன்றியதனினுநன்றிதையா
பாழியம் பொருப்பின்கீழ்போய்நிருதன்பாதளம்வீழ
வூழியின்முதல்வநீயின்றோருருக்கொண்ட தென்பார்

வாழிய உலகு ஈரேழும்,
யாங்களும் அழியா வண்ணம்,
ஆழி நஞ்சுண்ட நன்றி
அதனினும் நன்றிது ஐயா
பாழியம் பொருப்பின் கீழ்போய்
நிருதன் பாதளம் வீழ
ஊழியின் முதல்வநீயின்று,
ஓர் உருக்கொண்டது என்பார்

பொருள்: ஊழிமுதல்வனே! நாங்கள் அழியாத வண்ணம் அண்டப் பெருவெளியில் அமைந்த [0] பதினான்கு உலகங்களும் சீர்பெற்று வாழவேண்டும். நீ இன்று செய்த அருட் செயல்; அன்று நஞ்சுண்ட செயலிலும் மிகவும் உயர்ந்தது. நிருதனான இராவணனை, பாதள உலகில் அமைந்த மலையின் கீழ்போய் விழும்படி செய்தனை. இதற்காகவே நீ இத்தகைய வடிவம் கொண்டனை எனத் தேவர்கள் போற்றிப் பரவினர்.

[0] புவனோற்பத்திச்சருக்கம் 15ம் பாட்டுரையில் காண்க

145. கொண்டலிற்கரியகூற்றையொருமறைக்குழவிக்காகப் (கச[1]ரு)
பண்டுதைத்தருளுமன்றோர்பதங்கடவூரிற்கண்டோம்
மண்டுமெம்பொருட்டாலிந்தவரக்கனை நெரிக்கும்பாதங்
கண்டனமின்றே தென்பாற்கயிலைமாமலையிலென்பார்

கொண்டலில் கரிய கூற்றை
ஓர் மறைக் குழவிக்காகப்
பண்டு உதைத்தருளும் அன்று
ஓர்பதம் கடவூரில் கண்டோம்
மண்டும் எம் பொருட்டால்
இந்த அரக்கனை நெரிக்கும்பாதம்
கண்டனம் இன்றே தென்பால்
கயிலை மாமலையில் என்பார்

பொருள்: பரம்பொருளே! எம்தலைவா!! கருக் கொண்ட முகிலிலும்பார்க்கக் கருமை கொண்ட கூற்றுவனை, அந்தணச் சிறுவன் மார்கண்டனைக் காப்பதற்காகத் திருக்கடவூரில் உதைத்தனை. அவ்வேளையில் உன்திருவடியினைக்கண்டு தொழுதோம். இன்று துயரால் நெருக்குண்ட எம்பொருட்டு இந்த அரக்கனை நெரிக்கும் திருவடியினைத் தென்கயிலையாகிய திருமலையில் கண்டனம் என்று தேவர்கள் புகழ்ந்து கூறினர்.

146. என்றவரிறைஞ்சிப்பூசித்தெண்கணான்முகுந்தனேத்தத் (கச[1]சா)
துன்றிருங்கதிருந்திங்கட்சோதியும் விளக்கமேந்த
வன்றிரைக்கடல்சூழ்ந்[0] தார்ப்ப[0] வருந்திரிகூடவெற்பிற்
றன்றுணைத்தேவியோடு ந்தம்பிரானிருந்தகாலை.

என்றவர் இறைஞ்சிப் பூசித்து
எண்கணான் முகுந்தன் ஏத்த,
துன்றிரும் கதிரும் திங்கள்
சோதியும் விளக்கம் ஏந்த,
வன்திரைக் கடல் சூழ்ந்து
ஆர்ப்ப அருந் திரிகூடவெற்பில்,
தன் துணைத் தேவியோடும்
தம்பிரான் இருந்தகாலை.

0 "ஆர்ப்பவரும் திரிகூடவெற்பில்" எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். அது சிறப்பன்று.

பொருள்: தேவர்கள் புகழ்ந்து கூறி வணங்கிப் பூசிக்கப், பிரமனும் திருமாலும் போற்றுதல் செய்ய, ஒளிமிக்க பெருங்கதிர் கொண்ட சூரிய- சந்திரர்- அக்கினி என்போர் விளக்கம் ஏந்தி ஒளிபரப்ப, வலிய திரைகள் அலைவீசி ஆர்க்கும் கடல் சூழ்ந்த திரிகூடம் என்ற திருமலையில்; தன் பாகமாகக் கொண்ட உமையோடு தலைவனான எம்பிரான் இருந்த வேளை;

147. காலமுமனேகஞ் செல்லநிருதனுங்கடலுணின்று (கச[1]எ)
கோலவெங்கண்டன்றன்னிற் சிலகண்கள் குளிர் பூவெண்னச்
சீலமோடிடந்துவெற்பின்றிருவடிக்கிட்டுஞான
மூலமேயபயந்தீயேன்முழுப்பிழைபொறுத்தியென்றே.

காலமும் அனேகம் செல்ல,
நிருதனும் கடலுந் நின்று,
கோல வெங்கண்டந் தன்னில்
சிலகண்கள் குளிர் பூ என்னச்
சீலமோடு இடந்து, வெற்பின்
திருவடிக்கு இட்டு, ஞான
மூலமே அபயம், தீயேன்
முழுப்பிழை பொறித்தி என்றே.

பொருள்: காலம் அனேகம் சென்றபின் இராவணன் கடலில் நின்றும் வெளி வந்தனன். வந்தவன்; கண்களில் அன்பு மலர மிக்க ஒழுங்குடன் நடந்து திருமலையின் அடிக்கு வந்து, சில கண்களை, மலராக இறைவன் திருவடிக்கிட்டு, இறைவனை நோக்கி, பேரறிவின் வித்தே! உனது அடைக்கலம், தீயவனான என் பிழை பொறுத்தருக என்றனன்.

148. என்றொருசிரத்தை வாங்கியெரிபுரைகுஞ்சிநீக்கிக் (கச[1]அ)
குன்றலில்குருகுதள்ளிக்குடுகெனவீக்கிமுன்கை
நன்றெனவுளகுதாங்கிநரம்பினங்கம்பியாக்கி
வென்றிசேர்வீணையேந்திமிழிற்றினன்கீதநாதம்

என்று ஒரு சிரத்தை வாங்கி,
எரிபுரை குஞ்சி நீக்கிக்,
குன்றலில் குருகு தள்ளிக்,
குடுகென வீக்கி, முன்கை
நன்றென உளகு தாங்கி,
நரம்பினம் கம்பியாக்கி,
வென்றிசேர் வீணை ஏந்தி,
மிழிற்றினன் கீத நாதம்.

பொருள்: போற்றிப்பரவிய இராவணன்; தன்தலைகளில் ஒன்றினை அறுத்து அதில் இருந்த சிவந்த தலைமுடியினையும் மண்டையின் உள்ளிருந்த மூளையினையும் நீக்கி, வீணையின் அடியில் அமைவுறும் குடுகுபோல் அமைவுறச் செய்தனன். கையினில் ஒன்றை வீணையின் தண்டாகப் பொருத்தினான். இன்னொருகையின் நரம்புகளை வீணையின் கம்பிகளாக்கிச் சிறப்புற்ற வீணையாக்கினன். அதனையேந்தி சாமவேதத்தினை நாத இசை வழுவாது பாடுவானாயினன்.

149. நாதமங்கெழுந்தபோதுநனியுவர்கடற்குமுண்டோ (கச[1]கூ)
கோதிலாவமுதமென்னக்குளிரிசையுமையாள்கேட்டுப்
பாதமீதிறைஞ்சியீசற்குரைத்தலும்பரமனம்மை
யாதரிப்பவனைநம்பாலழைத்திபோய்நந்தியென்றான்.

நாதம் அங்கு எழுந்த போது,
நனியுவர்க் கடற்கும் உண்டோ,
கோதிலா அமுதம் என்னக்
குளிர் இசை உமையாள் கேட்டுப்,
பாதமீது இறைஞ்சி ஈசற்கு
உரைத்தலும், பரமன் நம்மை
ஆதரிப்பவனை நம்பாமல் அழைத்தி
போய் நந்தி யென்றான்.

பொருள்: இராவணனின் இனிய நாத இசையினைக் கேட்ட உமையவள்; மிக்க கைப்புக் கொண்ட உவர்க்கடலிடத்தில் குற்றமற்ற அமுதம் உண்டோ என வியந்தனள். இசையால் மகிழ்ந்த உமையவள் இறைவனின் திருவடிகளை வணங்கி அதனை உணர்த்தினாள். இறைவன் நந்தியம் பெருமானை நோக்கி எம்மேல் அன்பு பூண்டு வழிபடுபவனை, எம்மிடம் அழைத்து வருக எனப் பணிந்தனன்.

150. நந்தியும்விடைபெற்றேகிநளிர்கடற்கீழ்போய்வீழ்ந்து (கரு0)
சிந்திய சிந்தையானைச் சிவனழைத்தனனென்றோத
வந்தரமிசையின்மேகமதிர்ந்து[114]போவதுபோல்வேத
முந்துறும்வாய்களார்ப்பமுகந்தொறுங்கண்ணீர்பெய்தான்

---

பா.வே. 114 பெய்வது

நந்தியும் விடைபெற்று ஏகி,
நளிர்கடல் கீழ்போய் வீழ்ந்து
சிந்திய சிந்தையானைச், சிவன்
அழைத்தனன் என்று ஓத,
அந்தர மிசையின் மேகம்
அதிர்ந்து போவதுபோல், வேத
முந்துறும் வாய்கள் ஆர்ப்ப
முகந்தொறும் கண்ணீர் பெய்தான்.

பொருள்: இறைவனின் பணிப்புரை கேட்ட நந்தியம் பெருமான் இறைவனிடம் விடைபெற்றச் சென்று, புல வேட்கையுற்றுத் துன்பத்தால் சிதறிய உள்ளத்தவளான இராவணனை நோக்கி, உன்னை எம்பெருமான் சிவன் அழைத்தனன் எனக் கூறினான். அதனைச் செவிமடுத்த இராவணன்; வானத்தில் மேகம் இடி முழக்கஞ் செய்வதுபோல், வாய்கள் அனைத்தும் இசையோடு வேதத்தினைப்பாடி ஒலியெழுப்ப, முகங்கள் அனைத்திலும் கண்ணீர் சொரிய நின்றனன்.

151. [115] தானுளநீளமானயோசனைமுப்பதோடு (கருக)
மானமார்பகலநான்குயோசனைவடிவத்தோடும்
ஞானமார்நந்திசொன்ன[116]நலஞ்செவிபுகுதலோடு
நீணிறக்கடல்விட்டோங்கிநிருதனுநிமிர்தலுற்றான்.

தானுள நீளமான யோசனை
முப்பதோடும்
மானமார்பு அகல நான்குயோசனை
வடிவத்தோடும்
ஞானமார் நந்தி சொன்ன
நலம் செவி புகுதலோடு
நீணிறக் கடல் விட்டோங்கி
நிருதனும் நிமிர்தலுற்றான்.

பொருள்: பேரறிவு கொண்ட நந்தியம் பெருமான் கூறியவற்றைக்கேட்ட மானம்மிக்க இராவணன்; முப்பது யோசனை உயரமும், நான்கு யோசனை கொண்ட மார்புங்கொண்ட வடிவத்துடன் நீலநிறம் பொருந்திய கடலினை விட்டு வெளியே வந்து நிமிர்ந்து நின்றனன்.

152. உற்றெறிகடற்கண்மேகமுதித்தெனவெழுந்தசெவ்வி (கருஉ)
தூற்றிடுமுகமொன்பானுந்தொட்டகட்குழியுங்கையாற்
பெற்றதோர்யாழுங்கொண்டு பெருந்தகைநந்தி பின்போய்ப்
புற்றரவணிந்த கோணைப்புனிதன் முன்பணிந்து நின்றான்.

உற்றெறி கடற்கண்; மேகம்
உதித்தென எழுந்து, செவ்வி
உற்றிடு- முகம் ஒன்பானும்
தொட்ட கட்குழியும் கையால்
பெற்றதோர் யாழும் கொண்டு
[0] பெருந்தகை, நந்திபின்போய்ப்
புற்றரவு அணிந்த கோணைப்
[0]புனிதன்முன் பணிந்து நின்றான்

---

பா.வே. 114 பெய்வது 115 தானுளமுப்பான்யோசனைதயங்கித் தோற்ற
116 நன்மொழி செவியிற்கொண்டே

பொருள்: வேதநாதம் ஓதும் பெருந்தகையான புனிதன் இராவணன், அலைவீசி எழுகின்ற கடலிடத்திலிருந்து, நீர் கொண்ட முகில் தோன்றியெழுந்து செல்வது போன்று, ஒன்பது முகத்துடனும் கண்களையுடைய தலையையும்- கையினையும் கையின் நரம்புகளையுங் கொண்டமைந்த யாழுடனும் பெருந்தகையான நந்தியின் பின் சென்று, புற்றில்வாழும் நாகத்தை யணியாகக் கொண்ட தலைவனான இறைவன் முன் வணங்கி நின்றான்.

[0] பெருந்தகை புனிதன் என்ற இரு சொற்களும் பொது வாய்நின்று; இறைவன் நந்தி இராவணன் என்போர்க்கு புகழ் விளக்கும் அடையாயின.

153. நின்றபோதமலனந்தநிருதனை நோக்கியன்பா (கருங)
லன்றரிசிரமுந்தொட்டவருவிழிச்சுடருமுன்னாட்
இன்றுறுவாளுமீளக்கொடுத்துக் கோடீசலிங்க
மொன்றுமங்களித்துச்செல்கென்றேவத்தாழ்ந்தொல்லைமீண்டான்

நின்றபோது அமலன் அந்த
நிருதனை நோக்கி அன்பால்,
அன்று அரிசிரமும் தொட்ட
அருவிழிச் சுடரும் முன்னாள்
இன்றுறு வாளும் மீளக்கொடுத்து
கோடீசகி லிங்கம்
ஒன்றும் அங்களித்துச், செல்கென்று
ஏவத், தாழ்ந்து ஒல்லை மீண்டான்.

பொருள்: இறைவன் தன்முன் வணங்கி நின்ற இராவணனை நோக்கி அன்பு செய்தனன். பின் அவன் அன்று அரிந்த தலையினையும், தோண்டி யெடுத்த அருமைமிகு கண்ணினையும்- குன்றினைவெட்ட முயன்று அதனால் இழந்த வாளினையும் மீளத்தந்தேன் எனப்பகர்ந்து அவற்றுடன் கோடி ஈசர்களில் ஆற்றல்மிக்க கோடீசலிங்கம் ஒன்றும் கொடுத்துச் செல்கெனப் பணித்தனன். இராவணனும் அவற்றினைப் பெற்றுத் தாழ்ந்து வணங்கி அவ்விடம்விட்டுச் சென்றனன்.

154. மீண்டவன் போகும் போது விடுசிகைத்தலையுநூலும் (கருச[1])
பூண்ட பூந்தழையுமேந்திப்பூசிக்கவருவான்போல
நீண்டமான்மறையோனாகிநிருதன்முன்வரலும் வெற்பைக்
கீண்டவனவனையந்தக்கிரிவருநீயாரென்றான்.

மீண்டவன் போகும் போது
விடுசிகைத் தலையும் நூலும்
பூண்ட பூந்தழையும் ஏந்திப்
பூசிக்க வருவான் போல
நீண்ட மான் மறையோனாகி
நிருதன்முன் வரலும் வெற்பைக்
கீண்டவன் அவனை அந்தக்
கிரிவரும் நீ யாரென்றான்.

பொருள்: இராவணன் தன் இருப்பிடம் நோக்கிச் சென்ற போது, மழித்த தலையும்பூனூலும் கொண்ட வடிவுடன் கையில் பூவும் பசுந்தளையும் மேந்தி

---

[1] பா.வே 117 ஓத

இறைவனை வணங்க வருவது போல் மாண்புமிகு அந்தண வடிவம் கொண்டு. திருமால் அவன்முன் தோன்றினான். வெற்பினை எடுத்த வலிகொண்ட இராவணன் அந்தணனை நோக்கி இத்திருமலையிடத்தில் வரும் நீ யார் என வினவினான்.

155. ஆரெனநெடிது கேட்டவிராவணன்வதன நோக்கிப் (கருரு)
பாரெனும் பரப்பிற்றெய்வப்பதியெங்கும் பணிந்திப்போது
காரணவரக்கர் வாழ்க்கைக்கடலக விலங்கை நின்றே
[118] யாரெனமுதல்வற்போற்றியரிச்சிப்பான் வந்தே னென்றான்.

ஆரென நெடிது கேட்ட
இராவணன் வதனம் நோக்கிப்
பாரெனும் பரப்பில் தெய்வப்
பதி எங்கும் பணிந்து இப்போது
கார்அண அரக்கர் வாழ்க்கைக்
கடலக இலங்கை நின்றே
ஆரண முதல்வற் போற்றி
அரிச்சிப்பான் வந்தேன் என்றான்.

பொருள்: நீயார் என்று கேட்ட நெடிய இராவணன் முகத்தினை நோக்கிய அந்தணன் வடிவில் வந்த திருமால்; இப்பூமிப்பரப்பில் அமைந்த புனித இடங்கள் எங்குஞ் சென்று அவ்விடங்களில் அமைந்துள்ள புனித இடங்களையும், அவ்விடங்களில் எழுந்தருளியுள்ள அருள்கொண்ட திருவடிவங்களையும் வணங்கி வருகின்றேனெனக்கூறியவன், சூல் கொண்ட முகில்போன்ற, வண்ணமும் செழுமையுங் கொண்ட அரக்கர் வாழும் இலங்கையில் தங்கி வேதமுதல் வனானசிவனைப் போற்றிப் பூசனை செய்து வழிபட வந்தே னென்றான்.

156. வந்தனனென லு மங்கவ்வளம்பதியியல் பேதென்ன (கருசா)
வந்தவூரரக்கர் கோமானன்னையாமொருத்தி[119] மேனாட்
சுந்தரப்புதல்வன்கோணமலையின்கீழ்த்[120] துணிந்தானென்ன
நைந்துநொந்துயிரும்விட்டா[121] ளென்பரன்னாட ரென்றான்.

வந்தனன் என லும், அங்கவ்
வளம்பதி இயல்பேதென்ன,
அந்த ஊர் அரக்கர் கோமான்
அன்னையாம் ஒருத்தி மேல்நாள்,
சுந்தரப் புதல்வன் கோணமலையின்
கீழ்த் துணிந்தான் என்ன,
நைந்து நொந்து உயிரும் விட்டாள்
என்பர் அன்னாடர் என்றான்

பொருள்: மாயவேதியன் கூறியதனைக்கேட்ட அரக்கர் கோமான் அவனை நோக்கி, வளங்கொண்ட இலங்கைநாட்டின் இயல்பு எவ்வண்ணம் உள்ளதெனக் கேட்டனன். அதற்கு அந்தமாயவேதியன், அவ்வூர் அரக்கர் கோமான்

---

பா.வே. 118 மாரண

அன்னை முன்னாளில் தன் வீரம்மிக்க அழகியமகன் திருமலையின்கீழ் அகப்பட்டு இறந்தனன் எனக் கேட்டதனால் உளந்நொந்து நெக்கி, உயிரினையும் விட்டனள்- என அந்நாட்டவர் பகர்கின்றனர் என மொழிந்தான்.

157. என்னுமம் மொழிநாராசமிருபதுசெவியும்பாயத் (கருஎ)
தன்னுயிர்பதைத்து நெஞ்சந்தளர்ந்து வீழ்ந்தெழுந்து வாய்விட்
டன்னையோவன்னையோவிவ்விலிங்கமார்க்களிப்பனையோ
நின்னையுமிழந்தென்னாவிநிற்குமோநிலத்திலென்றான்

என்னும் அம்மொழி நாராசம்
இருபது செவியும்பாயத்,
தன்னுயிர் பதைத்து நெஞ்சம்
தளர்ந்து வீழ்ந்து எழுந்து, வாய்விட்டு
அன்னையோ, அன்னையோ
இவ்விலிங்கம் ஆர்க்களிப்பன் ஐயோ,
நின்னையும் இழந்து, என் ஆவி
நிற்குமே நிலத்தில் என்றான்.

பொருள்: அந்தணவடிவங்கொண்டுவந்த திருமாலின் மொழி கேட்ட இராவணன் தன் இருபது காதுகளிலும் இரும்பினை உருக்கி வார்த்தது போன்ற வேதனைக்குட்பட்டுத்- தன்னுயிர் பதைபதைத்து நெஞ்சம் நெக்குருகத் தளர்ந்து நிலத்தின் மீது வீழ்ந்து எழுவான். வாய்விட்டு அரற்றி என் அன்னையோ அன்னையோ இனி இந்த இலிங்கத்தினை யாருக்குக் கொடுப்பேன்? ஐயோ நின்னையும் இழந்து என் உயிர் நிலத்தில் நிற்குமோ என்றான்.

158. என்றவனிரங்குங்காலையிலிங்கநின்கரத்திலேந்தி (கருஅ)
நின்றிரங்குவதொண்ணாதென்றிலிங்கந் தன்நெடுங்கை[122] தாங்கி
மன்றலங்கயிலைவெற்பில்வாமபாணிருதிதிக்கில்
வென்றியஞ்சயம்புவாக விரிகடல்வண்ணன் வைத்தான்.

என்று அவன் இராங்கும் காலை,
இலிங்கம் நின்கரத்தில் ஏந்தி
நின்று இரங்குவது ஒண்ணது என்று
இலிங்கம் தன்நெடுங்கை தாங்கி,
மன்றலம் கயிலை வெற்பில்
வாமபால் நிருதி திக்கில்
வென்றி அம்சயம்பு வாக
விரிகடல் வண்ணன் வைத்தான்

பொருள்: இராவணன் தன் அன்னையை நினைந்து அழுது புலம்பிய வேளையில் அந்த மாயமுனிவன் கடல் வண்ணன், இராவணனை நோக்கி இலிங்கத்தினைக் கையில் தாங்கிக்கொண்டே அழுதுபுலம்புதல் ஏற்புடைச் செயலன்று எனக்கூறித்தன் நீண்ட நெடியகையில் அதனை வாங்கினன். பின் மலர்ச் சோலைகள் கொண்ட மங்கலம் நிறைந்த தென் கயிலையின் இடப்பக்கலில் நிருதிக்குரிய தென்மேல் திசையில் சுயம்பு நிலிங்கமாக வைத்தனன்.

---

பா.வே. 119 அன்னாள் 120 தொலைந்தான் 121 என்றனர் நாட்டினென்றான்.

159, வைத்த நீர்க்குமிழிமாய்ந்தால்நீரதாமண்ணோடேமண் (கருகூ)
ணொத்திடு முடலுக்கென்கொலிரங்குவையோர்பால்வாடை
மெய்த்தளிர்ச்சருகுகூட்டவதனைவெஞ்சூறையோர்பாற்
றத்துறப்பிரிக்குமாவிசரிப்புமன்னதுவேயன்றோ

வைத்தநீர்க் குமிழி மாய்ந்தால்
நீரதாம், மண்ணோடே மண்
ஒத்திடும் உடலுக்கு என்கொல்
இரங்குவை, ஓர்பால் வாடை
மெய்த்தளிர்ச் சருகு கூட்ட,
அதனை வெஞ்சூறை ஓர்பால்
அத்துறப் பிரிக்கும் ஆவி.
சரிப்பும் அன்னதுதே அன்றோ,

பொருள்: நீரில் தோன்றும் குமிழி அழிந்தால் அது நீரோடு நீராகும், அதுபோல் உடலும் மண்ணுடன்சேர்ந்து மண்ணாகி விடும். அத்தகைய உடலுக்காக வருந்துவதேன். சருகுகளைக்கூட்ட, அதனைச் சூறைக்காற்றானது ஒரு பக்கமாகத் தள்ளித் தொடர்பின்றிப் பிரிக்கும், உயிரின் பிரிவும் அஃதே போன்றதே அதனை அறியாயோ.

160. ஓவெனவரற்றின்மாண்டார்க்குறுவதோருறுதியாமோ (கசா0)
தாவறுமுதகப்பேறுந்தானமுங்கடனும்யாவுந்
தேவர்தந்தேவன்கோணைத்திருமலைய்தனிற்செய்தான்[123]
மேவுமுன்னன்னையந்தவும்பர்தம்வீட்டினும்பர்.

ஓ என அரற்றின் மாண்டார்க்கு
உறுவதோர் உறுதியாமோ,
தாவறும் உதகப்பேறும் தானமும்
கடனும் யாவும்
தேவர்தம் தேவன் கோணைத்
திருமலை அதனிற் செய்தான்
மேவும் உன் அன்னை அந்த
உம்பர்தம் வீட்டின் உம்பர்

பொருள்: ஓ என்று அழுதுபுலம்புவதால் இறந்தவர்க்குக் கிடைக்கும் பேறுதான் என்னே! குற்றமற்ற நீர்க்கடனும் தானமும்- நற்செயலும் உன் அன்னையின் பேரால் செய்தால் விண்ணவர் உலகில் தலைமையிடத்தினைப் பெறுவாள் என மாயவேதியன் திருமால்கூற, அதனைக்கேட்ட இராவணன் அவ்வண்ணமே சிவன் எழுந்தருளியிருந்த புனிதத் திருமலையில் செய்தனன்.

161. உம்பரிக்கயிலைதன்னிலொருபொழுதுமையாளீசன் (கசாக)
வம்பவிழ்சடையைக்கையால்வகிர்தலுங்கங்கையஞ்சிக்
கம்பிதங்கொளலுநம்பன்கண்டுகை நகத்தால்வாங்கிச்
சம்புவின்றீவின் தென்பாற்சாகரத் தெற்றிவைத்தான்

பா.வே. 122 ஏற்று, பா.வே. 123 இதனில்

உம்பர் இக்கயிலைதன்னில் ஒருபொழுது
உமையாள் ஈசன்
வம்பவிழ் சடையைக் கையால்
வகிர்தலுங் கங்கை அஞ்சிக்
⁰கம்பிதங் கொள்ளும் நம்பன் கண்டு
கைநகத்தால் வாங்கிச்
சம்புவின் தீவின் தென்பால்
சாகரத்து எற்றிவைத்தான்

பொருள்: மேலாம் தன்மை மிக்க தென்கயிலையில் ஒருநாள், உமையவள்; இறைவனது தேன் சொரியும் புதுமலர்சூடிய திருச்சடையினைத் தன்கையால் நீவி ஒழுங்கு செய்தலும் அதனைக்கண்டு திருச்சடையில் உள்ள கங்கை கண்டு அஞ்சி நடுங்கினள். அதனைக்கண்டு இறைவன், தன்கை நகத்தினால் கங்கையைத் தாங்கி சம்புத்தீவின் தென் பக்கத்தே எற்றி இட்டு வைத்தனன்.

0 கம்பிதம் = நடுக்கம்

162. எற்றியபோதுகங்கையிலங்கையுத்தரபால்வேலை (கசாஉ)
சுற்றியதிரைகள் போர்ப்பத்துலங்கலு மதற்குமேலாய்
முற்றிரிகூடநாட்டி முழையத[123]னாப்பட்செய்து
நற்றிய பெருமான்நீர்த்தநடுவுறமுளைத்துகின்றான்.

எற்றியபோது கங்கை, இலங்கை
உத்தரபால் வேலை
சுற்றிய திரைகள் போர்பத்
துலங்கலும், அதற்குமேலாய்
முற்றிரி கூடம் நாட்டி
முளையதன் நாப்பட் செய்து,
நற்றிய பெருமான் தீர்த்த,
நடுவுற முளைத்து நின்றான்.

பொருள்: இறைவனால் எற்றியிடப்பட்டகங்கை இலங்கையின் வடதிசையில் கடல்லைகள் சுற்றிப்போர்க்க- மிக்க மேன்மையுடன் விளங்கினள். அவ்வண்ணம் விளஙகிய கங்கையின்மேல் முக்கோணமுடைய திரிகூடம் என்ற திருமலையினைநாட்டி அவ்விடத்தில் வித்தாக அமைவுகொண்ட நலம் வாய்ந்த சிவன் புனித நீர்ப்பரப்பின் நடுவில் தோன்றினான்.

163. நின்றவக்கடவுட்குன்றைநினைந்தொருவலஞ்செய்வார்பொற் (கசாங)
குன்றினுஞ்சென்றுநூறு கொடுமுடிசூழ்வதொக்கும்
பொன்றலில்வடிவுகாணப்புறத்திடு மச்ச மென்ன
வன்றரன்கயிலைக்கொப்பவமைத்ததிக்கயிலைகண்டாய்

நின்ற அக்கடவுள் குன்றைநினைந்து
ஒரு வலம் செய்வார், பொற்
குன்றினும் சென்று நூறுகொடுமுடி
சூழ்வது ஒக்கும்
பொன்றலில் வடிவுகாணப்
புறத்திடும் மச்சம் என்ன,
அன்று அரன் கயிலைக்கு ஒப்ப
அமைத்தது இக்கயிலை கண்டாய்

---

பா.வே. 123 இதனில் 124 நாபன் செய்து

பொருள்: இவ்வண்ணம் தோன்றிநிற்கும் அந்தத்திருமலையை ஒருதரம் நினைத்து வலஞ் செய்துவருவோர்; மேருமலை சென்று அதன் உயர்ந்த நூறுமுடிகளைச் சுற்றிவருவதனால் வரும் பேற்றினுக்கொப்பான பேற்றினைப் பெறுவர். தாழ்வுற்று அழிவுபடாத இதன்வடிவினைப் புறத்தில் காண்பதற்காக அமைந்த, மச்சயேந்திரம் என அன்று கூறினன் இறைவன். இது கயிலைக்கு ஒப்பாக அமைந்ததே. அத்தகைய பெருமை கொண்டது இத் தென் கயிலை. இதனை உணர்வாயாக.

164. ஆய்ந்தசீரிடையாலோடியலங்குகாவிரியினீரும் (கசாச[1])
பாய்ந்தபிங்கலையாலோடிப்பரந்தமாவிலியினீருந்
தோய்ந்தபேராழியின் கட்சுழிமுனைவடிவாய்நேர்புக்
கோய்ந்தவான் கங்கைதன்னோடிசைந்ததிக்கயிலைகண்டாய்

ஆய்ந்த சீர்இடையால் ஓடி
அலங்கு காவிரியின் நீரும்,
பாய்ந்த பிங்கலையால் ஓடிப்
பரந்த மாவிலி நீரும்
தோய்ந்த பேர் ஆழியின்கண்
சுழிமுனை வடிவாய் நேர்புக்கு,
ஏய்ந்த வான் கங்கைதன்னோடு
இசைந்தது இக்கயிலை கண்டாய்

பொருள்: இத்தென்கயிலையின் இடப்புயத்தே காவிரி இடைகலைநாடியாகவும் வலப்புறத்தேயமைந்த மாவலிபிங்கலை நாடியாகவும் அமைந்து, இறைவனால் எற்றியிடப்பட்ட கங்கை சுழுமுனை நாடியாகவும் அமைந்து இவ்வுலகினை இயக்குகுன்றது. அதனால் இத்தென்கயிலை மண்ணகத்தில் மிகப் பெருமைக்குரிய தென்பதனை உணர்வாயாக.

165 கண்டவிக்கயிலைச்சாரற் கலந்தநாற்றிசை நாற்காத (கசாரு)
மண்டனிற் சனித்தபேதமருவு பல்லுயிர்களெல்லாம்
விண்டனிக் கடவுளாமிவ்வெற்பினிற்கங்கை நீர் தோய்ந்
துண்டவர் சாருபத்தினுதிப்பது திண்ணம் திண்ணம்

கண்ட இக்கயிலைச் சாரல் கலந்த
நால்திசை நால்காதம்
மண்தனில் சனத்தபேதம் மருவு
பல்லுயிர்கள் எல்லாம்,
விண்தனில் கடவுளாம், இவ்வெற்பினில்
கங்கை நீர் தோய்ந்து
உண்டவர், சாருபத்தின் உதிப்பது
திண்ணம் - திண்ணம்.

பொருள்: இங்கு காணப்படும் தென்கயிலைச்சாரல் இணைத்த, நான்கு திசைகளிலும் நான்கு காததூரம் பரந்த மண்ணில் பிறக்கின்ற பல்வேறுபட்ட அனைத்து உயிர்களும் விண்ணுலகக் கடவுளாராவர் . இத்திருமலையில் ஊற்றெடுத்துப் பாயும் கங்கையின் புனித நீரில் நீராடி உண்பவர்கள் உள்பொருள் தெளிந்த யோகியராய்ப் பிறப்பது உறுதி யானது - உறுதியானது. இதற்கு அட்டி யொன்றும் இல்லை.

166 திண்ணலந் தொலை யாதின்னுஞ் செப்பு வநிருத கேண்மோ (கசாசா)
வுண்ணலங்கூரப்பூசை [125]யுமா பதிபக்கீவ ரேனுந்
தண்ணலங்கலுழுந் தெண்ணீர் தருகுவ ரேனுமன்னா
ரண்ணலம் பெருமான் மெய்யோடடைவதற் கையமில்லை

திண்ணலம் தொலையாது, இன்னும்
செப்புவ நிருத கோண்மோ
உள்நலம் கூரப்பூசை, உமாபதி
பக்கு ஈவரேனும்,
தண்ணலம் கலுழும் தெண்ணீர்
தருகுவரெனும், அன்னார்
அண்ணலரும் பெருமான் மெய்யோடு
அடைவதற்கு ஐயமில்லை.

[0] பக்கு = பக்குவம் - பக்தி முறைமை

பொருள் : உறுதிநிலை நீங்காது வாழும் நிலைபற்றி இன்னுஞ் சில கூறுவேன் - இராவணா ! கேட்பாயாக, உள்ளம்செம்மையுற, உமையைப் பாகமாகக் கொண்ட இறைவன் அருளை விரும்பி, அவன் விரும்பும் படி பூசனை செய்பவரும், இனிமைமிக்க நீரினை, வேட்கையுற்றுத் துன்புறுவோர்க்குக் கொடுப்பவரும், தலைவனாகிய சிவனுடன் கலந்து பேரின்பம் அடைவர். இதற்கு எவ்விதமான ஐயப்பாடுமில்லை.

167. இல்லையென்றில்லந்தோறுமிரந்திடுபொருள்களேனு (கசாஎ)
நல்லவைமுக்கூறாக்கிநாதனுக்கொருகூறீவார்
தொல்லையில்வினையுந்தீர்ந்துசோதிபேருலகிற்சேர்வ;
ரல்லது முத்தியென்னுமரிய வீடடையமாட்டார்.

இல்லையென்று இல்லந் தோறும்,
இரந்திடு பொருள்களேனும்,
நல்லவை முக்கூறாக்கி நாதனுக்கு
ஒரு கூறீவார்,
தொல்லையில் வினையுந் தீர்ந்து
சோதி பேர் உலகில் சேர்வர்,
அல்லது முத்தியென்னும் அரிய
வீடு அடைய மாட்டார்.

பொருள் : இல்லையே என்று எண்ணி இல்லந்தோறுஞ் சென்று பிச்சைகேட்டு வாங்கி வாழ்பவராகவிருந்தாலும், நல்லோர் தாம்பெற்ற அப்பொருளை நலம் பெருகும் வண்ணம் பயன்கொள்வர். அவர் பிச்சையாக வந்த பொருளை, மூன்று பங்காகக் கூறிட்டு அதில் ஒரு கூறினை இறைவனுக்குப் படைத்தல் செய்வர். அதனால், பழைய வினைகள் நீங்கப் பெற்று ஒளிமயமான இன்ப உலகினைச் சென்றடைவர். இன்றேல் வீட்டின்பம் எனப் பகரப்படும் வீடு பேற்றினை அடைய மாட்டார்.

168 மாட்சியங்கயிலையா மிம்மலைக்கு நாற்றிசை நாற்காத (கசாஅ)
மாட்சியினின் பீநன்காயருங் கனிகந் தமாதி
காட்சியினான் கினொன்றிக் கடவுளுக்களித்து ணாதார்
சேட்செறி கடற்கணாமையாயவர் செனித்து வீழ்வார்

பா.வே. 125 உமாதிக்கீவரேனும்.

மாட்சி அம்கயிலை யாம் இம்மலைக்கு
நாற்றிசை நாற்காதம்
மாட்சியின் இலை பூ நன்காய்
அருங்கனி கந்தம் ஆதி
காட்சியின் நான்கில் ஒன்று
இக்கடவுளுக்கு அளித்து உண்ணாதார்
சேட் செறி கடற் கண் ஆமையாய்
அவர் செனித்து வீழ்வார்.

பொருள்:பொருமையும் அழகும் கொண்ட இத்தென்கயிலைக்கு நாற்றிசையிலும் நான்கு காததூரம் பரந்துள்ள இடத்தில் ; சிறப்பு மிக்க பசுந்தளை பூ நல்லகாய் சிறந்த பழம் கிழங்கு ஆகியன வற்றைத் தேடி அதில் நாலில் ஒரு பங்கினை இவ்விறைவனுக்கு அளித்து (படைத்து) உண்ணாதவர்கள், மிக்க தூரம் பரந்துள்ள கடலிடத்து வீழ்ந்திருந்து ஆமையாவர் .

169 வீழ்சடைக்கடவுட் கோணைவெற்றினுச்சிட்டம்வீழ்த்தல் (கசாகூ)
வாழ்தனி மடவாரோடு வசித்தல் கம்பளத்தில் வைகல்
கீழ்விடு மலசலாதிகிரியினில் விடுதல் செய்வார்க்
கேழ்பெருநரகிலப்பாலிருணரகவர் வீடென்றான்.

வீழ்சடைக் கடவுள் கோணை
வெற்பில்,[0] உச்சிட்டம் வீழ்த்தல்,
வாழ்தனி மடவாரோடு வசித்தல்,
கம்பளத்தில் வைகல்,
கீழ்விடு மலசலாதி கிரியினில்
விடுதல் செய்வார்க்கு,
*ஏழ் பெரு நரகில் அப்பால்
இருந்நரகு அவர்வீடு என்றான்.

பொருள் : பரந்து தொங்கும் செஞ்சடையினையுடைய இறைவன் வாழ் இத் தென்கயிலையிடத்து எச்சிலை உமிழ்ந்து துப்புதலும், தனித்து வாழும் பெண்களுடன் இணைவினைச்சுச் செய்து, கூடி வாழ்வதும், கம்பளத்தின் மேல் இருத்தலும், கழிவுநீர், மலம் என்பவற்றைக் கழித்தலும் செய்தல் கூடாது. அவ்வண்ணம் செய்பவர்கள் பெருநகரம் ஏழுக்குமப்பால் துன்பஞ் செய்யும் பெருநரகு சென்றடைவர். அவர்கள் வாழ்வுக்குரிய இடமாக அதுவே அமையும் என மாய முனிவன் பகன்றான்.

[0] உச்சிட்டம் = உமிழும் எச்சில்
* எழுநரகம் = கூட சாலம், கும்பிபாகம், அள்ளல்.
அதோகதி, ஆர்வம், பூதி, செந்து.

170. ஆனவிக்கயிலைதன்னிலரனபிடேக நேரம் (கஎ0)
போனக மருந்து நேரம் பூசனை முடிந்த நேரந்
தேனவிழ்சடையார் முன்போய்த் தெரிசனையிடமுமாகா
கானகநிலத்திலூன்றிக் கடு நடைவலமுமாகா

*ஆன இக்கயிலை தன்னில்*
*அரன் அபிடேக நேரம்,*
*போனகம் அருந்தும் நேரம்,*
*பூசனை முடிந்த நேரம்,*
*தேனவிழ் சடையார் முன் போய்த்*
*தெரிசனை இடமுமாகா,*
*[0] கானக நிலத்தில் ஊன்றிக்*
*கடுநடை வலமும் ஆகா.*

*பொருள் : பெருமைக்குரிய இத்தென் கயிலையில்; இறைவனுக்குப் புனித நீராட்டுங் காலத்திலும், திருவமுது ஊட்டும் காலத்திலும், வழிபாடு முடிந்த நேரத்திலும், தேன் சொரியும் அன்றலர்ந்த மலர்களைச் சூடிய சிவன் முன் போய் வணங்குமிடத்திலும் - சோலைகள் சூழ்ந்த - நன்நிலத்தில் இடப்பக்கமாகக் காலூன்றி வலப்பக்கமாக மிக விரைந்து நடந்து செல்லுதல் ஆகாது.*

*[0] கானக நிலம் = சோலை சூழ்ந்த நன்நிலம்.*

*171.* *காவனம் பொய்கை பைம்பூங்காவனமரற்குச் செய்வார் (களக)*
*கோவிலுமதிலுஞ்செம் பொற்கோபுரமுதல செய்வார்*
*மேவு மெல்லாடைசந்தம் வெண்மணிப்பூணு மீவார்*
*மூவுலகிறைஞ்சுந் தேவர்முடியின் மேலடியும் வைப்பார்*

*காவணம் பொய்கை பைம்பூம்*
*காவனம் அரற்குச் செய்வார்,*
*கோவிலும் மதிலும் செம்பொன்*
*கோபுரம் முதல செய்வார்,*
*மேவும் மெல்லாடை சந்தம்*
*வெண்மணிப் பூணும் ஈவார்,*
*மூவுலகு இறைஞ்சும் தேவர்*
*முடியின்மேல் அடியும் வைப்பார்.*

*பொருள் : அடியவர்கள் தங்குமிடம் - நீர்த்தடம் - பசிய மலர்ச் சோலை என்பவற்றை இறைவன் எழுந்தருளியிருக்கும் இடங்களில் செய்பவர்களும், கோயிலும் - மதிலும் - செம்மைமிக்க கோபுரங்கள் முதலியவற்றையுஞ் செய்பவர்களும், அணிதற்குரிய மெல்லிய ஆடைகளையும் - மணம்மிக்க சந்தனத்தையும் வெண்மையொளி கொண்ட மணிகளாற் புனையப்பட்ட அணிகளையும் சிவன் பணிக்குக் கொடுப்பவர்களும், மூவுலகத்தினராலும் போற்றி வணங்கப்படுகின்ற தேவர்களிலும் மேலவராக இருப்பார்.*

*172.* *வைக்குமிக்கயிலை தன்னின் மாதவம் புரிந்து நோற்றன் (களஉ)*
*மிக்கமந்திரங்களுன்னல் வீய்ந்தவருயிர்க்கு பேறா*
*யுய்க்குநற்பலியுண்டாக்கலுறுபசிக்குணவு பெய்தல்*
*புக்கொரு தானநல்கலதன்பலன்புகலொணாதால்*

வைக்கும் இக்கயிலை தன்னில்
மாதவம் புரிந்து நோற்றல்,
மிக்க மந்திரங்கள் உன்னல்,
வீய்ந்தவர் உயிர்க்கும் பேறாய்
உய்க்கு நற்பலி உண்டாக்கல்,
உறுபசிக்கு உணவு பெய்தல்,
புக்கொரு தானம் நல்கல்,
அதன் பலன் புகலொணாதால்.

பொருள் : பெருமைதரும் இத் தென்கயிலையில், பொருந்தவஞ் செய்து நோன்பிருத்தல், பெருமை மிகு நன்மொழிகளை நினைத்தல் - இறந்தவருயிர்க்கு வீட்டின்பப் பேற்றினைக் கொடுக்கும்.. சிறந்த வேள்விகளைச் செய்தல், அற்றாற்குக் கொடிய பசிப்பிணிபோக்க உணவுகொடுத்தல், வந்தவரைப் பேணி அறக்கொடைகொடுத்தல் என்பனவற்றால் ஏற்படும் நற்பலன்களை அளவிட்டுச் செல்லுதல் அரிது.

173. ஆதலாலரன்முக் கோணமெளியதன்றரக்கர் கோவே (கஎங)
பூதலந்தன்னிலிந்தத்தானமே போலவுண்டோ
காதலாலின்றுன்னன்னை கதிபெறப்பலிகன்மாதி-
தீதிவாதியற்றிலிங்கோர் தீர்த்தமுண்டாக்குகென்றான்.

ஆதலால் அரன் முக்கோணம்
எளியதன்று அரக்கர் கோவே,
பூதலந் தன்னில் இந்தத்
தானமே போல உண்டோ,
காதலால் இன்று உன் அன்னை
கதிபெறப் பலி கன்மாதி
தீது இலாது இயற்றி, இங்கோர்
தீர்த்தமும் உண்டாக்கு என்றான்.

பொருள் : அரக்கர் தலைவனே இப்பூமியிடத்தில் சிவன் எழுந்தருளியிருக்கும் திருமலையாகிய முக்கோண மலையிடமே மிகச் சிறந்தது. ஆதலால் அறப்பணி புரிவதற்கு இவ்விடமே தக்கது. பேரன்பு மிக்க உன் அன்னை நற்பேறு பெற அவள் பேரில் வேள்வி - இறுதிக்கடன் என்பவற்றை நலஞ் -சிறக்கச் செய்து புனித நீர்த்தடத்தினையும் உண்டாக்குக என்று மாயவனான முனிவன் பகிர்ந்தனன்.

174. என்னலும் வருணதிக்கிலிராவணன்கதை கொண்டெற்றக் (கஎச[1])
கன்னியம் புனிதகங்கையுதித்தது கயிலைச்சார
லன்னது நோக்குமாலாமருமறையவனுமின்றுன்
மன்னியவன்னை செய்த மாதவமீது கண்டாய்

என்னலும் வருணதிக்கில் இராவணன்
கதை கொண்டு எற்றக்,
கன்னியம் புனித கங்கை
உதித்தது கயிலைச் சாரல்,
அன்னது நோக்கும் மாலாம்
அருமறையவனும், இன்று உன்
மன்னிய அன்னை செய்த
மாதவம் ஈது கண்டாய்.

பொருள் : அறச்செயல்கள் பற்றிக் கூறக்கேட்ட இராவணன் வருணனுக்குரிய மேற்குத் திக்கில் போர்க்கருவியில் ஒன்றான தன் கதையினால் எறிந்து தாக்கினன். கன்னியாகப் போற்றப்படும் புனித கங்கை தென்கயிலைச் சாரலில், நிலத்தில் இருந்து தோன்றினாள். இதனைக் கண்ட வேதம் உணர்ந்த திருமாலாகிய அந்தணன், இராவணனை நோக்கி உடல் நீத்த உன் அன்னை செய்த மாதவம் என்றனன்.

175. ஆயிரம்வருடங்காசியரும்பெருங்கங்கைதோயுஞ் (கஎரு)
சேயிருபலனுமிந்தத் தென்கயிலாயச்சாரன்
மேயவிண்ணிலவிவெள்ளம்விரிந்ததெனவிரிந்த கங்கை
நேயமோடினிது தோயும் பலனுமோர் நிறைகண்டாயே.

ஆயிரம் வருடம், காசி
அரும்பெரும் கங்கை தோயும்,
சேயிரு பலனும், இந்தத்
தென்கயிலாயச் சாரல்
மேய விண் நிலவி வெள்ளம்
விரிந்தென விரிந்த கங்கை
நேயமோடு இனிது தோயும்
பலனும் ஓர்நிறை கண்டாயே.

பொருள் : -வானளாவி நிற்கும் இத்திருமலையிடத்தில் பெரு நீர்ப்பரப்பு விரிந்து அமைந்தது போன்று அமைந்த கங்கைப் புனித நீரில் இனிது நீராடின், ஆயிரம் ஆண்டுகள் கங்கையில் நீராடிக் காசியில் வழிபாடியற்றிய இரு பலனும் ஒன்று சேரக் கிடைக்கும். அத்தகைய பெருமை வாய்ந்தது இத் தென்கயிலை.

வேறு

176. கண்டநின்கதையினாலுதித்தகங்கையைத் (கஎசா)
தண்டலிலாத பாதாளகங்கையென்
றண்டரும் புகழுகவகிலம் வாழ்த்துக
மண்டுமிப்பொருட்டிலுன்னன்னை வாழ்கவே.

கண்ட நின் கதையினால்
உதித்த கங்கையைத்,
தண்டல் இலாத பாதாள
கங்கை என்று,
அண்டரும் புகழுக,
அகிலம் வாழ்த்துக,
மண்டும் இப்பொருட்டில்
உன் அன்னை வாழ்கவே.

பொருள் : உன்கதை கொண்டு அகழ்ந்த இப்புனித நீர்க்கங்கையை தாழ்வற்ற உயர்நலம் வாய்ந்த பாதாள கங்கை யென்று தேவர்களும் புகழுக. உலகனைத்தும் அதனை வாழ்த்துக. அனைத்து நலனும் பெற்று உன் அன்னை வாழ்வாளாக.

177. வேரியகங்கையின்கரையின் மீது நீ (களஎ)
பரரியபலிகன்மமாதிபண்ணெனக்
கூரியகுசையவன்கைக் கொடுத்துமீண்
டாரியன் வாங்கிநின்றமைப்பதாயினான்.

வேரிய கங்கையின்
கரையின் மீது நீ,
பரர் இய பலி கன்மம்
ஆதி பண்ணெனக்,
கூரிய [0]குசை அவன்
கைக்கொடுத்து மீண்டு
ஆரியன் வாங்கி நின்று
அமைப்பது ஆயினான்.

பொருள் : தோன்றிய இக்கங்கையின் கரைமீதில், பெரியவேள்வியினையும் பிறவியால் வந்த கன்மக்கடனினையும், ஆகமங்கள் கூறி நிற்கும் மற்றைய நற்செயல்களையுஞ் நீ செய்வாயாக என திருமாலாகிய அந்தணன்; இராவணனை நோக்கிக் கூறினன். பின் கூர்மை கொண்ட தற்பைப் புல்லினை இராவணன் கையில் கொடுத்து அதனை மீண்டும் வாங்கிச் சடங்கிற்குரிய கடமைகளைச் செய்வதானான்.

[0]குசை = தெற்பைப்புல்

178. ஆயிடைப் பிண்டமொன்றாக்கி வெந்துயர் (களஅ)
தீயிடையிராவணன்செங்கையீந்து நின்
றாயடையக்கதிசானுவூன்றியுன்
வாயிடைத்துதித்திவண்வைத்தியா லென்றான்

ஆயிடைப் பிண்டம்
ஒன்று ஆக்கி, வெந்துயர்த்-
தீயிடை இராவணன்
செங்கை ஈந்து நின்று,
ஆயிடை அக்கதி
சானு ஊன்றி உன்
வாயிடைத் துதித்து
இவண் வைத்தியால் என்றான்.

பொருள் : பிண்டம் ஒன்றினைச் செய்து அவ் வேள்வித்தீயின் முன் ஒரு சாண் தூரத்தில் நின்று உன்உடம்பினை வளைத்து வலக்காலினை மடித்து இடக்காலினையும் இடக்கையினையும் ஊன்றிக்கொண்டு குறித்த கடனுக்குரிய பிண்டம் ஒன்றினை மறை ஓதித் துதித்துக் கொண்டே வேள்வித்தீயில் இடுவாயாக என மாயாவனான அந்தணன் கூற - அதனைக் கேட்ட இராவணன்; தாங்கரிய கொடிய துன்பத்துடன் பிண்டத்தினை வேள்வித் தீயில் இட்டனன்.

179. ஆலமர் கடவுளைத்துதித்தரக்கன்மண் (களகூ)
மேலமர்பட முழந்தாள் விளங்கவைத்
தேலமாகதிபுக வெனதுதாயெனப்
பால மர்பிண்டமும்பரிந்து நாட்டினான்.

ஆலமர் கடவுளைத் துதித்து,
அரக்கன் மண்
மேலமர்பட முழந்தாள்
விளங்க வைத்து,
ஏலமா கதிபுக எனது,
தாய் எனப்
பாலமர் பிண்டமும்
பரிந்து நாட்டினான்.

பொருள் : கல்லாலின் கீழிருந்து சனகர் - சனந்தனர் - சானதனர் - சனக்குமாரர் ஆகிய நால்வர்க்கும் அறம் உரைத்த சிவனைத் துதித்து, மண்மேல் அமர்ந்து முழந்தாளினை ஊன்றிவைத்துக் கொண்டு, தன் அன்னை வீடுபேறு அடைதற்குரிய பிண்டத்தினை உள்ளம் நைந்து பாலில் இட்டனன்.

180. நாட்டிய பிண்டத்தை நாரணன்கர (கஅ0)
நீட்டிய குசையினானெகிழ்த்திரண்டுசெய்
தீட்டியவலதுபங்கிட துபங்குறக்
கூட்டினன் சிவத்துதிக் கொள்கை கொண்டரோ.

நாட்டிய பிண்டத்தை
நாரணன் கரம்-
நீட்டிய குசையினால்
நெகிழ்த்தி இரண்டுசெய்து,
ஈட்டிய வலதுபாங்கு
இடது பங்கு உறக்
கூட்டினன் சிவத்துதிக்
கொள்கை கொண்டரோ.

பொருள் : இராவணனால் வைக்கப்பட்ட பிண்டத்தினை நாரணன் தன்கையில் உள்ள தற்பைப்புல்லினைக் கொண்டு இரு கூறாக்கினன் இருகூறாகப் பகுக்கப்பட்ட வலத்தமைந்த பங்கினையும் இடத்தமைந்த பங்கினையும் கொண்டு சிவனைத் துதிக்கும் கொள்கையினை மேற் கொண்டனன்.

அரோ = ஈற்றசை

181. கொண்டது பிதிர்ப்பலியினி முக்கோணமீ (கஅக)
தண்டர்நாயகற் பணிந்தாகச் சேவடி
முண்டகந் தொழுதுநின்னன்னைமுத்தியே
[126] கண்டிட வேண்டுநீக[127]டிது வாவென்றான்.

---

126 கண்டிட வேண்டுவான் கடிது 127 அரக்க

கொண்டது பிதிர்ப்பலி,
இனிமுக்கோணம் மீது
அண்டர் நாயகற்
பணிந்து, ஆகச் சேவடி
முண்டகம் தொழுது,
நின் அன்னை முத்தியே
கண்டிட வேண்டும், நீ
கடிது வா என்றான்.

பொருள் : இராவணா! பிதிர்க்கடன் அனைத்துஞ் செய்தாயிற்று. இனித் திருமலையில் எழுந்தருளியிருக்கும் தேவதேவனான அண்டர் நாயகனைத் தொழுதல் வேண்டும். அவனது ஆக்கம் தரும் திருவடித்தாமரையைத் தொழுது. உன் அன்னை வீட்டின்பத்தினைப் பெறுதல் வேண்டுமென நீ வேண்டுதல் செய்வதற்காக விரைந்து வருகஎன, அம்மாயோன் பகர்ந்தனன்.

182. வாவெனநிருதனுமெழுந்து மாலுடன் (கஅஉ)
சேவினன் கயிலையிற் சென்று முன்பணிந்
தோவியநிகருமை பங்கவுன்பத
மேவவென்னன்னைக்கு வேண்டினேனென்றான்.

வாவென நிருதனும்
எழுந்து மாலுடன்
[0] சேவினன் கயிலையிற்
சென்று முன் பணிந்து,
ஓவிய நிகர் உமை
பங்க, உன்பதம்
மேவ என் அன்னைக்கு
வேண்டினேன் என்றான்.

[0] சேவினன் = சிவன்

பொருள் : மாலோன் வாவென்று அழைத்தலும், இராவணன் எழுந்து அவருடன் சென்று தென்கயிலையினை அடைந்தான். சிவபெருமான் முன் சென்று பணிந்து ஓவியம் போன்ற உமையம்மையைப் பாகமாகக் கொண்டவனே ! என் அன்னைக்கு, உன் திருவடிகளின் அருளினை வேண்டி நிற்கின்றேன். அருள்க என்றனன்.

183. என்றலுஞ்சிவபதமின்றுன்னன்னைக்கு (கஅங)
நின்றிடக்கொடுத்தனநிருதசெல்கெனக்
குன்றவில்லுடையவன்[128] கூறப் போற்றிமுன்
சென்ற மாலுடனவன் சிகரிக்கீழ் வந்தான்.

---

பா.வே 128 கூறவாங்கி முன்

என்றலும், சிவபதம் இன்று
உன் அன்னைக்கு
நின்றிடக் கொடுத்தனன்,
நிருத செல்கெனக்,
குன்றவில் உடையவன்
கூறப் போற்றி முன்
சென்ற மாலுடன் அவன்,
சிகரிக் கீழ் வந்தான்.

பொருள் : இராவணன் வேண்டுதலைக் கேட்டு, உன் அன்னைக்குச் சிவபதம் நின்றிடக் கொடுத்தனன். நிருதனே நீ செல்கென மேருவை வில்லாகக் கொண்ட சிவன் கூறினன். அதனைக் கேட்ட இராவணன் இறைவனைப் போற்றி வணங்கித் தன் முன்னே சென்ற திருமாலுடன் திருமலையின் அடிவாரத்திற்கு வந்தான்.

184. வந்தனை மறைஞனுக்கியற்றி மற்றினிச் (கஅச)
சிந்தனையென் னெனத்தானஞ் செய்கெனச்
சுந்தரப் பொன்முகில் சொரிவபோல் வரு
மந்தணரியாவர்க்கு மளிக்கின்றானரோ

வந்தனை மறைஞனுக்கு
இயற்றி, மற்றினிச்
சிந்தனை என் எனத்
தானம் செய்கெனச்,
சுந்தரப் பொன்முகில்
சொரிவ போல், வரும்
அந்தணர் யாவர்க்கும்
அளிக்கின்றானரோ.

பொருள் : இராவணன் மறையோனான திருமாலுக்கு வணக்கம் கூறி இனியுன் எண்ணம் யாதென வினவினன். அதற்கு மறையோனான திருமால்; இராவணனை நோக்கி நற்கொடை செய்வாயாக என்றனன். அவ்வண்ணமே அழகிய முகில் மழை சொரிவது போன்று திருமறை புகன்றதானம் செய்தனன்.

185. ஆனவக்[129]கயிலையிலரனும் வேதனுஞ் (கஅரு)
சேனையோடையிருகோடி தேவரு
ஞானமாமறையவராகி நண்ணினார்
தானமீந்திராவணன் றாழ்ந்து போற்றினான்.

---

பா.வே 128 கூறவாங்கி முன்

ஆன அக்காலையில்
அரனும் வேதனும்,
சேனையோடை இரு
கோடி தேவரும்,
ஞான மா மறையவர்
ஆகி நண்ணினார்,
தானம் ஈந்து இராவணன்
தாழ்ந்து போற்றினான்.

பொருள் : இராவணன் கொடைமடஞ் செய்த வேளையில், சிவனும் பிரமனும் தம் பரிவாரங்கள் சூழ இரு கோடி தேவர்களுடன், மறையோதும் பெருந்தவத்தினரான அந்தணர் வடிவு கொண்டு, நற்கொடையினைப் பெற வந்தனர். இராவணன் அவர்கள் அனைவர்க்கும் கொடை மடஞ் செய்து பணிந்து போற்றினான்.

186. போற்றரன் பினாகியாம் பொற்பிலிங்கமொன் (கஅசா)
றேற்ற நால் வேதன்பூ தேசவிலிங்க மொன்
றூற்றமாங் கேசவனுருத்தி ரேசமாய்ச்
சாற்று பேரிலிங்க மொன்றவன் கைதந்தனன்.

போற்று அரன் -பினாகியாம்,
பொற்பில் லிங்கம் ஒன்று,
ஏற்ற நால் வேதன் பூதேச
லிங்கம் ஒன்று,
ஊற்றமாம் கேசவன்
உருத்தி ரேசமாய்ச்
சாற்று பேர் இலிங்கம் ஒன்று,
அவன் கைத் தந்தனன்.

பொருள் : அனைவராலும் போற்றப்படுஞ் சிவன்; பொன்னொளி வீசும் இலிங்கமொன்றையும், பிரமன்; பெருமை மிகுநால் வேதங்களின் முடிந்த முடிபாக விளங்கும் சிவனின் சின்னமான பிருதிவிலிங்கமொன்றையும், பெருமைமிகு திருமால் உருத்திர லிங்கம் ஒன்றையும் இராவணன் கையில் கொடுத்தனர்.

187. தந்தமூன்றிலிங்கமுந்[130] தருமுக்கோணமீ (கஅஎ)
தந்த மோடணைக்கிலுன்னன்னை முத்தியா
மந்தரப்புயவென மறைந்து போயினா
னெந்தமாயங் கொலென்றிறைஞ்சி யேத்தினான்.

---
பா.வே 128 கூறவாங்கி முன், பா.வே 129 கயிலையில்

தந்த மூன்று இலிங்கமும்,
தரும் முக்கோண மீது,
அந்தமோடு அணைக்கில்,
உன் அன்னை முத்தியாம்,
மந்தரப் புய என
மறைந்து போயினான்,
எந்த மாயங் கொல் என்று
இறைஞ்சி ஏத்தினான்.

பொருள்:[0] அழகுமிகு புயங்களையுடையவனே ! உன்னிடந்தந்த மூன்று லிங்கத்தினையும் திருமலையில், அதன் அந்தமாக அமைந்த முடியிடத்தில் அமைவுறச் செய்து வழிபாட்டினைச் செய்வாயாயின் உன் அன்னை முத்தியாகிய பெறற்கரும் பேற்றினைப் பெறுவாள் எனக் கூறி மறைந்து போயினான். இந்நிகழ்வினால் இராவணன் இது எத்தகைய மாயமோ என வாழ்த்தி வணங்கினான்.

188. ஏத்தியுந்திருமறை தேடற் கெய்திடாப் (கஅஅ)
பூத்திகழ் திருவடிப் புலைய னென்னையும்
காத்திடநடந்ததோகடவுளே யென
வாய்த்திடு பத்துவாய் தோறும் வாழ்த்தினான்.

ஏத்தியும் திருமறை
தேடற்கு எய்திடாய்,
பூத்திகழ் திருவடிப்,
புலையன் என்னையும்,
காத்திட நடந்ததோ,
கடவுளே என,
வாய்த்திடு, பத்து வாய்
தோறும், வாழ்த்தினான்.

பொருள்: புகழ்ந்துபோற்றும் திருமறைகளாலும் தேடற்கரியவனே ! இழிந்தவனாகிய என்னையுங் காத்திட உனது திருவடி மலர்கள் நிலந் தோய நடந்தனையோ ! என் தலைவா எனத் தனக்கு வாய்க்கப் பெற்ற பத்து வாய்களாலும் வாழ்த்தி வணங்கினன் இராவணன்.

189. வாழ்தருமக்கினிவாயுவிந்திரன் (கஅகூ)
சூழ்தருதிசை தொறுங்கயிலைச்சுற்றினுஞ்
தாழ்சடைப்பினாகி பூ தேசன் றாரணி
யேழ் புகழுருத்திரவிலிங்கந்தாபித்தான்.

---

பா.வே.130 தகும் 131 அமைக்கில்

வாழ்தரும் அக்கினி,
வாயு,இந்திரன்,
சூழ்தரு திசை தோறும்
கயிலைச் சுற்றினும்,
தாழ்சடைப் பினாகி
பூதேசன் தாரணி
ஏழ்புகழ் உருத்திர
இலிங்கம், தாபித்தான்.

பொருள்: நல்வாழ்வினைத்தரும் அக்கினி - வாயு- இந்திரன் ஆகிய தேவர்கள் வாழ் திசைகளான தென்கிழக்கு, வடமேற்கு கிழக்கு ஆகிய திக்குகளிலும் கயிலையைச் சுற்றியும், தாழ்ந்தாடுஞ் சடையினையுடையவனும் அன்றலர்ந்த தேன்சொரியும் மாலையினை அணிந்தவனுமாகிய சிவனின் உருத்திரலிங்கத்தினை நிலை கொள்ள வைத்தனன் இராவணன்.

வேறு

190. தானிறைஞ்சிய தன்மையான் (கசகூ0)
ஞானநம்பனை நண்ணினான்
கானயா ழொடுகல்வியா
லூனமில்லிசையோதினான்.

தான் இறைஞ்சிய தன்மையான்,
ஞான நம்பனை நண்ணினான்,
கான யாழொடு கல்வியால்,
ஊனம் இல் இசை ஓதினான்.

பொருள் : இராவணன்; சிவபெருமானை தாழ்ந்து வணங்கினான். பேரறிவுவடிவினனான அவன் திருவடிகளை நண்ணினான். இசை மீட்கும் யாழுடன் தான் பெற்ற திருமறைக்கல்வியால் இசையமைதி கொண்ட சாம வேதத்தினை ஓதினான்.

191. ஓதியோதியுணர்ந்துணர்ந் (கசகூக)
தாதிசோதியநாதியின்
றேதிலாவிடையெற்கெனா
வேதராவணன் மீண்டனன்

ஓதி ஓதி உணர்ந்து உணர்ந்து
ஆதி சோதி அநாதியின்
ஏதிலா விடை எற்கு எனா,
வேத ராவணன் மீண்டனன்.

பொருள் : ஓதி ஓதி ஆராய்ந்து; தோற்றமும் தோற்றம் அற்றதாயும் நிற்கும். ஒளி வடிவானவனின் மறுப்பற்ற அருளினைப் பெற்று விடை கொண்ட வேதமுணர்ந்த இராவணன்; தன் வாழ்விடம் மீண்டனன்.

---

பா.வே.132 யாழ்கொடு

192. மீண்டராக்கதர் வேந்தன்மாப் (கசகூஉ)
பூண்டதேர் மிசைப்புக்கு நீள்
காண்ட ருங்கடமுங்கடந்
தீண்டிலங்கையுளெய்தினான்

மீண்ட ராக்கதர் வேந்தன் மாப்
பூண்ட தேர்மிசைப்புக்கு நீள்
காண்டரும் கடமும் கடந்து
ஈண்டு இலங்கையுள் எய்தினான்.

பொருள்: தென்கயிலையிலிருந்து மீண்ட இராவணன் ,குதிரைகள் பூட்டிய தேரில் திருமயினைச் சூழ்ந்திருந்த கடலினைக் கடந்து, தன் நாடான இலங்கை புகுந்தனன்.

193 எய்தரக்கரெதிர்புகுந் (கசகூங)
தையனுற்றனனா மெனக்
கைகுவித்திருகா றொழா
மெய்யுவப்பொடு மேவினான்.

எய்து அரக்கர் எதிர்புகுந்து,
ஐயன் உற்றன நாம் எனாக்,
கை குவித்து இரு கால் தொழா,
மெய் உவப்பொடு மேவினான்,

பொருள்: இராவணனைக் கண்ட அரக்கர்; அவனை எதிர்கொண்டு வணங்கினர். அவனை நோக்கி, எம் தலைவனே ! நாம் என்றும் உமக்குரியவர்களே. எனக் கைகுவித்து இராவணது இருகால்களையுந் தொழுதனர். அதனால் உள்ளம் மகிழ்ந்து மெய்மை பொருந்திய உவகையுடன் தன் இருப்பிடஞ் சென்றனன்.

194 மேவுமிக்கதை மெய்ந்நல (கசகூச[1])
மாவதொக்க வறைந்தனந்
தேவனுற்ற திருப்பதிப்
பாகவத்தியல் பன்னுவாம்.

மேவும் இக்கதை, மெய் நலம்
ஆவ தொக்க அறைந்தனம்,
தேவன் உற்ற திருப்பதிப்
பாகவத் தியல் பண்ணுவாம்.

பொருள்: கூறிய இக்கதையின் துணி பொருள்; நலம் நிறைவுபடும்படி பகர்ந்தனம். இனி நலம் பொருந்திய வேதத்தின் முடிந்த முடிபாய் அமைந்த இறைவன் எழுந்தருளியிருக்கும், திருப்பதியின் பெருமையினைக் கூறுவாம்.

195 பண்ணு மீசர் பதிக்ககதை (கசுரு)
மன்னு நூல் வழியே மனத்
துன்னு வார் சிவலோகமீ
தன்ன வானவராகுவார்

பண்ணும் ஈசர் பதிக்கதை,
மன்னு நூல் வழியே, மனத்து
உன்னுவார், சிவலோகம் மீது
அன்ன வானவர் ஆகுவார்.

பொருள்: சிவன் எழுந்தருளியிருக்கும் திருமலையின் கதை யினை , நிலை போற்றினைத்தரும் நலஞ்சான்ற இந்த நூல் வழிநின்று கற்பவர்கள் ; சிவ லோகம் வாழ்வானவர் ஆகுவர் .

தருசனா முத்திச் சருக்கம் முற்றிற்று
திருவிருத்தம் 195

**********

ஓம்

# ஏழாவது

# திருநகரச்சருக்கம்

1. வாருலவுமுகிழ் முலையுமுத்திரியபணிப்பட்டு மலர்க்கண் நோக்குங் (க)
காருலவு சுரிகுழலுமொருபாகந் திருமேணி கலந்து தோன்றச்
சீருலவு நதியரவு மதிமுடிமேலொருபாகஞ் சிறக்கத் தோற்று
நீருலவு கயிலைமலைப் பெருமானைமறவா தென்நினைவுநெஞ்சம்

வாருலவும் முகிழ்முலையும் உத்தரிய
மணிப்பட்டும், மலர்க்கண் நோக்கும்,
காருலவு சுரிகுழலும், ஒருபாகம்
திருமேனி கலந்து தோன்றச்,
சீருலவும் நதி அரவும் மதிமுடிமேல்
ஒருபாகம் சிறக்கத் தோற்று,
நீருலவும் கயிலைமலைப் பெருமானை,
மறவாது என் நினைவு நெஞ்சம்

பொருள்: மார்புக் கச்சம் தாங்கும் முகிழ்ந்த தனமும், அதன்மேல் அழகு பொருந்த அமைந்த மணிகளால் புனையப் பட்ட பட்டு உத்தரியமும், அன்றலர்ந்த மலர்க்கண்களின் அன்புமிகு அருள்நோக்கும், கருக்கொண்ட முகில் போல்-கருமை கொண்ட அழகிய சுருண்ட கூந்தலுமுடைய உமையை ஒரு பாகமாக் கொண்ட சிவன், சீர்பெற்ற பெருமை கொண்ட கங்கையும்-பாம்பும் தன் திருவடிவில் இணைந்து மறுபக்கத்தில் சிறப்புறத்-தோன்ற, நீர்வளஞ் சிறந்த கயிலை மலையில் எழுந்தருளியிருக்குங் காட்சியை என் நெஞ்சம் மறவாது.

2. நெஞ்சகத்தில் வஞ்சமிலாத்தசரதன்பாற்றிருமாயநெடுவெண்பவ்வத் (உ)
தஞ்சனக்குன்றெனச்சிறந்து கோசலைதன்வயிற்றுதித்தங்கயோத்திநாட்டிற்
குஞ்சரத்தின் விளையாடிச்சானகியை மணம்புரிந்து கூனி செய்த
வஞ்சகத்திற்கைகேசிமதி முறையால்விதிமுறையே வனத்திலேகி

நெஞ்சகத்தில் வஞ்சமிலாத் தசரதன்பால்,
திருமாயன் நெடுவெண் பவ்வத்து
அஞ்சனக் குன்று எனச் சிறந்து
கோசலைதன் வயிற்றுதித்து அங்கயோத்தி நாட்டில்,
குஞ்சரத்தின் விளையாடிச் சானகியை
மணம்புரிந்து, கூனி செய்த
வஞ்சகத்திற் கைகேசி மதிமுறையால்,
விதிமுறையே வனத்தில் ஏகி.

---

பா. வே. 1 கவின்து தோன்ற

பொருள்: உள்ளத்தில் வஞ்சனையற்ற தசரதனிடத்தில்; பெருமை-மிகுதிருமால்-அகன்று பரந்த பாற்கடலிடத்து, கருக்கொண்ட முகில்படிந்த மலைக்குன்று தோன்றுவதுபோல், கோசலையின் அழகிய வயிற்றில் பிறந்தனன், அவன் அயோத்தி நாட்டில் இளம் யானைக்கன்று போல் விளையாடிச் சீதையைச் திருமணம் புரிந்து மந்தரை செய்த வஞ்சகச் செயலால், கைகேசியின் புத்தியில் விதிவகுத்த செய்முறையால்-அதன்வழி காட்டகஞ் சென்று;

3. கிள்ளையெனு மொழிவனிதைச்சானகியுமிலக்குமனுங்கிளர்பூஞ்செங்காற் (ங)
பிள்ளையெனுமிளங்காளையிராமனுமாய்த்தனிவனத்தேபிறங்குநாளிற்
கள்ளவிழிச்சூர்ப்பனகியிலக்குமனைவலிதுறுமக்காமந்தன்னாற்
றுள்ளிவிழ[2] மூக்கறிந்தகாரணத்தைவேறொன்றாய்ச் சொல்லிகின்றாள்

கிள்ளை என்னும் மொழிவனிதைச் சானகியும்,
இலக்குமனும் கிளர்பூம் செங்கால்
பிள்ளை எனும் இளங்காளை இராமனுமாய்த்,
தனி வனத்தே பிறங்கு நாளில்,
கள்ள விழிச் சூர்பனகி இலக்குமனை
வலிதுறும் அக்காமம் தன்னால்,
துள்ளிவிழ [0] மூக்கறிந்த காரணத்தை,
வேறொன்றாய்ச் சொல்லி நின்றாள்.

0 மூக்கறிதல் = குறிப்பறிதல் - நோக்கமறிதல்.

பொருள் : கிளிபோன்று மொழிபயிலும் அழகிய இளநங்கைசீதையும், இலக்குமணனும், அழகுமிகு பூப் போன்ற சிவந்த கால்களையுடையவனும் - இளம் ஏற்றறைப் போன்ற திண்மையுடடையவனுமான இராமனும் வனத்தில் தனித்திருந்த போது, வஞ்சனைமிக்க நோக்குடைய கண்கள் கொண்ட சூர்ப்பனகி இலக்குமணன் மேல் முறைதவறிய காம வேட்கையினைக் கொண்டாள். குறிப்பறிந்த இலக்குவன் அவள் அவலங் கொண்டு துடித்து விழ, மிக்க சினங் கொண்டு தண்டித்தான். அதனால் வேதனையடைந்து மானபங்கப்பட்ட செய்தியினைத் தன் சகோதரன் இராவணனுக்கு மாறுபடக் கூறினாள்.

**0** தன்னை நாடி ஒருவர் வரும் பொழுது தன்னிடத்தில் நிகழும் பிராணனின் இயக்கத்தினையும் அதனால் நிகழும் நாடி ஓட்டத்தினையும் நன்கு ஆராய்ந்து வருபவரின் உள்ப்பாங்கையறிதல்.-

4. நின்றடமெய்ப்புயத்தழகுக் கிணங்கு மிருதனத் தொருத்திநிமிர்பூங்காவிற் (ச)
குன்றனையாருடன் புகுதுமவளையுனக்கா மென்ற குறிப்பினாலே
கன்றி[3] யெனைச் செய்தகுறையீதெனவே நின்றுரைத்தகடும் பொய்யந்த
வென்றி தருமிராவணனைத்தின்றுமிழவொருகூற்றம் விடுத்துமீண்டாள்.

பா. வே. 2 மூக்கரிந்த. பா. வே. 3 எற்கு

நின்றிட மெய்ப்புயத்து அழகுக்கு இணங்கும்
இருதனத்து ஒருத்தி, நிமிர்பூங் கானில்,
குன்று அனையாருடன் புகுதும், அவளை
உனக்காம் என்ற குறிப்பினாலே,
கன்றி எனைச் செய்தகுறை யீதெனவே
நின்றுரைத்த கடும்பொய், அந்த
வென்றிதரும் இராவணனைத் தின்றுஉமிழ
ஒரு கூற்றம் விடுத்து மீண்டாள்.

பொருள் : இராவணன் முன்னேநின்ற அவன் தங்கை சூர்ப்பனகை, இராவணனை நோக்கி; செழுமைமிகு அழகுகொண்ட தோள்களுக்குப் பொருத்தமுறும் வண்ணம்-இணைந்த இரு முலைகளைக் கொண்ட ஒரு பெண்ணை; மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த-ஓங்கி வளர்ந்த காட்டகத்தில், மலைக்குவடு போன்ற இரு தோள்களையுடைய ஆண்கள் இருவருடன் புகும்போது கண்டேன். அப்பெண்; உனது வலிமை கொண்ட அழகிய புயத்திற்குப் பொருத்தமானவளென்று எண்ணி, உனக்கு அவளைத்தரவிரும்பி யான்முயன்றபோது, அவ்வாடவர்கள் சினந்து எனக்கு இக்கொடுமையினைச் செய்தனரெனக் கூறினாள். இவ்வண்ணம் சூர்ப்பனகை இராவணன் முன்னின்று கடும் பொய் கூறினாள். இப்பொய்; வெற்றித்திருவணைந்த இராவணனைத் தின்று உமிழும் கூற்றாக விளங்கியது. இத்தகைய கூற்றினை ஏவிய சூர்ப்பனகை அவ்விடம் விட்டகன்றனள்.

5. மீளாதவிரகமதிபரவுதலாலிராவணனும்விரைவினேகி (ரு)
மாளாதுபொய்ம்மானாய்வனத்திடையேமாதுலனைவரவிட்டந்த
நாளாதிதனிற்சென்றுசீதைதனைக்கொணர்ந்து சிறைநண்ணிவைத்த
தாளாண்மைதனிலிழந்தானிராகவன்கையம்பொன்றாற்றலைகள்பத்தும்

மீளாத விரகம் அதிபரவுதலால்,
இராவணனும், விரைவில் ஏகி,
மாளாது பொய்ம்மானாய் வனத்திடையே
மாதுலனை வரவிட்டு, அந்த
நாளாதிதனில் சென்று, சீதைதனைக்
கொணர்ந்து சிறை நண்ணி வைத்த,
தாளாண்மைதனில் இழந்தான், இராகவன்
கை அம்பு ஒன்றால் தலைகள் பத்தும்,

பொருள்; சூற்பனகையின் மொழிகேட்ட இராவணன் நீங்குதலில்லாக் காமநோயால் வருந்தினான். அவ்வருத்த மேலீட்டால் தன் மைத்துணன் மாரீசனைப் பொய்மான் வடிவு கொள்ளச் செய்து சீதையிருந்த இடத்துக்குப் போகவிட்டனன். அதன்மூலம் சீதையை ஏமாறச் செய்தனன், இராமர்-

---

பா. வே. 4 மதியழிந்த

இலக்குவன்ஆய இருவரும், சீதையின் ஏமாற்றத்திற்கு துணைபோகவே அன்றே சீதையைத் தூக்கி வந்தனன். அதனால் இராவணன் தன் மேதகு பண்பினை இழந்தான். வீரத்தினையும் அன்பு நெறியினையும் இழந்தான், அத்தோடு நின்றவிடாது இராமனது கையம்பினால் தன்தலை-பத்தினையும் இழந்தான்.

6. பத்தனமுமெத்திசையுமிலங்கைநகராசனமும்பரிதிசூழ்ந்த (சா)
முத்தலமுமரசுருமை விபூஷணற்குமால்கொடுத்தமுறைமையாலிவ்
வித்தகனைமதியழிக்கவிராவணன்றன்பிரமகத்திமேவமாழ்கிச்
சுத்தமணித்தென்கயிலைப்பெருமானையிராமனுடன்தொழுதான்கண்டான்.

[0]பத்தனமும் எத்திசையும் இலங்கைநகர்
ஆசனமும், பரிதி சூழ்ந்த
முத்தலமும், அரசுரிமை விபூஷணற்கு
[x]மால் கொடுத்த முறைமையால், இவ்
வித்தகனை மதியழிக்க, இராவணன்தன்
பிமகத்தி மேவ மாழ்கிச்,
சுத்தமணித் தென்கயிலைப் பெருமானை,
இராமன்; உடன் தொழுதான் கண்டான்.

பொருள் : இராமன்; இராவணனைக் கொன்று சீதையை மீட்டபின் இலங்கை நாட்டிற்குப்பாதுகாப்பு அளித்தனன். அதனை உறுதி செய்து இலங்கை நாட்டினையும் அதன் தலை நகரினையும், ஆட்சி உரிமைக்குரிய சின்னமான அரச பீடத்தினையும் விபீஷணனுக்கு நல்கினான். இதனை, கதிரவன் ஒளிபடரும் அனைத்துத்துலகத்தில் உள்ள பூதலமாந்தரும்-தேவர் உலகினரும்-நாகர் உலகினரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணஞ் செய்தனன். இராவணனைக் கொன்ற கொலைப்பழி தன்னைச் சூழ்ந்ததனை உணர்ந்த இராமன்; அதனால் மனத்துயரடைந்து தடுமாற்றங் கொண்டனன். அதனை நீக்கும் பொருட்டு இராமன், இரவணப் போர் முடிந்தவுடன், தென்கயிலை சென்று வணங்கினன். அவனுடன் விபூஷணனுஞ்சென்று வணங்கினான்.

**0** பந்தனம் = பாதுகாப்பு; **X** மால் = மயக்கம்; மால் = திருமாலின் அவதாரமாகக் கருதப்படும் இராமன்.

"அரசுருமை விபூஷணற்கு மால் கொடுத்த முறைமையால்"
"இராமனுடன் றொழுதான்" எனக் கொண்டு;
மாலாகிய இராமனுடன் சென்று விபூஷணனும் தென்கயிலைப் பெருமானை வணங்கினன் எனவும் பொருள் கொள்ளப்பட்டது.

7. கண்டகைய விராவணனைமுன்விரலாற்பொரு தாளும்கருத்துமற்றப் (எ)
புண்டரிகமலர்த்தாளுமொருபாகமமர்ந்தாளும்புனிதத்தாளும்
துண்டமதிதரித்தாளுங் கோமளமிருதாளுந்துலங்கித்தோன்றக்
கொண்டல்விடு மதிபோலவுளமதியுந்தெளிந்துவிழிகுளிர்ந்து நின்றான்

[0]கண் தகைய இராவணனை முன்விரலால்
பொரு தாளும் கருத்தும், மற்றப்
புண்டரிக மலர்த்தாளும், ஒருபாகம்
அமர்ந்தாளும் புனிதத் தாளும்,
துண்டமதி தரித்தாளும் கோணமாமலை
இருதாளும் துலங்கித் தோன்ற,
கொண்டல்விடு மதிபோல உளமதியும்
தெளிந்து விழி குளிர்ந்து நின்றான்.

பொருள் : இராவணனது கண்கள் பிதுங்க அவனைத் தன் முன் விரலால் எற்றி அருள் செய்து ஆளும் கருத்தும், ஆன்மாக்களின் மலம் நீங்க அருள்புரியும் தாமரை மலர்த்திருவடியும், தன் இடப்பாகமாகக் கொண்ட ஆற்றல் வடிவினளான உமையம்மையின் அருளாச்சி மிக்க புனிதத் திருவடியும், மூன்றாம் பிறைச்சந்திரனை அணிந்த சடைமுடியும், திருக்கோணமலை என்ற திருமலையில் இருந்து அனைத்தையும் ஆள்கின்ற அருட்பொலிவும் விளங்கித் தோன்ற நின்ற-சிவனை; நீர்முகந்த முகில் நடுவே தோன்றும் முழுமதிபோல் உளம் மலர-தண்ணொளி வீச-கண்களிரண்டும் தண்மைமிகு அன்பு சொரியக் கண்டு வணங்கி நின்றனன்.

0 இப்பாடல் முன்வந்த 6ம் பாடலை நோக்க இராமனுக்கும் பின் வரும் 10ம் பாடலை நோக்க விபூஷணனுக்கும் பொருத்தமுற அமைந்துள்ளது. 6ம் பாட்டில் இராமன் உடன் தொழுதான் எனக் கொள்ளுமிடத்து இராமனுக்கும், பின்வந்த பத்தாம் பாட்டில் வரும் "என்றென்று துதித்திறைஞ்சி விபூஷணன்" என்ற தொடரினை நோக்குமிடத்து விபூஷணனுக்கும் பொருத்த நிற்பதனால் 7ம் பாடல்-சிங்க நோக்கில் அமைந்துள்ள தெனலாம்.

8. நின்று கரசரணங்கள்கம்பித்துமயிர்பொடித்துநினைவுண்டாகித் (அ)
துன்றுமதியொளிகண்டகாந்தமெனவிழித்துணைநீர்துளிக்கநோக்கிச்
சென்றபகைநிருதன்பாற்கறுத்தமலர்ச்சீர்பாதஞ்சிறந்து தோன்ற
வின்றடியேன் பெற்றபயனிமையோரும்பெற்றனரோவென்றான்போற்றி

நின்று கரண சரணங்கள் கம்பித்து,
மயிர் பொடித்து நினைவு உண்டாகித்,
துன்றமதி யொளிகண்ட காந்தமென,
விழித்துணை நீர்துளிக்க நோக்கிச்,
சென்றபகை நிருதன்பால் கறுத்தமலர்ச்
சீர்பாதம் சிறந்து தோன்ற,
இன்று அடியேன் பெற்றபயன் இமையோரும்
பெற்றனரோ என்றான் போற்றி.

பொருள் : அவ்வண்ணம் நின்றவன்; புற உறுப்புகளான மெய்-வாய்-கண்-மூக்கு-செவி யென்ற ஐவாய வேட்கை அவிவினை அடக்கி, மனம்-புத்தி-சித்தம் அகங்காரம் என்ற அக உறுப்புகளையும் ஒருநிலைப்படுத்தி இறைவன் அருள் வடிவினை நோக்கினன். அந்நோக்கினால், மயிர்க் கூச்செறிந்து பரவச நிலையடைந்தனன். பின் நினைவு திரும்பப் பெற்று, தெளிந்த ஒளி விளங்கும் நிறை நாண்மதியைக் கண்ட-சந்திர காந்தக்கல்போல் ஈர்க்கப்பட்டு, இரு கண்களிலும் அன்பின் மிருதியால் கண்ணீர் துளிக்க, இராவணனின்

பகையினைப் போக்கிய சினந்த-செம்மை சான்ற மலர்ச்சேவடி சிறந்து தோன்ற அதனைக்கண்டு, இன்று அடியேன் பெற்ற பெரும்பயன் தேவர்களும் பெற்றிலர் என வாழ்த்தி வணங்கினான்.

9. போற்றிதிரிபுரதகனகலாந்தகாமதகனபுனிதா போற்றி (கூ)
போற்றி[5]கரகாபாலதானவசங்காரகரபுனிதா போற்றி
போற்றியுரகாபரணவரியதளகயிலைமலைப்புனிதா போற்றி
போற்றிசயசய போற்றிதிரிசூலதரபோற்றிபோற்றியென்றான்

போற்றி திரிபுரதகன கலாந்தகா,
மததகன புனிதா போற்றி,
போற்றி கரகாபால தானவ,
சங்காரகர புனிதா போற்றி,
போற்றி உரகாபரண, அரியதள
கயிலை மலைப் புனிதா போற்றி,
போற்றி சயசய போற்றி, திரிசூலதர
போற்றி, போற்றி என்றான்.

பொருள் : ஆன்மமலங்களையும்-அவற்றின் வழிவந்த தாமதம் இராசதம் சாத்வீகம் என்ற முக்குணங்களையும் உன் அருள் நோக்கால் நீக்கியவனே வணக்கம். காலங்கட்கு உட்படாதவனே வணக்கம். அவற்றின் முடிபாக நிற்பவனே-காலம் என்ற மரணத்திற்குக் கூற்றாய் அமைந்தவனே, காம மதத்தை எரித்தவனே வணக்கம். புனிதவடிவு கொண்டவனே வணக்கம். உனது திருக்கையால்அனைத்தையும் காப்பவனே வணக்கம். கொடியவரான அரக்கரை அழிப்பவனே வணக்கம். அருள்நிறைந்த திருக்கைகளை யுடையவனே வணக்கம், பாம்பணி பூண்டவனே வணக்கம். மேன்மை மிகு கயிலை மலையில் எழுந்தருளியிருப்பவனே வணக்கம். புனிதனே வணக்கம். முத்தலைச் சூலத்தைத் தாங்கி இருப்பவனே வணக்கம். வெற்றியைத் தருபவனே உன்னை வாழ்த்தி வணங்குகின்றேன்-என்றனன்.

10. என்றென்றுதுதித்திறைஞ்சிவிபூஷணனவ்விராமனெனுமியற்பேருள் (க0)
குன்றொன்றுமலர்ந்தவிருகோகனகம்போற்றியிதழ்க்குமுதம்பேணி
[7]நின்றிங்கோராலயமிங்கியற்றுதுநம்வினைதீர்த்தநிமலர்க்கைய
நன்றென்றுன்னருள்புரிந்தாலதுபோதுமென்றவனுநல்லதென்றான்

என்றென்று துதித்து இறைஞ்சி விபூஷணனவ்
இராமனெனும் இயற்பேர் உள்ள
குன்று ஒன்று மலர்ந்த இருகோகனகம்
போற்றி இதழ்க்குமுதம் பேணி;
நின்றிங்கு ஒர் ஆலயம் இங்குஇயற்றுது
நம் வினைதீர்த்தநிமலற்கு ஐய,
நன்றென்று உன் அருள்புரிந்தால்
அதுபோதும், என்றவனும் நல்லதென்றான்.

---

பா. வே. 5 கரகபாலி, பா. வே. 6 விபூஷணனும் விபூஷணனவ்விராமனெனும், 7 நின்றின்றோர்.

பொருள் : விபூஷணன் பல்வகையால் வலிமை கொண்ட அருள் மலர்ந்த மலை போன்ற இராமனையும்-பெருமைமிகுசிறப்பமைந்த கோகனகம் என்ற அருட்தலத்தினையும் போற்றிவணங்கினான், பின் தாமரை மலரிதழ் போன்ற தன் வாய் இதழினைக் கையால் பேணி மறைத்துக் கொண்டு (வாய்பொத்தி) இராமனை-நோக்கி வணங்கி ஐயனே! எமது வினைதீர்த்த-சிவபெருமானுக்கு ஓர் ஆலயம் இயற்றுதல் வேண்டும். அதற்கு உனது நலம்மிக்க ஒப்புதலைத்தந்தால் போதும். அதற்கு அருள்புரிவாயாக என்றனன். அதற்கு இராமனும் நல்லது என விடை பகர்ந்தான்.

11. நல்லமதிவைகாசிநற்குருமான்றலைதிங்கணலத்தவோரை (கக)
சொல்லியமுறுபக்கமுறும்பஞ்சமியினாட்கொண்டுதொகுத்துக்கோயில்
வல்லவசிட்டனைத்தொழுதுதெய்வநாயகன்றனதுவடிவந்தீட்டி
யல்லிமலர்த்தாள்போற்றவேண்டுமெனவவன்செய்வானன்புகொண்டான்

நல்லமதி வைகாசி நற்குருமான்
தலைதிங்கள் நலத்த ஓரை,
சொல்லிய முற்பக்கமுறும் பஞ்சமியின்
நாள்கொண்டு தொகுத்துக் கோயில்,
வல்ல வசிட்டனைத் தொழுது,
தெய்வ நாயகன்தனது வடிவம் தீட்டி,
அல்லிமலர்த் தாள்போற்ற வேண்டுமென
அவன்செய்வான் அன்பு கொண்டான்.

பொருள் : வைகாசி மாதத்தில் வளர்பிறையில், முதல் திங்கள் நாளில் குருபகவான் உச்சம்கொடுக்கும் பஞ்சமித்திதியில் நாட்கொண்டு, கோயிலினைக்கட்டி ; கடவுள் மாமுனிவன் வசிட்டனைத்தொழுது, இறைவனது திருவடி வினை அமைத்து, அவனது இனிய மலர்த்திருவடிகளைப் போற்றுதல் வேண்டுமென விபூஷணன் கூற, அதற்கு இராமனும் அன்புடன் உடன்பட்டான்.

12. கொண்டலுறுமின்போலவிராவணன்றன்காட்சியினாற் குலவுமேனி (கஉ)
யண்டரெலாம்படத்தெழுதுந்திருவுருவை வசிட்டமுனியழகுகூரத்
தண்டவளச்சித்திர வோடலம்புரியா விபூஷணனுந்தாழ்ந்துள்ளன்பாற்
கண்டருளிக் கோயிலின்கண்ணமைவித்தான்ஞானவிழிகலுழுமார்பன்.

கொண்டலுறும் மின்போல, இராவணன்தன்
காட்சியினால் குலவு மேனி,
அண்டர் எலாம் படத்து எழுதும் திருவுருவை,
வசிட்டமுனி அழகு கூரத்,
தண்தவளச் சித்திர ஒடு தலம்புரியா,
விபூஷணனும் தாழ்ந்து உள்ளன்பால்
கண்டு அருளிக், கோயிலின்கண்
அமைவித்தான் ஞானவிழி கலுழுமார்பன்.

பா. வே. 8 அவண்

பொருள் : நீர்கொண்ட முகிலில் எழும் மின்னொளிபோல்-இரவு வண்ணனான இராவணன் முன், சிவன் தோன்றும் அழகுக் காட்சியினைத் தேவர்கள் அழகுபட வரைந்தனர். அதனைக் கடவுள் மாமுனி வசிட்டன் மிக அழகுபொருந்த, தண்மை மிகுந்த பவள ஒட்டின்கண் மிக்க கவனத்துடன் தீட்டினன். அதனை அறிவொளிவீசும் கண்களையுடைய விபூஷணனும் உள்ளன்புடன், கண்டு மனம் மகிழ்ந்து கோயிலின்கண் அமைவுபெறச் செய்தனன்

13. பன்னகத்திற்றிருமானின்னடி போற்றுந்தென்கயிலைப்பரமவீசர். (கங)
சன்னிதிக்குட்டிருவுருவில்யோகினியைச்சூலினியைத்தாபித்தோங்கும்
பொன்னதிக்குன்றெனுமச்சகேசுரத்தைவலம்வந்து போற்றிசெய்து
பின்னகத்தினிராமனுடன் விபூஷணனும் விடைகொண்டான் பெற்றியுள்ளான்.

X பன்னகத்தின் திருமான் நின்றடிபோற்றும்
தென்கயிலைப் பரம ஈசர்
சன்னிதிக்குள், திருவுருவில் ⁰யோகினியைச்
⁰ சூலிவினியைத் தாப்பித்து, ஓங்கும்
பொன்நதிக் குன்றெனும் மச்சகேசுரத்தை
வலம்வந்து போற்றி செய்து,
பின் அகத்தில் இராமனுடன் விபூஷணனும்
விடைகொண்டான் பெற்றியுள்ளான்.

பொருள் : ஆதிசேடனைத்தன் பள்ளியாகக் கொண்ட திருமாலும்-தேவர் உலகத்தலைவனான இந்திரனும் உட்பட்ட தேவர்கள்வந்து வணங்கும் தென்கயிலையில் அமைவுபெற்ற பரமசிவன் எழுந்தருளியிருக்கும் கோயிலுக்கு, யோகினி-சூலினி என்ற சக்திமையங்களையும் நிலைகொள்ளச் செய்து, அழகுமிகு செழுமைகொண்ட புனிதநீர்பாயும் திருமலையென்னும்-மச்சகேசுரத்தை வலஞ்சுற்றி வணங்கிய விபூஷணன்-பின்தன் இருப்பிடம் மீழ்வதற்கு இராமனுடன் சென்று-சிவபெருமானிடம் விடை கொண்டான்.

0 யோகினி = பார்வதி-உமை  0 சூலினி = காளி
X "பன்னகத்தின் திருமானின்றடி போற்றும்"

பன் அகத்தின் திருமாலின் எனப் பிரித்துப் பொருள் கொண்டால் திருமாலினையும், பன்னகத்தின் திருமான் எனக் கொண்டால் தேவர்தலைவன் இந்திரனையும் குறிக்கும். எனவே இருபொருள்படவந்த இத்தொடருக்கு இருபொருளும் இணைவு பெறப் பொருள் காணப்பட்டது.

14. உள்ளமுடன்விழிகுளிர்ந்தார்சந்திரசூரியர்முனிவருரகரானோர் (கச)
தெள்ளியலர்கொழித்திறைஞ்சிமண்ணுலகந்தனில் விண்ணோர் தெரிசித்துற்றார்
கள்ளமுடன்கொலைகளவுகட்காமங்குருநிந்தைகைவிட்டேனோர்
வள்ளலையுமடிபோற்றித்தள்ளரியதுயர்மாற்றி⁹வணங்கிவாழ்ந்தார்.

---

பா. வே. 9 கலந்து

உள்ளமுடன் விழிகுளிர்ந்தார் சந்திரர்சூரியர்
முனிவர் உரகர் ஆனோர்,
தெள்ளி அலர்கொழித்து இறைஞ்சி
மண்ணுலகந்தனில் விண்ணோர் தெரிசித்துற்றார்,
கள்ளமுடன் கொலை, களவு, கள், காமம்,
குருநிந்தை, கைவிட்டு, ஏனோர்,
வள்ளலையும் அடிபோற்றித் தள்ளரிய
துயர்மாற்றி வணங்கி வாழ்ந்தார்

பொருள் : சந்திரர்-சூரியர்-முனிவர்-தேவர் அனைவரும் மனம்-மகிழ்ந்து-கண்கள் அன்பினால் மலர்ச்சிபெற, இம்மண்ணுலகில் அமைந்த திருமலைக்கு வந்து சிவபெருமானை மலர்தூவி-வணங்கினர். பூமியில் வாழ்வோரும்; பொய்-கொலை-களவு கள்-காமம்-குரு நிந்தை என்ற கொடிய செயல்களைக் கைவிட்டனர். அருள் வள்ளலான சிவனின் திருவடியினைப் போற்றி வணங்கினர். அதனால் நீங்கற்கரிய துன்பம் விட, நல்வாழ்வு பெற்றனர்.

15. [10]வானவர்கடொழுங்கோணையண்ணலையுள்ளையுள்தேவியையும்கிழ்ந்துமுன்னாட் (கரு)
டேனையமொழிக்கங்குற்கரிபுதல்வனன்பினொடுசெய்யசாம
கானமதனாற்றுதிக்கும்படிகரத்திற்றரித்திடுமக்கலத்தைக்கண்டே
யானசுங்கீதனெனுங்கந்தருவனதைக்கவர்தற்காசையுற்றான்.

வானவர்கள் தொழும் கோணை அண்ணலையும்
தேவிவியையும் மகிழ்ந்து முன்நாள்,
தேன்அனைய மொழிக் கங்குல் கரிபுதல்வன்,
அன்பினொடு செய்ய, சாம
கானம் அதனால், துதிக்கும்படி கரத்தில்
தரித்திடும், அக்கலத்தைக் கண்டே,
ஆன சுசங்கீதனெனும் கந்தருவன்
அதைக் கவர்வதற்கு ஆசையுற்றான்.

பொருள் : தேன்போன்ற இனிய சொல்லின்பத்தினையும், இருண்ட கரிய கூந்தலிலையும், அழகிய கருமை நிறங்கொண்ட-தோற்றத்தினையும் கொண்ட இராத்திரிசரியின் மகன்-இராவணன்; முன்னாளில் அன்பினால் மனம் நெகிழ்ந்து கையில் யாழ் ஏந்திச் சாமகானம் செய்தான். அவன் சாமகானம் செய்யப் பயன்பட்ட யாழினைச் சுசங்கீதன் என்ற கந்தருவன் கண்டனன். அதனைத் தனக்குரியதாக்க ஆவல் கொண்டனன்.

16. [11]உற்றதொருசமயம்பார்த்துற்றிருந்தவனிராமனுயர்வெங்கோலா (கசா)
விற்றபோழ்தினிற்கவர்துமானுடவடிவாகியிணையில்கீரிப்
பொற்றையெய்திக்கங்காசங்கமப்புணரிநதியாடிப்பொருவிலாத
பற்றொடரன்றனையேத்திவீணாகானந்தனைப் பண்ணினானால்

பா. வே.10-11-12 முறையே, 15ம் பாட்டாக; வாழ்வுதர தென்கயிலை என்பதும், 16ம் பாட்டாக சுருதிசெயிமந்நாளில் என்பதும், 17ம் பாட்டாகக், காட்சி தரும்திரேதவுகஞ் சென்று என்பதும் இடம் பெற்றுள்ளன.

உற்றது ஒருசமயம்பார்த்து உற்றிருந்தவன்,
இராமன் உயர் வெங்கோலால்
இற்ற போழ்தினில், கவர்து மானுட
வடிவாகி இணையில் கீரிப்
பொற்றை எய்திக், கங்காசங்கமம்
புணரி நதியாடிப், பொருவிலாத
பற்றொடு, அரன்தன்னை ஏத்தி,
வீணாகானம் தனைப் பண்ணினானால்

பொருள்: சுசங்கீதன் என்னும் கந்தருவன் இராவணனது யாழினைக் கவருவதற்காகக் காலம்பார்த்திருந்தான். இராவணன்; இராமனது அம்பினால் அழிந்தபோது-அதனைத் தன்வயமாக்க எண்ணி-மனிதவடிவுதாங்கிப் பெருமைமிக்கதும் இணையற்றதுமான கீரிமலையை நண்ணினன். அங்கு வான்கங்கை கலந்தோடும் புனிதநீர்த்தமாடிக்குறைவற்ற அன்போடு சிவனைப் போற்றி வீணைமீட்டி இசை பாடினன். ஆல் ஈற்றசை.

17. [12]பண்ணுதலுஞ்சிவபிரான்மகிழ்ந்துவெளிப்பட்டுசுசங்கீதனைப்பார்த் (கஎ)
துண்ணெகிழ்ந்துநீவீணாகரனாய்நின்றிசைத்தமையாலோங்குமிங்ஙன்
மண்ணவர்கள்புகழ்வீணாபணமென்னும்பெயராகமற்றிப்பாங்க
ரெண்ணில்பதலமுளவிக்காட்டைவெட்டி நகராக்கென்றியம்பிப்போனான்

பண்ணுதலும் சிவபிரான் மகிழ்ந்து வெளிப்பட்டு
சுசங்கீதனைப் பார்த்து
உள்நெகிழ்ந்து நீ வீணாகரனாய் நின்று
இசைத்தமையால் ஓங்கும் இங்ஙன்
மண்ணவர்கள் புகழ் வீணாபணமென்னும்
பெயராக மற்றிப் பாங்கர்
எண்ணில் பதலம் உள்ள இக்காட்டை
வெட்டி நகர்ஆக்கென்று இயப்பிப்போனான்

பொருள் : சுசங்கீதனின் இசையால் மகிழ்ந்த சிவபிரான்; அவன் முன் தோன்றி அருள் நோக்கஞ் செய்தனன். அவனை நோக்கி, நீவிணையினை இசைத்துக் கானஞ் செய்ததனால் புகழ் ஓங்கும் இவ்விடத்தில், மண்ணவர்கள் புகழ வீணாபணம் என்னும் பெயரோடு ஒரு நகரத்தினை உருவாக்குக. அதற்குரிய இடமாக இதன்பக்கலில் உள்ள எண்ணற்ற பரந்த பரப்பில் உள்ள காட்டினை வெட்டிப் பயன்படுத்துக வெனக் கூறிப்போந்தனன்.

18. [13] போனவரன் மொழிப்படியச்சுசங்கீதன் காட்டை வெட்டிப் புரமதாக்கித் (கஅ)
தானழிந்த வாலயங்கடனைமெழில் பெறப்புதுக்கிச் சனங்கடம்மை
யான குடியாயிருத்திநகுலேசரடி பரவியருள் பெற்றேகி
மானிலமெலாம் புகழத்தனதுலகந்தனிலடைந்து வாழ்ந்தானன்றே.

---

பா.வே. 12 பு.பொ.வை.தே பதிப்பில் காட்சி தரும் என்ற பாடல்
பா.வே. 13 பு . பொ.தே. பதிப்பில் நடமிருவு என்ற பாடல்.

போன அரன் மொழிப்படி அச்சுசங்கீதன்,
காட்டை வெட்டிப் புரமதாக்கித்
தானழிந்த ஆலயங்கள் தனையும்
எழில் பெறப் புதுக்கிச், சனங்கள் தம்மை
ஆன குடியாய் இருத்தி நகுலேசர்
அடி பரவி அருள் பெற்று ஏகி
மானிலம் எலாம் புகழ்த் தனது
உலகங்தனில் அடைந்து வாழ்ந்தான் அன்றே.

பொருள் : அருள் செய்து போன சிவனின் திருக்குறிப்பின் படியே காட்டினை வெட்டி நாடாக்கிய சுசங்கீதன்; அந்நாட்டிற்குரிய நகரினை அழகுற அமைத்தனன். காட்டகத்தில் இருந்த பழைமை மிகு கோயில்களையும் சீராக்கஞ் செய்து அழகுபெறச் செய்தனன். மக்களைக் குடியமர்த்தி அவர்களுக்கு நல்வாழ்வு அளித்தனன். அதன்பின் நகுலேசப் பெருமானான சிவனை வழிபட்டு, அவன் அருளைப் பெற்று, இவ்வுலகில் உள்ள அனைவரும் புகழ்ந்து வாழ்த்த, தான் வாழும் கந்தருவ உலகினைச் சென்றடைந்தனன்.

19 *[14]வாழ்வுதருதென்கயிலைப் பெருமான் பொற்றிருக்கோயின்மவுலிபேணி (கக)
யேழுமுகிலுங்கனகமழையு மலர்மழையுமெழுதியற்றி நின்ற
பாழி வரை முழக்கொலியுமிமை யோர்கள் பரவொலியும் பயின்று வாழ்த்தச்
சூழுதிரைக்கரத்திற் செழுந்தரளம் பொழிந் தோலச் சுருதிசெய்த

வாழ்வுதரு தென்கயிலைப் பெருமான்
பொன் திருக்கோயில் மவுலி பேணி,
ஏழு முகிலும் கனகமழையும் மலர்மழையும்
எழுதியற்றி நின்ற,
பாழிவரை முழக்கொலியும், இமையோர்கள்
பரவொலியும் பயின்று வாழ்த்தச்,
சூழுதிரைக் கரத்தில் செழுந்தரளம் -
பொழிந்து ஓலச் சுருதி செய்த

பொருள் : ஆன்மாக்களுக்கு நல்வாழ்வினைத் தருகின்ற தென்கயிலையில் எழுந்தருளியிருக்கின்ற சிவனின் அழகிய திருக் கோயிலின் முடியினைப் போற்றி வாழ்த்தி; சம்வர்த்தம், ஆவர்த்தம், புட் கலாவர்த்தம், சங்காரிதம், துரோணம், நீலவருணம், காளாமுகி என்னும் ஏழு முகில்கில்களும் பொன்மாரியும் - மலர்மாரியும் பெய்து நின்றன. திருமலையினைச் சூழ்ந்து நின்ற கடலின் பேரொலியும், தேவர்களின் பரந்த வாழ்த்தொலியும், ஒன்றிணைந் தெழக், கடல் அலைகள் அதற்கேற்ற இன்னோசையுடன் தாளமிட்டு முத்துக்களைச் சிந்தி ஓங்கார ஓசையாம் வேதத்தினை மிளிற்றின.

---

பா.வே. 14
* 4.பொ.வை.தே பதிப்பில் காண்மிண்கடென்கயிலை

20. *[15] சுருதி செயுமந்நாளிலொருநாளோராயிரம்பொற்சோதிமாறாக் (உ0)
குருதிபொழி மாணிக்கக்கண்ணாடி கருமையுட்கொள்வபோலப்
பருதிகுடபாற்கடலுட்புகுந்துகுணபாலுதயம்[13] புரிந்ததோற்றங்
கருதின் முழுமாமணிக்கக்கண்ணாடியைவிடுத்தகாட்சிபோலும்

சுருதிசெய்யும் அந்நாளில் ஒருநாள்
ஓர் ஆயிரம் பொற்சோதி, மாறாக்
குருதி பொழி மாணிக்கக் கண்ணாடி
கருமை உட்கொள்வ போலப்
பருதி குடபால் கடலுள் புகுந்து
குணபால் உதயம் புரிந்த தோற்றம்,
கருதின் முழுமாணிக்கக் கண்ணாடியை
விடுத்த காட்சி போலும்

பொருள்: ஓங்கார ஓசையினை எழுப்பிய அந்தநாளில் ஒருநாள் ஓராயிரம் எண்ணிகை கொண்ட பொன் ஒளியினையுடையகதிரவன் ; செவ்வொளியினைப் பொழிகின்ற மாணிக்கக் கண்ணாடி, கருமை நிறம் கொள்வது போல் மேற்குத்திசையில் உள்ள கடலில்புகுந்து, கிழக்குக்கடல்மேல் தோன்றிய காட்சியினை எண்ணின், கருமை; மாணிக்கக் கண்ணாடியினை விட்டு நீங்கியது போலிருந்தது.

21. *[16] காட்சிதருந்திரேதவுகஞ்சென்றுதுவுபாபரயுகமுங்[17] கலந்தவந்நாட் (உக)
சேட்கடல்சூழ்புவியனைத்துந் தொழுங்கயிலைப்பெருமான்பொற்றிகழ் பூங்கஞ்சத்
தாட்கருதும் வானவர்கண்மானவர்போல் வந்திறைஞ்சித்தவஞ் செய்தேகு
நாட்கருதும்வடமொழியின் புராணநடையிவ்வளவு நடத்தினேமால்.

காட்சிதரும் திரேத உகம்சென்று
துவாபர உகமுங்கலந்த அந்நாள்
சேட்கடல்சூழ் புவியனைத்தும் தொழுங்கயிலைப்
பெருமான் பொன் திகழ் பூங்கஞ்சத்
தாள்கருதும் வானவர்கள் மானவர்போல்,
வந்து இறைஞ்சித் தவம் செய்தேகு
நாள்கருதும் வடமொழியின் புராணநடை,
இவ்வளவும் நடத்தினேமால்,

பொருள்: கழிந்து கொண்டிருந்த திரேத உகத்தின் முடிவில் துவாபர உகத்தின் தொடக்கத்தில், அதாவது முன் உகத்தின் முடிவிலும் பின் உகத்தின் தொடக்கத்திலும் இணைவு கொண்ட அந்த நாளில், அகன்று பரந்த கடல் சூழ்ந்த மண்ணகம் அனைத்தும் தொழுகின்ற கையிலைமலைப் பெருமானின் அழகுமிகு தாமரைமலர்த் திருவடிகளை வணங்குந் தேவர்கள்; மண்ணகத்தவர்போல் வந்து தொழுது வணங்கித் தவஞ் செய்து செல்லும் நாட்களின் தன்மையினையும், வடமொழிப்புராண நடையினையும், அதன் இயல்பினையும் இற்றைவரை கூறினோம்.

பா.வே. 15 * இப்பாடல் பு. பொ. வை. தேசிகாபதிப்பில் 16 பாட்டாக இடம் பெற்றுள்ளது. பா.வே. 13 பரிந்த தோற்றம். 16 இப்பாடல் பு.பொ.வை.தே பதிப்பில் 17ம் பாட்டாக இடம் பெற்றுள்ளது. 21 ம்பாட்டாக உள்ளறிவு பொடிப்படுத்தும் என்பது இடம் பெற்றுள்ளது. பா.வே. 17 கடந்தவந்நாள்.

22. [18] நடமருவுதிருப்பாதர்திருப்பாதவருட்கயிலைநாதர்தோற்றந் (உஉ)
தொடைமருவுமெய்ஞ்ஞானச்[19]சுந்தரன்சொற்செந்தமிழாஞ்சுருதிதன்னி
லிடமருவுதில்லைச்சிற்றம்பல மேமுதலெடுத்தவெத்தானத்துங்
கடமருவுமமுதமெனக்காணலாமென்பதனுட்காண்மின்காண்மின்

நடமருவு திருப்பாதர் திருப்பாத
அருட்கயிலை நாதர் தோற்றம்,
தொடை மருவும் மெஞ்ஞானச் சுந்தரன்
சொல் செந்தமிழாஞ் சுருதி தன்னில்,
இடமருவு தில்லைச் சிற்றம்பலமே
முதலெடுத்த எத்தானத்தும்,
கடமருவும் அமுதமெனக் காணலாம்

பொருள். திருநடனஞ்செய்யும் தூக்கிய திருவடியினையுடைய அருள் நிறைந்த கயிலைநாதன் தோற்றம்; மிகமிக உயர்வு சிறப்புக்குரியது. இதனை நன்மணங்கமழும் மலர்மாலையணிந்த நிறையறிவுச் சுந்தரமூர்த்திகள், தன் தமிழ்வேதத்தில் விளக்கியுள்ளார், அதில்; உலகில் இடங்கொண்ட புனித இடங்களிலும்பார்க்கத் திருச்சிற்றம்பலம் எனப் பகரப்படும் இறைவன்பதியே முதன்மை கொண்டது எனக் கூறுவர். எனவே அது கடலிடத்துப் பிறந்த அமுதமெனக் கொள்ளலாம். அதனை உணர்வீர்களாக . உணர்வீர்களாக.

23. [20] காண்மின்கடென்கயிலைப் [21]பெருமான்றன்றிருமேனிகருதுமின்கள் (உங)
பேண்மின்கள் சந்நிதியிற்புகுமின்கடொழுமின்கள்பேணுமின்கள்
கேண்மின்கள் கயிலாசபுராணமெனுஞ்சிவகதையைக்கிளைகளோடும்
வாண்மின்களுய்மின்களஞ்செழுத்தைமறவாதுவாழ்த்துமின்கள்

காண்மின்கள் தென்கயிலைப் பெருமான்தன்
திருமேனி, கருதுமின்கள்,
பேண்மின்கள், சந்நிதியிற் புகுமின்கள்
தொழுமின்கள், பேணுமின்கள்,
கேண்மின்கள், கயிலாச புராண மெனும்,
சிவகதையைக் கிளைகளோடும்,
வாண்மின்கள், உய்மின்கள் அஞ்செழுத்தை
மறவாது வாழ்த்துமின்கள்

பொருள்: தென்கயிலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனைச் சென்று காணுங்கள். அவன் திருப்புகழை எண்ணுங்கள். அவன் திருப்பெயரைப் போற்றுங்கள் புனிதம் நிறைந்த கோயிலுட் புகுந்து அவனடி பரவுங்கள். அவன் பெருமையினைப் பேசுங்கள். கேளுங்கள்; கயிலாசபுராணம் என்னும் சிவகதையினை உங்கள் சுற்றத்தோடும் கேட்டு நல்வாழ்வு வாழுங்கள். ஐந்தெழுத்தாலாய ஓம் சிவயநம என்ற மந்திரத்தினை மறவாது போற்றிப் பிறவித் துயரில் இருந்து மீளுங்கள்.

---

பா. வே. 18 மேதினியின் மஞ்சயேந்தியத்து என்றபாடல் பு.பொ.வை.தே பா.வே. 19 சம்பந்தன் செந்தமிழாம், பா.வே. 20 பு.பொ.வை.தே பதிப்பு தேவரினம் என்றபாடல் 21 மாணைத் திருமேனி.

24. களபமதக்கலுழிவரையுரிசெய்தருள்கயிலாயர்கமலபாதம் (உச[1])
புளகமுறமனதினினைப்பவர்நயனவுதககதுளிபொழிவபோல
விளவுகடல்பரவுதிரை[23]விடுவதிலையெறிது[24]ளியோடேறுசங்க
வளையுதவுதரளநிரைசிதறிநிரைதரும்வளமைமலையினுள்ள

களபமதக் கலுழிவரை உரிசெய்தருள்
கயிலாயர் கமலபாதம்,
புளகமுற மனதில் நினைப்பவர் நயன,
[0] உதக துளி பொளிவபோல,
விளவு கடல் பரவுதிரை விடுவதிலை
எறிதுளியோடு, ஏறு சங்கம்
வளை உதவு தரளநிரை சிதறி
நிரைதரும் வளமை மலையினுள்ள.

பொருள்: மணம்மிகுந்தமதநீர் சொரியும்மலை போன்றயானையை உரித்து, அதன் தோலைப் போர்த்த கயிலாய நாதர் தாமரைமலர்த் திருவடிகளை, உள்ள மகிழ்ச்சியுடன் மனதிடத்து மறவாது நினைப்பவர் கண்களிலிருந்து நீர்த்துளி பெருகுவதுபோல, ஒலிக்கின்ற கடலின்கண் பரவிவரும் அலையானது, சிந்துகின்ற நீர்த்துளிகளுடன் வருஞ் சங்கினங்கள்; ஒளிமிக்க முத்துக்களைச் சிதறி வளஞ் செய்தன இத்தகைய வளம் அக்கடல் சூழ்ந்த மலையிடத்தும் அமைவு பெற்றிருந்தது.

0 உதக துளி= முன்பாடல்களில் கடல்நீர் என்றபொருளிலும் இப்பாடலில் கண்ணீர்த் துளி என்ற பொருளிலும் அமைந்துள்ளது.

25. [24]உள்ளறிவுபொடிபடுத்துந்திரிகையெனத்திரியுமதியுளத்தினோடும் (உரு)
பள்ளமுறப்பாய்புனல்போற்சஞ்சிதத்தின்வழியொழுகும்படிவந்திட்டிக்
கள்ளவினைதீர்த்துமுத்திக்கதவெவர்க்குந்திறக்குந்தாள்கங்கைவேணிப்
பிள்ளைமதிமுடித்ததிருக்கயிலையரன்றாள்களெனப் பேசலாமே

உள்ளறிவு பொடி படுத்தும் திரிகையெனத்
திரியும் மதி உளத்தினோடும்,
பள்ளமுறப் பாய்புனல்போல், [0] சஞ்சிதத்தின்
வழி ஒழுகும் படி வந் தீட்டிக்
[0]கள்ளவினை தீர்த்து முத்திக்கதவு
எவர்க்கும் திறக்கும் தாள்; கஙகைவேணிப்
பிள்ளை மதி முடித்த திருக்கயிலை
அரன் தாள்கள் எனப் பேசலாமே.

பொருள்: உள்ளறிவு தூளாகும்படி, அரைக்கும் திரிகை போன்று அலைந்து திரியும் வேகம் கொண்ட புத்தியோடிணைந்த உள்ளத்தின் தன்மை,

---

பாவே 22 பு.பொ.வை.தே பதிப்பு சோணாடு முதலிய தென்மதுரை என்ற பாடல் 23 விடுதிவலை 24 வளியோடு. பா.வே. 25 பு.பொ.வை தே. பதிப்பு கூறுநவகண்டத்து, என்றபாடல்

பள்ளத்தினை நோக்கிப்பாயும் நீர்ப் பெருக்குப்போன்றது. இந்நீர்ப்பெருக்குப்போல் வரும் முன்வினை; நிகழ்வினையோடு பொருந்தி வந்து துன்புறுத்தும் செயலனைத்தையுந் தீர்த்து, எதர்வினையினைப் போக்கி, வீடுபேற்றிற்குரிய கதவின் தாள்ப்பாளைத் திறப்பது; கங்கையினைச் சடையில் சூடியவனும் மூன்றாம் பிறைச்சந்திரனை அணிந்தவனுமான திருக்கயிலை நாதன் தாள் எனப் பகரலாம். ஏ. தேற்றோகாரம் 0 சஞ்சிதம் - நிகழ்வினை, 0 கள்ளவினை - எதிர்வினை

26. [26-27] மேதினியின்மச்சேந்தியத்துண்மாகூதமுனிவிதித்தவிந்த (உசா)
வாதிபுராணக்கதையுமன்றியும் பின்னடந்த கதையனேகமுண்டா
னீதியினக்கதைகருதித்தென்கயிலைத்திருப்பதியினிலைமையெல்லா
மோதுவன் செந்தமிழ்நூற்றொடைமுறையான்[28]டைமுரசேருலகமீதே

மேதினியின் மச்சேந்தியத்துள்,
மாகூதமுனி விதித்த இந்த
ஆதி புராணக் கதையும், அன்றியும்
பின்னடந்த கதை அனேகம் உண்டா,
நீதியின் அக்கதை கருதித், தென்கயிலைத்,
திருப்பதியின் நிலைமை எல்லாம்,
ஓதுவன் செந்தமிழ் நூல் தொடைமுறையால்,
நடைமுர சேர் உலகமீதே.

பொருள்: இவ்வுலகத்தமைந்த மச்சேந்தியத்தின் பழைமைமிகு பெருமையினையும், நாதமுனி கூறிய புராணக் கதையினையும், அதன்பின் நடந்தகதையினையும் கூறுவேன். அவை அனேகம் உண்டு. நீதி வயப்பட்ட அக்கதையினை மனதிற்கொண்டு, தென்கயிலைத்திருக்கோயிலின் பெருமையனைத்தையும், செந்தமிழ் நூல்மரபுவழிவந்த முறைமைகொண்டு, இவ்வுலகோர் அறியக் கூறுவேன்.

27. [29] தேவரினம்பரவுசிவலிங்கமது பூசிப்பத்தினமும் வெவ்வே (உஎ)
றாவலினாற்றாபித்தங்காசமனங்கொண்டதற்பினமுதுசெய்வா
னாவலவன் பெருந்தீவிற்கங்கைநதிக்கரையிருந்து ஞாலங்காக்குங்
காவலவன்பரிதிகுலத்தொருதலைவன்மனுநீதிகண்டசோழன்

தேவர் இனம் பரவு சிவலிங்கமது
பூசிப்பத் , தினமும், வெவ்வேறு
ஆவலினால் தாபித்து, அங்கு ஆசமனம்
கொண்டதற்பின் அமுது செய்வான்,
நாவலவன் பெருந், தீவில் கங்கைநதிக்
கரையிருந்து ஞாலங் காக்கும்,
காவலவன் பரிதிகுலத் தொருதலைவன்
மனுநீதி கண்ட சோழன்.

---

பா.வே. 26 பு. பொ. வை தே. பதி மேலமைத்த மச்சகேச்சுர என்றபாடல்
27 மேலைமச்சோந்தியபுராணககதை 28 நடைமுறை 29 பு.பொ.வை.தே.பதி படித்த பொழுதிரு என்றபாடல.

பொருள். சூரியகுலத்தின் சிறந்த தலைவன் மனுநீதி கண்ட சோழன். இவன் நாவலம் பெருந்தீவில் கங்கை நதிக் கரையில் இருந்து உலகினைக் காக்கும் காவலன். இவன் தேவர்களினால் போற்றி வழிபடும் சிவலிங்கத் திருவடி வைத்திரு நிலைப்படுத்தி, தன்பல்வேறுபட்ட ஆவலினால் பூசனை செய்து வழிபட்டபின், அமுதாகிய உணவினை உள்கொள்பவன்.

28. [30]சோணாடுமுதலியதென்மதுரைவடமதுரையெனச்சொல்லுநாட்டிற் (உ அ)
சாணாடும்பிறர்க்கமையானிலமடந்தைதனைவரைந்ததகுதியாலு
மாணாகுந்திறத்தாலுமபய னென்னும் பெயராலுமையனென்றுங்
கோணாதகருணையினாலன்னை யென்றும் பல்லுயிர்க்குங் கூறலாமே

சோணாடு முதலிய தென்மதுரை
வடமதுரை எனச்சொல்லும் நாட்டில்,
சாண்நாடும் பிறர்க்கு அமையான்,
நிலமடந்தை தனை வரைந்த தகுதியாலும்,
மாண் ஆகும் திறத்தாலும் அபயன்
என்னும் பெயராலும் ஐயன் என்றும்
கோணாத கருணையினால் அன்னையென்றும்
பல்லுயிர்க்கும் கூறலாமே.

பொருள்: மனுநீதிகண்ட சோழன்; சோழநாட்டினையும்-பாண்டிநாடாகிய தென்மதுரையினையும், வடபுலம் அமைந்த யாதவர்நாடான வடமதுரையினையும், உள்ளடக்கிய நாவலந் தீவினைத் தனக்குரியதாகக் கொண்டு ஆண்டனன். அத்தன்மையாலும், ஆளுமைத் திறத்தாலும், அடைக்கலம் கொடுப்பவன் என்னும் பெயர் கொண்டதாலும், தலைவனென்றும், கோடுதலின்றிக் குறைவறச் செய்யும் அன்பாலும், அனைத்துயிர்கட்கும் தாயாக இருந்தனன் என அவனைக் கூறலாம்.

29. [31] கூறுநவகண்டத்துச்சிவதானமனேகம் பொற்கோயிலாக்கிப் (உகூ)
பேறுதரமுடிதரித்தவரராமதேவனெனும் பெரும்போர்வேந்தன்
மாறில் புராணங்கேட்கு மொருநாளிற்புரோகிதன் மெய்வருத்தமாகி
வீறபயனவைக்குத்தான் வராது மகனை வர விடுத்தான் மேலோன்

கூறு நவகண்டத்துச் சிவதானம்
அனேகம் பொற்கோயில் ஆக்கிப்,
பேறுதர முடிதரித்த வரராம தேவன்,
எனும் பெரும்போர் வேந்தன்,
மாறில் புராணம் கேட்கும் ஒருநாளில்,
புரோகிதன் மெய் வருத்தமாகி,
வீறபயன் அவைக்குத் தான்வராது,
மகனைவரவிடுத்தான் மேலோன்.

---

பா.வே. 30 பு. பொ.வை. தே. பதி. செய்தவத்தின் வடகயிலை என்ற பாடல். 31 பு.பொ.வை. தே. பதி. வாயிருந்த சதுர்மறையின் என்ற பாடல்.

பொருள் : வரராம தேவன் என்ற வீரத்தினால் மிக்கோன்பழைமையும் புதுமையும் மிக்க நாவலந்தீவில், சிவனுக்கு அழகிய திருக்கோயில்களைக் கட்டுவித்தான். அப் புண்ணிய பலனால் பெரும் புகழ் கொண்டனன். நாடாளும் உரிமையினையும் பெற்றனன். இவன் புராணம் கேட்கும் விருப்புடையன். இதனைப் புரோகிதன் ஒருவன் செய்து வந்தான். புரோகிதன் நோயுற்றதால், வெற்றி பொருந்திய மன்னன் அபயன் மன்றுக்குத் தன் மகனை அனுப்பினன்.

## வேறு

30. [32] மேல[33]மச்சேந்தியபுராணக்கதையைமேலேட்டி (௩0)
னூலமைத்தங்கடையாளநுவற்சி செய்துபடியாமல்
ஞாலமுற்றுஞ்சிவதானக்கதைதாதைநவின்றதற்குட்
கோலமுற்றகுறையென்று குமரனது படித்தானே

மேல மச்சேந்திய புராணக்
கதையை, மேலேட்டில்
நூல் அமைத்து அங்கு அடையாள
நுவற்சி செய்து படியாமல்,
ஞாலமுற்றும் சிவதானக் கதை
தாதை நவின்ற அதற்குள்,
கோலம் உற்ற குறையென்று
குமரனது படித்தானே.

பொருள்: அவைக்கு வந்த ஆசிரியன் மகன், மேற்கூறிய மச்சேந்திய புராணக்கதையினை, மேலேட்டில் நூல் அமைத்து அதனைப்படியாமல் அதற்கு அடையாளமிட்டான். அதற்குப் பதிலாக உலகனைத்தும் பயன்பெறும் சிவகதையினை நோக்கினன். அதில் இடம் பெற்ற குறையொன்று உண்டு எனப் படித்தான்.

31. [34] படித்த பொழுதிருசெவியும் பாட்டுதவுஞ் சுவையமுதங் (௩க)
குடிக்குமிருநாவாகிக் குடிகொண்டதெனக் கேட்டு
முடித்ததலை நேர்கம்பித்து முகமலர்ந்துமயிர்ப்புறங்கள்
பொடித்துளமுங்கனிந்துருகிப்புளக மெறிந்துரைசெய்வான்.

படித்தபொழுது இரு செவியும்,
பாட்டுதவும் சுவை அமுதம்
குடிக்கும் இருநாவாகிக்,
குடிகொண்டது எனக் கேட்டு,
முடித்ததலை நேர் கம்பித்து,
முகம் மலர்ந்து, மயிர்ப் புறங்கள்,
பொடித்து, உளமும் கனிந்து உருகிப்,
புளகம் எறிந்து உரை செய்வான்.

---

*32. பு.பொ.வை.தே. பதி. அரவணிந்த தென்கயிலை யென்றபாடல். 33. மச்ச கேசுரக்கதையை. பா.வே 34 வேந்தனுக்குமனங்குளிர்ந்து என்ற பாடல்.*

பொருள் : குமரன்படித்தபொழுது, பாட்டின் சுவையமுதை; இரு செவிகளையும் நாவாகக் கொண்டு மன்னன் பருகினன். அதனை நன்கு சுவைத்துப் பருகியதால், உணர்ச்மேலிட்டு முடி அணிந்த தலை நேராக நிமிர்ந்து நிற்கப் பரவச நிலையடைந்தனன். முகம்மலர்ச்சி பெற மயிர்கூச்செறிய உள மகிழ்ச்சியால் கனிவுபெற நெகிழ்வுற்று, உடல் அனைத்தும் இனிய உணர்வு பரவக் கூறுவான்.

32. [35] செய்தவத்தின் வடகயிலைத்தன்னினுமித்தென்கயிலை (௩௨)
ஐயனுக்குப்பதியானவருங்காதை சொல்லாமற்
பொய்தனைத் தான் பொருளாக்கும்புரோகிதன்பானீமகவாய்க்
கைதவத்தாலிப்பிபெறுங்கதிர்த்தரளம் போல்வாயே

செய்தவத்தின் வடகயிலைத் தன்னினும்
இத்தென் கயிலை
ஐயனுக்குப் பதியான அரும்
காதை சொல்லாமல்,
பொய்தனைத்தான் பொருளாக்கும்
புரோகிதன்பால் நீ மகவாய்க்
கைதவத்தால், இப்பி பெறும்
கதிர்த் தரளம் போல்வாயே,

பொருள்: சான்றோர்கள் தவம் செய்யும் வடகயிலையிலும் பார்க்க இத் தென்கயிலை; எங்கள் தலைவன் சிவனுக்கு உகந்த சிறப்புமிக்க இடம், அதன் அரிய கதையினைக் கூறாமல், பொய்மையே பொருளெனக் கொண்டு அதனைக் கூறும் புரோகிதனிடம் நீ மகனாகப் பிறந்தனை. உன் தந்தை முன்செய்த பெருந்தவத்தின் பயனாக, இப்பியில் பிறந்த முத்துப்போல, அவன் குடியை நலஞ் செய்தனை.

33. [36]வாயிருந்துசதுமறைநூல்வளங்குலவுஞ்சீவனியும் (௩௩)
பேயிருந்த[37]காட்டிருந்து பெருந்துயரந் தீத்தருளும்
வேயிருந்தமணியரசர் விடுகிரணமுடியிருக்கு
[38]மாயிருந்தவன்பானீயவதரித்தாயரனருளால்.

வாயிருந்து சதுமறை நூல்
வளம் குலவும்[0] சீவனியும்,
போயிருந்த காட்டிருந்து
பெரும் துயரம் தீர்த்தருளும்,
வேயிருந்த மணி; அரசர்
விடுகிரண முடியிருக்கும்,
மா இருந்தவன்பால், நீ
அவதரித்தாய், அரன் அருளால்.

35 பு.பொ. வை. தே. ப. ஆதவனைக்கண்ட என்ற பாடல் பா.வே. 36 வாயிருந்த சதுர்மறையின் வழக்குதவும் 37 காட்டிருந்தும் 38 ஆயிலவவன்பானீயும்

பொருள்: நான்கு வேதங்களையும் முறைமையின் ஓதி, அவ்வழி நிற்கும் சான்றோர் வாயிலிருந்து வரும் நன் மொழிகளே நல்வாழ்வு தரும் மந்திரங்களாகும். (° சஞ்சீவிமந்திரம் ) இவை பேய்கள் வாழும் காட்டகத்திருந்தாலும் நல்வாழ்வினைத் தரும். துன்பத்தினை நீக்கி இன்பம் பயக்கும். மூங்கிலிடையிருந்து பெறப்படும் முத்து; அரசர் முடியிருந்து ஒளிவிட்டு அழகு செய்யும். அதுபோல் உன் தந்தை பெருந்தவத்தினைச் செய்ததன் பயனாய், சிவனின் பேரருளால் அவனுக்கு மகனாகப் பிறந்தனை.

34. [39] அரவணிந்த தென்கயிலை[40]யமரேசன் கதைநீயுங் (௩ச[1])
கரவணிந்து மொழியாமற்கட்டுரைசெய்யெமக்கென்று
*பரவணியாயு[41]யிர்க்குத்தம் பண்டிதநீ[42]யெனவனைத்துந்
[43]திரவணையுமிட்டிருத்திச் செவிதாழ்த்தான் மனு வேந்தன்.

அரவணிந்த தென்கயிலை
அமரேசன் கதை, நீயும்,
கரவணிந்து மொழியாமல்
கட்டுரை செய் எமக்கென்று,
பரவணியாய், உயிர்க்குத் தம்
பண்டித நீ என அனைத்தும்,
திரவணையும் இட்டிருத்திச்
செவி தாழ்த்தான் மனு வேந்தன்.

பொருள்: பாம்பினை அணியாகப் பூண்ட தென்கயிலைப் பெருமானின் கதையினைப், பொய்புனைந்து கூறாமல் எனக்குப்பகர்வாய். என்மரபு வந்தோர்க்கும் நீயே ஆசிரியன். உயிர்க்கு நலஞ் செய்யும் நல்ல பண்டிதன் - எமக்குரியவன் எனக் கூறிய மன்னன், அனைத்து நலன்களையும் அவனுக்கு வளங்கி, சிறப்புமிக்க நல்லிருக் கையுமிட்டிருத்தி அவன் கூறும் கருத்துக்கட்டுச் செவி மடுத்ததனன்.

* பரவணி= மரம்பரை

35. [44] வேந்தனுக்குமனங்குளிர்ந்துவியப்புவரவேதியன்மச் (௩ரு)
சேந்தியமாம்[45] புராணமது தெரிந்துரைப்பத்திறல் [46]வேந்தன்
காந்தமுங்கூரூசியும் போற்கருத்துற்றானவன்செவிக்கிப்
போந்தவமுதிதுவல்லாற் புறத்தமுதம்பொருந்தாதே.

வேந்தனுக்கு மனம் குளிர்ந்து
வியப்புவர, வேதியன் மச்
சேந்தியமாம் புராணமது தெரிந்து
உரைப்பத், திறல் வேந்தன்
காந்தமும் கூர் ஊசியும்போல்
கருத்துற்றான், அவன் செவிக்கிப்
போந்த அமுது இதுவல்லால்
புறத்தமுதம் பொருந்தாதே.

பா.வே. 39 பு.பொ.வை. தே. பதி 30ம் பாடலாக இடம் பெற. 34ம் பாடலாக வந்தரசன் மந்திரியை என்றபாடல் இடம் பெற்றள்ளது. 40 அமலேசன் 41 உயிர்க்குதவும் 42 என விளம்பி. 43 திரவணம் 44 பு.பொ.வை. தே. பதிப்பு நிறுத்துமமைச்சனுள்தானும் என்ற பாடல் 45 புராணக்கதை, 46 திறலரசன்

பொருள்: வேதியன்; மன்னனுக்கு உளம்மகிழ்ந்து வியப்படையும் படி, மச்சேந்தியமாம் புராணத்தினை நன்றாக விளக்கி யுரைத்தனன். அதனால் வலிமையும் பெருமையுங் கொண்ட மன்னன் காந்தத்தால் ஈர்க்கப்பட்ட கூர்மை பொருந்திய ஊசிபோல் மனமொன்றிய உணர்வு வரப் பெற்றான். அவனது செவிகட்டு ஏற்றுக் கொள்ளத்தக்க இனிய அமுதம் இதுவாகவே இருந்தது. புறத்தில் அமைந்த எவ்வகைப்பட்ட இனிய அமுதமும் அவனுக்குப் பொருந்தாததாகவேயிருந்தது.

36. [47&48] ஆதபனைக்கண்டவிருளதுபோலவஞ்ஞானஞ் (௩சா)
சேதமுறுமனத்தரசன் றெண்கயிலைப்பெருமான்மேற்
காதலினால்மந்திரியைக் கருத்துருகியழைத்தருளி
யேதமிலாத்திரிகோணமிறைஞ்சுதும் போயினி தென்றான்

ஆதபனைக் கண்ட இருளது போல,
அஞ்ஞானம்
சேதமுறு மனத்தரசன், தென்கயிலை
பெருமான் மேல்,
காதலினால், மந்திரியைக் கருத்துருகி
அழைத்து அருளி,
ஏதமிலாத் திரி கோணம், இறைஞ்சுதும்
போய் இனி தென்றான்.

பொருள் : புராணநூற்கதையைக் கேட்டதனால், சூரியனைக் கண்ட இருள்நீங்கியது போல் அறியாமை நீங்கிய அரசன்; தென்கைலையில் எழுந்தருளி இருக்கும் சிவன் மேல் காதல் கொண்டனன். அதனால் தன் அமைச்சனை அன்புடன் அழைத்து, குற்றம் குறை அற்ற திரிகோணமலை நாதரை வணங்குதற்குச் செல்வோம் என்றனன்.

37. [49] என்றதிருமொழிகேட்டமந்திரியுமிதுமிகவு (௩எ)
[50] நன்றென்றுமனுவேந்தனாடுமரசும்படையுந்
துன்றுபுதல்வருக்களித்துத் தொகுதிபலவுந்நிறுத்தி
யன்றுமரக்கலம்புகுவானலைகடனீர்க்கரைவந்தான்

என்ற திருமொழி கேட்ட,
மந்திரியும் இது மிகவும்
நன்றென்று, மனு வேந்தன்
நாடும் அரசும் படையும்
துன்று புதல்வருக்கு அளித்துத்,
தொகுதி பலவும் நிறுத்தி,
அன்று மரக்கலம் புகுவான்,
அலைகடல் நீர்க்கரை வந்தான்.

---

பா.வே. 47+48 ஆதவன் பா.வே. பு.பொ.வை. தே 49 விடுத்தவறுபதமுடைத்தாய் என்றபாடல் 50 நன்றெனலும் என்ற பாடல்

பொருள்: மன்னனின் நன்மொழிகேட்ட மந்திரி இது மிகவும் நன்றெனக் கூறினன். மனுவேந்தன் தன் நாட்டினையும் அரச பொறுப்பினையும் படையினையும் தன் மக்களிடமளித்து, அரசு இயற்றுதற்குரிய நெறிமுறைகளையும் முறைப்படி வகுத்தனன். அன்றே மரக்கலத்தில் புறப்படக் கருதி, அலை வீசும் பெருநீர்ப் பரப்புக் கொண்ட கடற்கரை வந்தான்.

38. [51] வந்தரசன் மந்திரியை வருகெனலுமவனும்போ
யந்தவரன்றிரிகோணத்தாலயத்திற்கனேகசிலை
சுந்தரவாரிக்கரையிற்றொகுத்துமரக்கலத்தேற்றிச்
[52] சிந்துவின்பாற்போந்துதன்பின் செல்வாரை நிறுவித்தான்

வந்த அரசன் மந்திரியை
வருகெனலும், அவனும் போய்,
அந்த அரன் திரிகோணத்து,
ஆலயத்திற்கு அனேகசிலை,
சுந்தர வாரிக் கரையில் தொகுத்து,
மரக்கலத்து ஏற்றிச்,
சிந்துவின்பால் போந்து தன்பின்,
செல்வாரை நிறுவித்தான்.

பொருள்: கலம் ஏறக்கடற்கரைக்குவந்த அரசன், மந்திரியை வருகவென அழைத்தனன். அவ்வழைப்பினையேற்ற மந்திரியும் திரிகோணமலைக் கோயிலுக்கு- எண்ணிறந்த தெய்வப் படிமங்களை எடுத்து வந்து, அழகிய துறையில் நின்ற மரக்கலத்தில் ஏற்றினன். பின்கடலிடத்து நின்ற மரக்கலத்துக்குச் சென்று தன்பின் வரவேண்டியவர்களையும் நெறிப்படுத்தினான்.

39. [53] நிறுத்துமமைச்சனுந்தானுநெடியமரக்கலத்தேறிப் (௩௯)
புறத்துமகத்துஞ்சேனைப்பரிசனங்கள் புடைசூழல்
செறித்தகரையும் மனமுந்திமிலிடைப்பூங்காவனத்துட்
குறித்தமலன்பதநோக்கிக் குவித்த[54]கரத்தினிதிருந்தான்.

நிறுத்தும் அமைச்சனும் தானும்,
நெடிய மரக்கலத்து ஏறிப்,
புறத்தும் அகத்தும் சேனைப்
பரிசனங்கள் புடை சூழல்,
செறித்த கரையும் மனமும்,
[0] திமிலிடைப் பூங்கா வனத்துள்,
குறித்த அமலன் பத நோக்கிக்,
குவித்த கரத்தின் இனிதிருந்தான்.

0 திமில் = வேங்கைமரம்.

---

பா.வே. 51 பு.பொ.வை. கலனோடத்திரையோடும் என்ற பாடல் பா.வே. 52 சிந்து வின்பால் விரைந் தேகச் செய்வாரை பு.பொ.வை. பதி 53 நின்றிருந்த கலம் விடுத்து என்ற பாடல் 54 கரத்துடனிருந்தான்

பொருள். அனைத்தையும் நெறிப்படுத்திய அமைச்சனுடன் அரசன் தானும் பெரிய மரக்கலத்தில் ஏறினான். அவன் புறத்தும் - அகத்தும் படை வீரரும் பணிபுரிவோருஞ்சூழ்ந்திருந்தனர். அவ்வண்ணம் இருந்த மன்னன்; திருமலையின் நீண்ட கடற்கரையினையும் அங்கு இடங்கொண்ட திருமலையின் அடிவாரத்தினையும், திருமலைமேல் வேங்கை மரங்கள் நிறைந்த பூஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் மலநீக்கஞ் செய்யும் சிவனின் திருவடிகளையும், உள்ளத்தில் எண்ணிக் கூப்பிய கையுடன் இனிய இன்ப உணர்வு மேலிட இந்தனன்.

40. [55]திருந்துவடகயிலையின் முன்சேடன் மணிப்படம் விரித்துப் (ச$^1$0)
[56] பொருந்தியபின்னாசைபின்னும் பூண்டலைநீர்ப்புறம் வழியாய்
விரிந்தகதிர்த்தென்கயிலைமிசை நோக்கி வருவதென
வருந்தருணப்பாய் விரித்தங்கலங்குகலம்பலவிடுத்தார்.

திருந்து வடகயிலையின் முன், சேடன்
மணிப்படம் விரித்துப்
பொருந்தியபின், ஆசை பின்னும்
பூண்ட அலைநீர்ப் புறம்வழியாய்
விரித்த கதிர் தென்கயிலைமிசை
நோக் கி வருவதென
வருந்தருணப் பாய்விரித்தங் கலங்கு
கலம்பல விடுத்தார்.

பொருள்:சிவநெறிச் செல்வனான ஆதிசேடன்; பெருமை மிகு வடகயிலை யினை, நாகமணிகள் பொருந்திய தன்படங்களை விரித்து வலம் வந்து வணங்கித் தன்னிடந் சேர்ந்தபின்பும், இறைவனிடம் கொண்ட அவா பின்னும் மீதூரக்கடல் வழியாய்த் தென்கைலையினை நோக்கி வருவது போல் மன்னனும் அவன் அமைச்சனும் மற்றும் பரிவாரங்களும், கடல்வழி ; புதுமை மிகு நெடிய பாய்கள் விரித்த கலங்களில் அணி வகுத்து நீண்ட வரிசையில் வந்தனர்.

41. [57] விடுத்தவறு பத முடைத்தாய் மென் கமல மீதோடி (ச$^1$க)
வெடுத்த விசைக்காமரங்களிசைத்துப் பாய்தலைக்கொளலா
னெடுத்த முடித் தென்கயிலை நிமலர் பதமலர் தேடித்
தொடுத்தெழுந்த வளியினம் போற்றொடரு மரக்கலங்க ளெல்லாம்

விடுத்த அறுபதம் உடைத்தாய்,
மென்கமலம் மீதொடி,
எடுத்த விசைக் காமரங்கள்,
இசைத்துப் பாய்தலைக் கொளலால்,
நெடுத்த முடித் தென்கயிலை,
நிமலர் பத மலர் தேடித்,
தொடுத் தெழுந்த வளியினம் போல்,
தொடரும் மரக்கலங்கள் எல்லாம்.

---

பு.பொ.வை. 55 நீர்தாங்கு பகீரதி என்ற பாடல் 56 பொருந்தியபேராசையின்னும் பாடல். பா.வே. பு. பொ. வை. பதி 57 தவப்பேறும் நன்பேறும் என்ற பாடல்

பொருள்: அறுகாற்சிறுபறவைகளான வண்டினங்கள் மென்மைவாய்ந்த கமல மலரினை நாடித் தேன்பருக இசை மிளிற்றி விரைந்து வருவதுபோல் , கடலிடை மரக்கலங்கள் பாய்வித்துத் திருமலை நோக்கி வந்தன. ஓங்கி நெடுத்த தென்கயிலையில் எழுந்தருளியிருக்கும் சிவனின் பாதமலர் தேடி வரும் இக்காட்சி, மலரில் தேனுண்ணத் தொடர்ந் தெழுந்த வண்டினம் போலிருந்தது.

42 . [58] கலனோடத்திரை யோடுங்கடலோட்டங்கரைகண்டு (ச[1]உ)
நிலனோடுந் திசை யோடு நிலவெறிக்குங்குடை வேந்தன்
புலனோடு விழி மலர்ந்து பூ தேசன் றென் கயிலைத்
தலனோடு மனந் தொடரத்தனது கரங்கூப்பி நின்றான்.

கலன் ஓடத் திரை ஓடும், கடல் ஓட்டம்
கரை கண்டு ,
நிலன் ஓடும் திசை யோடும், நிவவுஎறிக்கும்
குடை வேந்தன்,
புலனோடு விழி மலர்ந்து, பூதேசன்
தென் கயிலைத்,
தலனோடு மனம் தொடரத், தனது கரம்
கூப்பி நின்றான்.

பொருள்: கடலிடத்துத் திரை வீசியோட அத்திரையின் மேல் மரக்கலங்கள் ஓடின. அவை கடலைக்கடந்து ஓடிக்கரை காண விரைந்தன,இப்பரந்த நிலத்தினைத் திக்கனைத்தும் புகழ் பரப்பித் தன் சந்திரவட்டக் குடையின் கீழ் தண்ணிழல் பரப்பி ஆளும் வேந்தன் தன் ஐம்புலன்களும் ஒருமைப்பாடடைந்து அன்பருளால் மலர்ச்சி பெறத் தென்கயிலைத் தலத்தில் எழுந்தருளியிருக்குஞ் சிவனையும் தென்கயிலைத், தலத்தினையும் சிந்தையில் இருத்தி இருகைகளையும் கூப்பி நின்றனன்.

43. நின்றிருந்தகலன் விடுத்து நெடியகரைப் புறத்திறங்கிக் (ச[1]ங)
குன்றிருந்தபுயம் புளகித் தெதிரிறைஞ்சிக் கூறுவா
னன்றிருந்தீர் வடகயிலைத் தென்கயியலை யடி யேன்மு
னின்றிருந்தீரென்னுளத்திலிருந்தவருநீர் தாமோ,

நின்றிருந்த கலன்விடுத்து நெடிய
கரைப் புறத்து இறங்கிக்,
குன்றிருந்த புயம் புளகித் தெதிர்
இறைஞ்சிக் கூறுவான்,
நன்று இருந்தீர் வடகயிலைத்
தென்கயிலை அடியேன் முன்,
இன்று இருந்தீர் என்னுள்ளத்தில்
இருந்தவரு நீர்தாமோ.

---

பு.பொ.வை.தே. பதி 58 மானிருக்குமிடத்தொடு என்றபாடல்

பொருள்: மன்னன் தன்பரிவாரஞ்சூழவந்த மரக்கலம்விட்டு, நீண்ட கடற்கரைப்புறத்தே இறங்கினன். தன்குண்று போன்ற தோள்கள் பூரிப்படைய இறைவன் திருவடிவினைக் கண்டு, எதிர்நின்று வணங்கிப் பணிந்தனன். அவ்வணம் வணங்கிய மன்னன்; எம்பெருமானே நன்றிருந்தீர். வடகயிலையிலும் தென்கயிலையிலும் எழுந்தருளியிருக்கும் வடிவினை ஒருங்கே காண அடியவனாகிய என்முன் நின்றிருந்தீர். என் உள்ளத்தில் இருந்தவர் நீர்தாமோ எனப் போற்றினான்.

44. [59] நீர்தாங்கு பகீரதியுநிலந்தாங்குவிடதரமுங் (ச[1]ச[1])
கூர்ததாங்குமிளம்பிறையுங்குடிதாங்கிமுடிதாங்கி
வார்தாங்குமுலைத்தரளவடந்தாங்குமுமையொருபாற்
சீர்தாங்குந் தென்கயிலைத்திருப்பதியென்றவப்பேறே

நீர்தாங்கு பகீரதியு, நிலந்தாங்கு
விட தரமும்,
கூர்தாங்கும் இளம் பிறையும்,
குடிதாங்கி முடிதாங்கி,
வார்தாங்கும் முலைத்தரள வடந்தாங்கும்
உமை ஒருபால்
சீர்தாங்கும் தென்கயிலைத் திருப்பதி
என் தவப்பேறே

பொருள்: நீர்ப்பெருக்கினையுடைய கங்கையினைச் சடையில் தரித்து, நிலம் தாங்கும் ஆதிசேடனை நல்லணியாகக் கொண்டு, ஒளிமிக்க மூன்றாம்பிறைச் சந்திரனைத் தலையில் சூடி, அனைத்துயிர்களையுங் காப்பாற்றுதற்காக ஓங்கார ஒலியெழுப்பும் உடுக்கினைக் கையில் ஏந்தி அருள்செய்யும் எம் தலைவனே ! மார்புக் கச்சம் தாங்கி நிற்கும் திருத்தனங்கள், முத்துவடங்களைத் தாங்கி நிற்க உமையை ஒருபாகமாகக் கொண்டு - திருவருள் சீர்பெற்றோங்க, இத் தென்கயிலையில் எழுந்தருளி இருந்தீர். இத்திருக் கோலத்தினைத் தென்கயிலையில் கண்டு தொழுவது நான் செய்த பெருந்தவத்தின் பெறே என மன்னன் போற்றிப் பரவினான்.

45. [60] தவப்பேறு நன்பேறுந்[61] தன்பேறுமில்லாதே (ச[1]ரு)
னவப்பேறாய்த்திரியாமலறிந்து தொழப்பெறும் பேறே
சிவப்பேறுமிதழமுதச்சிறப்பேறு மொழிவனிதை
யுவப்பேறுந்திருமேனியுடன் பிரியாப்பெருமானே

தவப்பேறு நன்பேறும் தன்பேறும்
இல்லாதேன்,
அவப்பேறாய்த் திரியாமல், அறிந்து
தொழப் பெறும் பேறே,
[0]சிவப்பேறும் இதழ் அமுதச் சிறப்பேறும்
மொழி வனிதை,
உவப்பேறும் திருமேனியுடன்
பிரியாப் பெருமானே.

---

பு.பொ.வை.தே. பதி 59 புரிதவளப் பொறிமேனி என்றபாடல் 60 செய்தவத்தினெறி என்றபாடல் 61 தன்பேறு

பொருள்: சிவப்பேற்றினையும் - சிவந்த நிறம் கொண்ட இனிய இதழ் அமுதச் சுவைப்பேற்றினையும், சிறப்புறப் பெற்ற; இனிய அருள் மொழி பகரும் உமையின் இன்பத் திருவடிவுடன் என்றும் இணைவுபெற்றுப் பிரியாதிருப்பவனே! எம்தலைவா!! நற்றவமும்- நற்செயலும் - நல்நோக்கும் இல்லாதவன் நான். அத்தகைய யான் அவமே திரியாமல், பயனற்ற வாழ்வினை வாழாமல் உன்னை அறிந்து தொழப்பெற்றேன். அது யான் பெற்ற பெறற்கரும் பேறாகும். எனப்பணிந்து போற்றினான் மன்னவன்.

*0 சிவப்பேறும் = சிவனின் அருள்வளமும்*
*சிவப்பு ஏறும் = செம்மை படரும்*

46. [62] *மானிருக்குமிடத்தோடும் வலத்தோடுங்கயிலையினீர்* (ச[1]சா)
*கூனிருக்குமதிமுடித்துக்குடியிருப்பதறியாம*
*லூனிருக்கவுயிரிருக்கவுரையிருக்கநாவிருக்க*
*யானிருக்கவின்றளவு மேத்தாமலிருந்தேனே*

*[0] மான் இருக்கும், இடத், தோடும்*
*வலத் தோடும், கயிலையில் நீர்;*
*கூனிருக்கும் மதி முடித்துக்*
*குடியிருப்பது அறியாமல்,*
*ஊன் இருக்க, உயிர் இருக்க,*
*உரை இருக்க நா இருக்க,*
*யான் இருக்க இன்றளவும்,*
*ஏத்தாமல் இருந்தேனே.*

பொருள்: ஆன்மாக்களைத்திருவருள் பாலித்துத் தாங்கும் இடக்கையோடும், உமையைத்தாங்கும் இடப்பக்கத்தோடும், அதனால் சிவசத்திவடிவாகி (அர்த்தனாரீசுவரர்) இடக்காதில் தோடுவிளங்கவும் -ஞான ஒளிபடர- மூன்றாம் பிறைச் சந்திரனை முடியில் தரித்துத் தென்கயிலையாகிய திருமலையில் நீ இருப்பதனை அறிந்து கொள்ளாமல் இருந்தேன். இந்த உடம்பும் உயிரும் என் பேச்சும் - அதனைப் பேசும் நாவும் இருந்தும், உன் திருப்புகழைப் போற்றிப் பகராமல் - வணங்காமல் இருந்தேனே. இதனால் யான் பெற்ற தொன்றுமில்லையே எனச் சிவனைப்போற்றி வணங்கினான் மன்னவன்.

*[0] மான் = இடக்கையில் தாங்கி நிற்கும்*
*உயிர்கள் ; மான் மூலம் விளக்கப்பட்டது*
*மான்= மான்நோக்கமுடைய உமை*
*மானிருக்குமிடத்தோடும் எனவும், மான் இருக்கும் இட தோடும் எனப் பொருள் கொள்ளப்பட்டது.*

---

*பு.பொ.வை.ப. 62 இருந்தபுகழ் திருமேனி என்ற பாடல்*

47. [63] தேனேயுநின்மலர்த்தாடெரிசித்தேனெனதுவினை (ச[1]எ)
தானே விட்டகன்றதெனத் தபதிமுகமது நோக்கி
வானேயுந்திருமலை மேன்மணிக்கோயிலியற்றுகென்று
கானேயுந்தாதகித்தார்க்காவலவனருள்புரிந்தான்.

> தேனேயும் நின்மலர்த்தாள் தெரிச்சித்தேன்,
> எனது வினை
> தானே விட்டகன்றது எனத்,
> [0]தபதிமுகம் அது நோக்கி,
> வானேயும் திருமாலை மேன், மணிக்கோயில்
> இயற்று கென்று,
> கானேயும் தாதகித்தார்க் காவலவன்
> அருள் புரிந்தான்,

பொருள்: தேனினையும்- மரகந்தப் பொடியினையுஞ் சொரியும், அன்றலார்த மலர்களால் புனையப்பட்ட மலர்மாலை அணிந்த மன்னவன்; சிவபெருமானே! தேனினும் மிக்க அன்பருள் சொரியும் உனது திருவடி மலர்களை வணங்கியதனால் எனது வினைகள் அனைத்தும் தானே விட்டகன்றனவெனப் போற்றி வணங்கினான். பின் சிற்பியின் முகத்தை நோக்கி; வானளாவி நிற்கும் இத்திருமலையிடத்தில் அழகுமிக்கமணிக்கோயில் ஒன்று கட்டுவாயாக எனப் பணித்தான்.

[0] தபதி = சிற்பி - தச்சன்

48 [64] புரித்தவளப்பொறிமேனிப்புண்டரிகம்பண்டுபிடித் (ச[1]அ)
துரித்தவற்குத்திருக்கோயிலுபானாதி தூபியுட
னிருத்தியருட்கயிலேசற்கியற்பூசைபுரிவித்துத்
திருத்தியபினாசமனஞ்செய்தமுது செய்திருந்தான்.

> [0] புரித்தவளப் பொறிமேனிப்
> புண்டரிகம், பண்டு பிடித்து,
> உரித்தவற்குத் திருக்கோயில்,
> உபானாதி தூபியுடன்,
> இருத்தி அருட் கயிலேசற்கு,
> இயற்பூசை புரிவித்துத்,
> திருத்தியபின் ஆசமனம் செய்து,
> அமுது செய்திருந்தான்.

பொருள்: முப்புரிநூலினை அணிந்து ஒளிமிக்க தாமரைமலர் போன்ற செம்மேனி கொண்டு, தாருகா வனத்து முனிவர்களால் ஏவப்பட்ட மதம் பொருந்திய யானையினைப் பிடித்து- அதன் தோலையுரித்து, போர்வையாகக்

பா.வே. 63 என்றனைய திருமேனி என்ற பாடல். பொ.வை.பதி 64 தொழுதுவர என்ற பாடல்

கொண்ட திருக்கயிலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு, ஆகம விதிப்படி; சித்திரவரி- பண்டிகை தூபி என்பன அமைவுறும்படி திருக் கோபுரத்தினைக் கட்டுவித்தான். அதன்பின் பூசனை முறையிற் செய்வித்து, நெறிதவறா முறையில், ஓம் ஆத்மத்துவ சிவதா, ஓம் நித்தியதத்துவ சிவதா, ஓம் சிவதத்துவாய சிவதா என்ற நிறை மொழிகளை ஓதி ஆன்மசுத்தி செய்து, அமுதினையுண்டிருந்தனன்.

[0] புரிதவளப் பொறிமேனிப் புண்டரிகம் = சிவனுக்கும் - யானைக்கும் பொதுவாய் அமைந்த தொடர் இருபொருள்பட வந்தது. பொருளும் அவ்வண்ணமே கூறப்பட்டது.

49. [65] செய்தவத்தினெறிதருமச்சேந்தியபுராணமது (சᏗகூ)
கைதவத்தாற்கோயிலெங்கு மெழுதியநற்[66]கதைமிகுந்து
மெய்தவத்தாற்பொற்றகட்டின் மேய்ந் தெழுதியாய்ந்தமையா
லையனுக்கும் பொற்கோயிலாகவுஞ்செய்தினிதிருந்தான்.

செய் தவத்தின் நெறிதரு
மச்சேந்திய புராணமது,
கை தவத்தால் கோயில் எங்கும்,
எழுதிய நற்கதை மிகுந்து,
மெய் தவத்தால் பொற்றகட்டின்,
மேய்ந்து எழுதி ஆய்ந்தமையால்,
ஐயனுக்கும் பொற் கோயில்
ஆகவும் செய்து இனிதிருந்தான்

பொருள்: நலம்மிக்க தவத்தின் பயன் அனைத்தையும் தரவல்ல மச்சேந்திய புராணக் கதையினை மன்னவன் திருக்கோயிலின் சுவரெங்கும் எழுதுவித்தனன். இது பெறற்கரும் பேறாக அமைந்த தெனலாம். அத்தோடு அந்த நலம் மிக்க கதையினைப் பொற்றகட்டிலும் எழுதிவித்தான். அதனைச் சிவனுக்குரிய அழகிய கோயில் போன்று ஆக்கம் பெறச் செய்தான்.

50. [67] இருந்தபுகழ்மனுவேந்தனினத்தொடு மந்திரியோடும் (ருO)
விரிந்த கடற்றரங்கமெறிவெற்பினடிக்கீழ்வந்து
தெரிந்ததொருகிணறுகண்டு செம்பொனதற்கிடைகுவித்துப்
புரிந்த பெருங்காவல் செய்துபுனிதனுக்குப் பொன்னென்றான்.

இருந்தபுகழ் மனுவேந்தன்,
இனத்தோடும் மந்திரியோடும்,
விரிந்தகடல் தரங்கம்எறி
வெற்பின் அடிக்கீழ் வந்து,
தெரிந்தது ஒரு கிணறு கண்டு,
செம்பொன் அதற்கு இடைகுவித்து,
புரிந்த பெரும் காவல் செய்து
புனிதனுக்குப் பொன் என்றான்

பா.வே. 65 இருந்தவஞ்செய் என்றபாடல் 66 அந்தக்கதை பா.வே. 67 அடைந்தவந்தாள் என்ற பாடல்.

பொருள் : பெரும்புகழுக்குரியவனான மனுநீதி கண்ட சோழன்; தன் சுற்றஞ்சூழ -மந்திரியோடு பரந்த கடல் அலை மோதும் திரு மலையில் நின்றும் இறங்கி அதன் அடிவாரத்திற்கு வந்தனன். அவ்விடத்தில் ஓர்கிணறு தோண்டி அதனிடையே பசும் பொற்குவியலை இட்டான். அதனைக் காவல் செய்வதற்கு ஒரு பூதத்தினையும் நிறுத்தினான். இப்பொன் சிவனுக்குரியதாகு மென ஆணையிட்டு உறுதி செய்தான்.

51 என்றனைய திருமேனியிராம தேவனுமகிழ்ந்து (ருக)
நின்றரன் பால் விடை கொண்டு நெடிய கடல்கடந்தேகக்
கன்றமைத்தகரத்திருமால்கமலனிமையோர் முனிவர்
குன்றமுற்றபெருமானைக்குரைகழற்றாடொழுதனரே

என்றனைய திருமேனி
இராமதேவனும் மகிழ்ந்து,
நின்றரன்பால் விடைகொண்டு,
நெடியகடல் கடந்தேகக்,
கன்றமைத்த கரத் திருமால், கமலன்
இமையோர், முனிவர்,
குன்றம் உற்ற பெருமானைக்,
குரைகழல் தாள் தொழுதனரே

பொருள்: இப்பொன்; தென்கயிலைப் பெருமானுக்குரிய தெனக் கூறிய மன்னன் இராமதேவன், உளம் மகிழ்ந்து நின்று தென்கயிலை இறைவனிடம் விடைபெற்றுப் பெருங் கடலினைக் கடந்து சென்றனன். அவன் சென்ற பின்; பசுக்கன்றாய் வந்த அசுரனைக் கையில் பிடித்து, விளாமரமாய் நின்ற அசுரனுக் கெறிந்து, இருவரையும் மாய்த்த திருமாலும்; தாமரைமலர் உறையும் பிரமனும், தேவர்களும், முனிவர்களும், தென்கயிலையில் எழுந்தருளியிருக்கும் ஓங்கார நாதத்தினை மிழிற்றும் வீரக்கழல் பூண்ட திருவடியினைத் தொழுது போற்றினர். *ஏ தேற்றேகாரம்.

52. [69] தொழுதுவரப்பரமன்னனிருகவசஞ்சூழ்ந்தெதிர்ந்த (ருஉ)
பொழுது கவசமுமகற்றிப்புகுதுமவனையுந்துரந்து
பழுதில்கலிமறுமன்னன்படியாளுந்திகிரியென
வெழுதரியபரிதிகிழக்கெழுந்தபொழுதெனவிருந்தான்

தொழுதுவரப் பரமன்னன் இருகவசம்
சூழ்ந்து எதிர்ந்த
பொழுது கவசமும் அகற்றிப் புகுதும்
அவனையும் துரந்து
பழுதில்கலி மறு மன்னன்
படியாளும் திகிரியென
எழுதரிய பரிதி கிழக்கு எழுந்த பொழுது
என இருந்தான்.

---

பு.பொ.வை.தே. பதி 68 எய்தியரற்காலயமும் என்ற பாடல். பா.வே. 69 பு.பொ.வை.தே.பதி அது மொழிதன் என்றபாடல்

பொருள்: திருமலை தொழுது மீண்ட நிலமாளும் வேந்தன் தன்நாடு புகுந்த பொழுது, இருபக்கத்திலும் தன்னைச் சூழ்ந்தெதிர் கொண்ட காவலரை விலக்கித் தன்அரச அங்கியினையும் நீக்கித், தன்னை எதிர் கொண்ட நெறிதவறாதாளும் மகனையும் வாழ்த்தி, அவனை நாட்டினை ஆளப்பணித்து, ஓவியத்தில் எழுதக்கரிய கதிரவன்; கிழக்கில் தோன்றுவதுபோல் இருந்தனன்.

53. [70] இருந்தவஞ் செய்மனுவேந்தனியற்றியபொற்[71]கிணற்றருகே (ருங)
பொருந்தியதாதகியொன்றுபொலிந்தவன்புரிதவத்தாற்
றிருந்தியபூதமுமதன்கீழ்ச்சிறந்ததந்தச்செம்பியர்கோ
னருந்தனயற்கரசளித்துப்பரகதிபோயடைந்தானே

இருந்தவம் செய் மனுவேந்தன்
இயற்றிய பொற் கிணற்றருகே,
பொருந்திய தாதகி ஒன்று பொலிந்தது;
அவன்புரி தவத்தால்,
திருந்திய பூதமும் அதன்கீழ்ச் சிறந்தது,
அந்தச் செம்பியர் கோன்;
அருந் தனயற்கு அரசளித்து,
பரகதி போய் அடைந்தானே.

பொருள்: பெருந்தவம் செய்த மனுவேந்தன் அமைத்த பொன் புதைத்த கிணற்றின் அருகே அதனைப் பேணிக்காக்கும் ஒரு பூதம் தோன்றியது. மன்னனின் தவப்பயனால் அக்கிணற்றில் அமைந்த பொற்குவியலைக் காத்து நின்றது. சோழவேந்தனும் தன் அரசுரிமையைத் தன் மகனுக்கு உரியதாக்கிச் சிவகதி சென்றடைந்தான்.

54. [72] அடைந்த வந்நாளிலங்கைவலமாக வந்தவொருமறையோன் (ருச[1])
கிடந்த செம்பொற்கிணற்றருகேதுயிலுதலுங்கிளர்பூத
நடந்தவனை யெழுப்பியுங்கணாவலந்தீவுக்கரசன்
கடந்துகடனீந்திமுன்னிக்கயிலைமலைக்கெய்தினான்

அடைந்த அந்நாள், இலங்கை வலமாக
வந்த ஒரு மறையோன்
கிடந்த செம்பொற் கிணற்றருகே
துயிலுதலும், கிளர் பூதம்
நடந்தவனை எழுப்பி, உங்கள்
நாவலம் தீவுக்கு அரசன்,
கடந்து கடல் நீந்தி முன்னிக்
கயிலை மலைக்கு எய்தினான்.

பொருள்: மன்னன் சிவகதி அடைந்த அந்நாளில், திருத்தல யாத்திரையின்பொருட்டு ஓர் அந்தணன் இலங்கையை வலம் வந்தனன். வந்தவன் செம்பொன் புதைத்திருந்த கிணற்றின் அருகே ஓரிரவு துயின்றனன். அவ்வேளையில் பொன் புதையலைக் காவல் செய்திருந்த பூதம் தோன்றி அம்மறையோன் துயில் கொள்ளும் இடத்திற்கு நடந்து சென்று அவனை எழுப்பியது. அவனை நோக்கி உங்கள் நாவலந்தீவினை ஆண்ட மன்னன் ஒருவன் கடல் கடந்து வந்து இத் தென் கயிலையினை அடைந்தனன், எனக் கூறியது

---

பா.வே. 70 பு.பொ.வை.தே.பதி வந்துகடல்கடந்து என்றபாடல்
71 இரணியந்சேர்கிணற்றருகே 72. தானேதன்றனக்கிணை என்ற பாடல்

55 [73] எய்தியரற்காலய முமியற்றிய வர்க்கனேகம் பொன் (ருரு)
பெய்து கிணற்றிடை மூடிப் பெருங்காவ லெனை நிறுத்தி
வையகத்திற் போந்து கலி வருதலின் முத்தி யிலடைந்தா
னையவவன் புதல் வனுக்கீதறைக வெனவறைந்தது வே.

எய்தி அரற்கு ஆலயமும் இயற்றி,
அவர்க்கு அனேகம் பொன்,
பெய்து கிணற்றிடை மூடிப்,
பெருங்காவல் எனை நிறுத்தி,
வையகத்தில் போந்து கலிவருதலின்,
முத்தியில் அடைந்தான்,
ஐய ! அவன் புதல்வனுக்கு, ஈது
அறைகவென அறைந்ததுவே.

பொருள்:வந்த மன்னவன் தென்கயிலைப் பெருமானுக்குக் கோயில் கட்டினன். அப்பெருமானுக்கு எண்ணிறந்த பொன்களைக் கிணற்றிலிட்டு அதனை மூடி என்னைக் காவலுக்குவைத் தான். அதன்பின் தன் நாடு சென்று கலியுகம் வருதலை யறிந்து சிவப்பேறுற்றான்.இச் செய்தியினைச் சோழ மன்னன் மகனுக்குச் பகர்வாயாக என்றது பூதம்.

56 [74] அது மொழிதன் செவிப்படலு மருமறை யோன்றனி யெழுந்து (ருசா)
முதுகடலுங் கடந்தந்த முடி மன்னன் றனிக்குமரன்
விதிமுறை செய் குளக் கோட்டனுடன் மறை யோன் விளம்பவவன்
பதியரசுதன் மகற்குப் பாலித்திப்பால் வந்தான்.

அது மொழி தன் செவிப்படலும்,
அருமறை யோன் தனி எழுந்து,
முது கடலும் கடந்து, அந்த
முடி மன்னன் தனிக் குமரன்,
விதிமுறை செய் குளக் கோட்டானுடன்
மறையோன் விளம்ப, அவன்
பதி அரசு தன்மகற்குப் பாலித்து,
இப்பால் வந்தான்.

பொருள்:பூதம் கூறிய செய்தியினைக் கேட்ட அந்தணன் விரைந் தெழுந்து பழைமைமிக்க பெருங்கடலினைக் கடந்து, மனுநீதிகண்ட சோழனின் நாடு சென்றனன். அங்கு நீதிவழுவா நெறி முறையில் வாழும் சோழனின் பெருமைமிகு மகன் குளக் கோட்டானுக்குப் பூதங் கூறிய செய்தியினைப் பகர்ந்தனன் . அதனைச் செவி மடுத்த குளக் கோட்டான் தன்நாட்டு அரச பொறுப்பினைத் தன் மகனுக்குக் கொடுத்து ,இந்நாட்டிக்கு வந்தான் .

---

பா.வே.எ.பு.பொ.வை.தே.ப 73 தேனிலவும் பொன்னிதழ் என்றபாடல்
பா.வே.எ.பு.பொ.வை.தே.ப 74 உற்றவனைப் பெரும்பூதம் என்ற பாடல்

57. [75]வந்து கடல் கடந்துகரை மருங்கணுகித் தென்கயிலை (ருஎ)
யிந்து முடிப் பெருமானைச் சந்நிதி [76]செய் தெதிர் தொழுது,
புந்தி நெகிழ்ந்துருகிமயிர்ப்புறம் பொடிப்பவிருவிழியுஞ்
சிந்துபுனல் பெரிதொழுகச் சிவாயநம வெனப்பணிந்தான்.

வந்து கடல் கடந்து கரை மருங்கு
அணுகித், தென் கயிலை
இந்து முடிப் பெருமானைச்,
சந்நிதி செய்து எதிர் தொழுது,
புந்தி நெகிழ்ந்து உருகி, மயிற்புறம்
பொட்டிப்ப, இரு விழியும்
சிந்து புனல் பெரிது ஒழுகச்,
சிவாய நமவெனப் பணிந்தான்.

பொருள்: குளக் கோட்டு மன்னன் கடல் கடந்து வந்து கரை சேர்ந்தான். வந்த மன்னன், தென்கயிலைப் பெருமான் திருக்கோயிலை அணுகிச் சந்திரனை முடியில் தரித்த சிவனைத் தொழுதான். புத்தி நெகிழ்ந்து, உன்னம் நைந்துருகி மயிற்கூச் செறிய இருகண்களிலிருந்தும் கண்ணீர் சிந்திப் பெருகச்,சிவாய நம வென்று போற்றிப் பரவினான்.

58. [77] தானேதன்றனக்கிணையாந்தனி முதல்வியருகிருப்பத் (ருஅ)
தேனேயுமலர் வனஞ்சூழ் தென்கயிலை மீதிருக்கு
[78]மானேயயுங் கரத்தா னேவல்வினையின் குறும்பறுப்ப
யானேயமுடனிறைஞ்ச வெத்தவஞ் செய்தே னேன்றான்.

தானே தன்தனக்கு இணையாம்
தனிமுதல்வி அருகிருப்பத்,
தேனேயும் மலர்வனம் சூழ்
தென்கயிலை மீதிருக்கும்,
மானேயும் கரத்தானே,வல்வினையின்
குறும்பறுப்ப,
யான் நேயமுடன் இறைஞ்ச,
எத்தவம் செய்தேன் என்றான்.

பொருள்· தானே தனக்கு இணையாக ஒப்பும் மிக்கும் இல்லாத தலைவி தன்னருகிருப்பத் ,தேன் சொரியும் மலர்கள் நிறைந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்திருக்கும் தென்கயிலை மீது எழுந்தருளியிருக்கும் ஆன்மாக்களைத் தாங்கி நிற்கும், திருக்கையினையுடைய வனே ! என் கொடிய வினையின்; குளப்பச் செயலினை வேரோடு கல்லி எடுக்கும் உன்திருவடிகளை மிக்க அன்புடன் வணங்க, என்ன தவஞ் செய்தேன் எனப்பகர்ந்தான்.

---

பா.வே.பா.பு.பொ.வை.பதி 75 வேந்தனனும் மந்தியும் போய் என்ற பாடல்
76 சென்று .பு.பொ.வை.பதி. 77 தெரிசித்துக் கலியுகநாதன் என்ற பாடல்
78 மானேயும் கரத்தவனை என்றபாடல்.

59. [79] தேனிலவும் பொன்னிதழ்ச் செழு மலரும் பகீரதியுங் (ருகூ)
கூனிலவு முடித்த சடைக் கோணமலைப் பெருமான்றன்
வானுலகுமண்ணுலகும் வந்து தொழத்திருப்பணிக
டானுலகிற் செயநினைந்து தமனியப் பொற்கிணறுற்றான்.

தேன் நிலவும் பொன்னிதழ்ச்
செழு மலரும் பகீரதியும்,
கூன் நிலவு, முடித்த சடைக்
கோணமலைப் பெருமான் தன்,
வானுலகும் மண்ணுலகும்
வந்து தொழத் திருப்பணிகள்,
தான் உலகில் செய நினைந்து,
தமனியப் பொற் கிணறுற்றான்.

பொருள்: இனிய இன்பந்தரும் தேன் சொரியும் அழகிய பொன் போன்ற இதழ்களையுடைய கொன்றை மலரும் , கங்கையும் பிறைச் சந்திரனும் ஒருங்கமைய முடித்த சடையினைக் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவனின் திருக்கோயிலினை; வானுலகத்தவரும் - மண்ணுலகத்தவரும் இப்பூமியிடத்த மைந்த திருமலைக்கு வந்து வணங்கும் வண்ணம் அழகுறஅமைக்க எண்ணினன். அந்நோக்குடன் அருநிதியம் உள்ள பொன் பொதித்த கிணற்றினை மன்னன் குளக்கோட்டன் வந்தணைந்தான்.

60. [80] உற்றவனைப் பெரும்பூத மெதிரிறைஞ்சியுனைப்பயந்த (சா0)
கொற்றவன் செம்பேடுங் குறியுமிது வெனக் கொடுப்ப
வுற்றதன மெடுத்ததனுக்கிரு மடங்கே யொளிவிடும் பொன்
முற்றுதிருப்பணிக்களித்தாறன்கரத்தான்முடி வேந்தன்

உற்றவனைப் பெரும் பூதம்,
எதிர் இறைஞ்சி, உனைப்பயந்த
கொற்றவன்,செம்பேடும்
குறியும் இதுவெனக் கொடுப்ப,
உற்றதனம் எடுத்து , அதனுக்கு
இருமடங்கே ஒளிவிடும் பொன்
முற்று திரும்பணிக்கு அளித்தான்,
தன்கரடத்தால் முடிவேந்தன்.

பொருள்:தென்கயிலை வந்தடைந்து பொகிணற்றருகே சென்ற மன்னனைப் பூதம் எதிர் சென்று வணங்கியது.பின் அவனை நோக்கி உன்னைப் பெற்ற மன்னவன் எழுதி வைத்த செப்பேடும் - அடையாளமும் இதுவெனக் கொடுத்தது. அதனைப் பெற்ற மன்னன் அங்கிருந்த நிதியத்தினை எடுத்து அதனைப் போல் இருபங்கு பொன்னினைத் திருக்கோயிலின் பணிக்குக் கொடுத்தான்.

---

பா.வே.பு.பொ.வை.தே.பதி 79 என்றுமகாமண்டபவமும் என்றபாடல்
பா.வே.பு.பொ.வை.தே.பதி 80 உரைசெய்தபடிதவறாது என்றபாடல்

61. [81]வேந்தனு மந்திரியும் போய் விமலர் திருப்பணிக்காக (சாக)
வாய்ந்த மலை முறித்த சிலை வரும் படிக்கு வழி வேண்டிக்
காய்ந்த வரக்கன் றலைநாளுடைத்த கடல் விழியடைத்துப்
போந்தபடி கட்டி யதன் புறமேறித் தெரிசித்தான்.

வேந்தனும் மந்திரியும் போய்,
விமலர் திருப்பணிக்காக
வாய்ந்த மலை முறித்த சிலை
வரும்படிக்கு வழிவேண்டிக்,
காய்ந்த அரக்கன் தலை நாளுடைத்த,
கடல்வழி அடைத்துப்,
போந்தபடி கட்டி அதன்புறம்
ஏறித் தெரிசித்தான்.

பொருள்: மன்னன் குளக்கோட்டனும் மந்திரியும் சென்று சிவ பெருமானை நோக்கி, இறைவனே !. திருப்பணிசெய்வதற்கு - திருக்கோயிலிடஞ் செல்வதற்கு வழி வேண்டும். அன்று வில்லாக் கொண்ட மேரு மலையிடத்து அதற்க்குரிய வழியினை விடவேண்டும். என வேண்டினன். பின் சினம் மிக்க அரக்கனான இராவணன் தலையினை உடைத்த கடல் வழியினை அடைத்துக் கட்டி, அதன் வழி சென்று தென்கயிலைத் திருக் கோயிலை வணங்கினான்.

62. [82+83] தெரிசித்தான் கலியுக நாட் சென்ற மறை வானவரென் (சாஉ)
றொருசித்தம் பாசுபதமறையோரையுரவோனும்
[84]பரசித்தான் வணங்கிப்பகர் கிரணாகமத்தின் வழி
புரசித்தம் பூண்டவரைப் பூசனை செய்துய்மினென்றான்.

தெரிசித்தான் கலியுக நாள் சென்ற
மறை வானர் என்று
ஒருசித்தம் பாசுபத மறையோரை
உரவோனும்,
பரசித்தான், வணங்கிப் பகர்
கிரணாகமத்தின் வழி ,
புரசித்தம் பூண்டவரைப் பூசணை
செய்து உய்மின் என்றான்

பொருள்:கலியுகம் பிறந்த பின்பு வ்ந்த நல் லோரையில் ஆகம நெறிப்படி இறைவனைப் பூசனை செய்து வழிபட்டான்.மன்னன் குளக்கோட்டன். பின் மன ஒடுக்கம் பெற்ற பாசுபத நெறிநிற்கும் அந்தணர்க்குத் தானங்கள் வளங்கிப் பூசித்தான். ஆகமம் கூறும் நெறி நின்று, எங்கும் நிறைந்து, பரந்த அருள்புரியும் சிவனைப் பூசணை செய்து உய்மின்களென்றான்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தேப 81 தன்னாண்மைக்கு என்றபாடல்
பா.வே 82 பு.பொ.வை.தேபதி.செய்தபடிக்காயிரம் பொன் என்ற பாடல்
பா.வே.83 தெரிசித்து; 84 அரிச்சித்துமுகங்காணா - 84 பரசித்தானே

63. [85]என்று மகா மண்டபமு மெழின் முதன்மை மண்டபமுங் (சாங)
குன்றனைய கோபுரங் கோவில் பலசாலைகளு
நன்றி பெற வமைத்தருளி நாயகிக்குப் பொற் கோயில்
[86]வென்றிபெறச் சமைக்க வேண்டு மெனவுரை செய்தான்.

என்று மகா மண்டபமு எழில்
முதன்மை மண்டபமும்
குன்றனைய கோபுரமும், கோவில்
பல சாலைகளும்,
நன்றிபெற அமைத் அருளி,
நாயகிக்கும் பொற்கோயில்
வென்றி பெறச் சமைக்க வேண்டும்,
என உரை செய்தான்.

பொருள்:இறைவன் திருவருளைப் பெறுமின் என்று கூறிய மன்னன் ; திருக் கோயிலுக்கு மகா மண்டபமும், முன் மண்டபமும் அமைத்தனன்.அத்தோடு மலைபோல் அகன்று உயர்ந்த கோபுரத்தினையும், தெய்வங்கட்குக் கோயில்களையும் அற்றாற்கும் அலர்ந்தார்க்கும் அன்ன சாலைகளையும், அந்தணர் மறை யோதும் சாலைகளையும், அவற்றிற்குச் செல்லும் நல்ல பாதைகளையும் நலம்பெற அமைத்தனன். உலகநாயகியாகிய உமையம்மைக்கும் அழகிய கோயில் ஒன்றினைத்ச் சிறப்புற அமைத்தல் வேண்டுமெனப் பகர்ந்தனன்.

64. [87]உரை செய்த படிதவறா [88]துயர்ந்தபடி குலத்தவர் பொன் (சாச[1])
வரை செய்த தெனக் கோயின் மண்டபமுஞ் சூழ் மதில் செய்தார்
பிரை செய்தவமுத மொழிப்பிடி யன்ன மெனனடையைத்
தரை செய்தபுண்ணியம் போற்றாபித்தான் மனு வேந்தன்.

உரை செய்தபடி தவறாது, உயர்ந்த
படி, குலத்தவர், பொன்
வரை செய்த தெனக், கோயில்
மண்டபமும் சூழ்மதில் செய்தார்,
பிரை செய்த அமுதமொழிப்
பிடியன்ன மென்னடையைத்,
தரை செய்த புண்ணியம் போல்
தாபித்தான் மனுவேந்தன்.

பொருள்:மன்னன் கூறியவற்றைத் தவறாது ஏற்ற உயர்குடி மக்கள் ; பொன்னால் செய்யப்பட்டது போன்ற அழகுடன் உமைக்குரிய கோயிலை; மண்டபமும் சுற்றுப்புற மதிலும் அமையக் கட்டினர்.அத்திருக்கோயிலிடத்தில் அன்னத்தின் சாயலையும் இளம் பெண்யானையின் நடடை யினையும் இனிய அமுத மொழியினையுங் கொண்ட உமையம்மையின் திருவடி வினை, இந்நிலஞ் செய்த புண்ணியமெனக் கருதும்படி மன்னன் மனுவேந்தன் திருநிலைப்படுத்தினான்.

பா.வே.85 தொடைபுனை வேதியர் என்ற பாடல். பா.வே.86 வென்றி தரும் படி
பா.வேபு.பொ.வை. தே.ப 87 தரும நெறிதவறாத என்ற பாடல் 88 உயர்ந்த மதிகுலத்தவர்.

65. [89]தன்னாண்மைக்குவளமையிலாத்னி வேந்தன் வடகயிலை (சாரு)
மின்னோங்கு குவடெனத்தென் கயிலைக்கு வேண்டுமெனப்
பொன்னாருஞ் சிகரமும் பொற்கோபுரமும் பொருத்தியதற்
பன்னாகங்கவித்ததென மவுலிகளும் பல செய்தான்.

தன் ஆண்மைக்கு உவமை இலாத்
தனி வேந்தன், வடகயிலை
மின் ஒங்கு குவடென்னத்,தென்
கயிலைக்கு வேண்டு மெனப்,
பொன்னாரும் சிகரமும் பொற்
கோபுரமும் பொருத்தி, அதற்
பன்னாகம் கவித்தது என, மவுலிகளும்
பல செய்தான்.

பொருள்:தன்மேலாண்மைக்கு ஒப்புக்கூறுதற் கியலாத பெருமை மிக்க மன்னன்; வடகயிலையில் அமைந்த பொன்மயமான அழகு மிக்க குவடு போல் தென்கயிலைத் திருக் கோயிலுக்கும் வேண்டு மென எண்ணினன். அவ்வெண்ணத்தின் பயனாய், அழகு மிக்க பொன் மயமான கோபுரத்தினையும் அதற்குரிய கோபுர உச்சியினையும் அமைத்தனன்.அதற்க்குப் பல நாகமணிகள் பதித்தது போல் முடிகளையும் அமைவு பெறச் செய்தனன்.

66. [90]செய்தபடிக்காயிரம் பொன் றெண்கயிலை மீதிருக்கு (சாசா)
மையர்தமக்களித்தருளியலங்கார நிலங்கொண்டு
வையக மெண்ணயில் சூழ மணிக் கோயிலியற்றியதிற்
றுய்யதிரு மாயனையுந் தாபித்தான் றொடைமார்பன்.

செய்தபடிக்கு, ஆயிரம் பொன்
தென்கயிலை மீமிருக்கும்
ஐயர்தமக்கு அளித்தருளி,அலங்கார
நிலம் கொண்டு,
வையகம் எண்எயில் சூழ, மணிக்
கோயில் இயற்றி, அதில்
உய்ய திரு மாயனையும்,
தாபித்தான் தொடை மார்பன்.

பொருள்:வெற்றி மாலைகள் புனைந்த திருவணைந்த பார்புடைய வேந்தன், தென் கயிலையில் கோயில் கொண்ட இறைவனுக்கு ஆயிரம் பொன்களை அளித்து , வளஞ்சிறந்த நிலத்தினை இறைவன் கோயிலுக்கு உரித்தாக அறக் கொடை செய்தனன் . பேருலகு என எண்ணும்படி அழகு மிக்க கோயிலினை அமைத்தனன். அதில் உலகு உய்யும் படி காத்தற் கடவுளான திருமாலின் திருவடிவினைத் திரு நிலைப்படுத்தினான்.

---

89 அமையாததரங்க மெறிந்தார்ப்ப என்ற பாடல் பா.வே.பு.பொ.வை.தே.பதி. 90 அமையனைய திருத் தோனி என்ற பாடல

67. [91]தொடைபுனைவேதியர் முதலாந்தொல்லோர்க்குமெல்லோக்கும் (சாஎ)
படியில் வினைப்பயந்தீர்க்கும்படி பாவநாச மென்னுந்
தட மது கண்டதற்கருகேதனி முதல் வனீராடு
மிடமருவு மண்ட பமுமியற்று வித்தான் சேய்தருமன்

தொடை புனை வேதியர் முதலாம்
தொல்லோர்க்கும் எல்லோர்க்கும்,
படியில் வினைப் பயந்தீர்க்கும்படி,
பாவ நாசம் என்னும்,
தட மது கண்டதற்கு அருகே
தனி முதல்வன் நீராடும்
இடமருவு மண்டபமும் இயற்று வித்தான்
சேய்தருமன்.

பொருள்:மாலை அணிந்த அந்தணர் முதலாகப் பழைமையும் பெருமையும் மிக்க அனைவர்க்கும், பூமியில் வினைப்பயனைத் தீர்க்கும் பொருட்டுப் பாவநாசம் என்னும் புனித நீர்த்தடத்தினை உண்டாக்கினான் மன்னன் குளக்கோட்டன். அதன் பக்கலில் ஒப்பற்ற சிவன் நீராடுதற்குரிய இடத்தில் அழகிய மண்டபமும் கட்டுவித்தான். அதன் மூலம் அறச் செயல்கட்கு ஆக்கஞ் செய்தான்.

68. [92]தரும நெறிதவறாததனிவேந்தன் சிவ பூசைக் (சாஅ)
கரும நெறிபுரிவதற்குக் கலைமறையோர் தவமுனிவர்
வருபவர் வந்தாறுதற்குந்தனக் கொருமாளிகையாகப்
பெருமதியந்தவழ்மாடகூடங்கள் பெரிதமைத்தான்.

தரும நெறி தவறாத தனிவேந்தன்
சிவ பூசைக்
கரும நெறி புரிவதற்குக் கலை
மறையோர் தவமுனிவர்
வருபவர் வந்து ஆறுதற்கும் தனக்கு
ஒரு மாளிகையாகப்
பெருமதியம் தவழ் மாடகூடங்கள்
பெரிது அமைத்தான்.

பொருள் : அருமறை குறித்த அருநெறிதவறாத ஒப்பற்ற பெருமைக்குரிய மன்னன்; சிவபூசைக்காகவும் அருட்பணிகள் செய்வதற்காகவும், அந்தணர்கள் முனிவர்கள் - பிற அடியவர்கள் போன்ற பெருமக்கள் வந்து ஆறுதல் பெறுவதற்காகவும் - தனக்காகவும் சந்திரன் தவழும் வானிடத்து அளாவி நிற்கும் பெருமாளிகை யொன்றினை அமைத்தான். அதில் மாடங்களும் கூடங்களும் அமைவுறும்படி செய்வித்தனன்.

---

பா.வே. பு.பொ.வை.தே.91 இனிதிருக்கும் அந்நாளில் என்ற பாடல்.
பா.வே பு.பொ.வை.தே.92 வித்தகஞ் சேர்மலர்ச் சோலை என்ற பாடல்.

69. [93] அமையாததரங்கமெழுந்தார்ப்பரிக்குங்குணகடலுஞ் (சாகூ)
சமையாவக்குடகடலுஞ்சந்திப்பப் பந்தித்துச்-
சிமையாதிமலைநிறுத்துஞ் செய்கை யென மதிணிறுத்தி
யெமையாளுங்கயிலாயற் கெவ்வகையுஞ் செய்தமைத்தான்

அமையாத தரங்கம் எழுந்து
ஆர்ப்பரிக்கும் குணகடலும்,
சமையா அக்குடகலும் சந்திப்பப்
பந்திந்துச்,
சிமையாதி மலை நிறுத்தும்
செய்கையென, மதில் நிறுத்தி,
எமையாளும் கயிலாயற்கு, எவ்வகையும்
செய்து அமைத்தான்.

பொருள் : மன்னன்;அலைகள் நிலை கொள்ளாது எழுந்து ஒலி செய்யும் கிழக்குக் கடலும் - அதற்கு ஒப்பான மேற்குக் கடலும் ஒன்றை யொன்று சந்தித்துப் பிணைப்புற்ற இடத்தில், உயர்ந்த குவடுகளைக் கொண்ட மலைகள் போன்று அமைவு பெறும்படி மதில்கள் கட்டினான். கயிலையில் எழுந்தருளியிருக்கும் எம் தலைவனான சிவபெருமானுக்கும் ஆகம விதிக் கியைவுறும்படி பல்வகைத் திருப்பணிகளையுஞ் செய்தனன்.

70. [94] அமையனையதிருத்தோளினணங்கு பிடி யன்னநடை (எ0)
யுமையையுமை நாயகனை யொளி பெறவே தொழுதேத்திச்
சமையமுதலாகிய மெய்ச் சைவநெறிதனைத் தோங்கச்
சிமையமுடித் தென் கயிலைத்திருமலைக்கீழினிதிருந்தான்.

[0] அமையனைய திருத் தோளின்
அணங்குபிடி அன்ன நடை
உமையை, உமை நாயகனை,
ஒளி பெறவே தொழுது, ஏத்திச்,
சமைய முதலாகிய மெய்ச்சைவ
நெறி தளைத்து ஓங்கச்,
சிமைய முடித்த தென் கயிலைத்
திருமலைக்கீழ் இனிது இருந்தான்.

பொருள் : இளமூங்கில் போன்ற அழகுடைய தோள்களையும், பெண்யானையின் நடையினையும் அன்னத்தின் சாயலினையும் கொண்ட மலைமகளான உமையை, அவளைப் பங்காகக் கொண்ட நாயகனான சிவனை, அறிவொளி பெற்றுத் தொழுது வணங்கினான் மன்னவன். அவ்வண்ணம் வணங்கியவன்; சைவசமயம் உயர்வுடன் செழுமை பெற்று, விளங்க, அழகிய குவடுகள் அமைந்த தென்கயிலையாகிய திருமலையின் கீழ் மகிழ்வுடன் இருந்தனன்.

[0] அமை = மூங்கில்

---

பா.வே. பா.பு. பெபோ. வை. தே.ப.தி. 93. மயிலினங்கள் நடமாட என்ற பாடல்
94 உரைத்தவளக் கோடு என்ற பாடல்

71. [95] இனிதிருக்கு மந்நாளிலென்நாளுந்திருப்பணிக (எக)
ணனி திருத்தித் தென்கயிலை நன்னகருந்திருத்துவித்துக்
கனிதிருத்து மலர்க்காவுங் கடிதிருத்து மணிமறுகும்
பனிதிருத்தும் புனல்வாவி பஃறடமும் பயில்வித்தான்

இனிதிருக்கும் அந்நாளில்
எந்நாளும் திருப்பணிகள்
நனிதிருத்தித் தென்கயிலை நன் நகரும்
திருத்து வித்துக்
கனிதிருத்தும் மலர்க் காவும்
கடிதிருத்து மணிமறுகும்
பனிதிருத்தும் புனல் வாவிப்
பஃறடமும் பயில்வித்தான்.

பொருள் : மன்னன் அங்கிருந்த காலத்தில், எல்லா நாட்க ளிலும் கோயில் திருப்பணிகளைச் செப்பமுறச் செய்வித்தான். தென்கயிலையாகிய திருமலை நகரினையும் நன்முறையில் அமைத்து கனிகள் தரும் சோலைகளையும் - மலர் வனங்களையும் சீர்பெற அமைத்து அவற்றிடையே அழகிய முற்றங்களும் இடம் பெறச் செய்து, குளிர்ந்த நீர்த் தடங்களையும் அமைவுறச் செய்வித்தான்.

72. [96] வித்தகஞ்சேர் மலர்ச் சோலை மென்பீலிபசுங்கலப (எஉ)
மத்தர்திருக்கோபுரந்தன்னணித்தலையின்மணிச்சூடு
வைத்தகயிலையின் வாயில் வாய்ப்புரிசை வயிறிரண்டு
பைத்தலையகடல் சிறகாய்ப் பயிலுமலைமயில் போலும்,

வித்தகம் சேர் மலர்ச் சோலை,
மேன் பீலி பசும் கலபம்,
அத்தர் திருக் கோபுரந்தன்,
அணித்தலையின் மணிச்சூடு,
வைத்த கயிலையின் வாயில் வாய்ப்
புரிசை, வயிறு இரண்டு
பைத்தலைய கடல் சிறகாய்ப்,
பயிலும்மலை மயில்போலும்.

பொருள் : எமது தலைவனான சிவன்; எழுந்தருளியிருக்கும் திருக்கயிலையாகிய திருமலையில், செம்மைசான்ற மலர்ச் சோலைகளும் மென்மை பொருந்திய தளைகளையுடைய சந்தன மரங்களும் நிறைந்துள்ளன. இத்தகைய - சூழலில் அமைந்திருக்கும் கோயிற் கோபுரத்தின் அழகிய ஒளிமிக்க மணிகள் மேலும் அழகு செய்கின்றன. இதன் வாயிற் புறம் அமைந்திருக்கும் கடலானது திரைகளை வீசி ஒலி எழுப்புகின்றன. அவை மலையின் அடிவாரத்தை வந்து தழுவிச் செல்கின்றன. இக் காட்சி அழகிய மயிலுக்கு இருபக்கலிலும் அமைந்த சிறகுகள் விரிந்து அசைவது போலிருந்தது.

---

95 உரைவிரிந்த மறை யோர் என்ய பாடல் பா.வே.பா. பு.பொ.வை.தே.பதி 96 ஆமேயவிலைதேடி என்ற பாடல்

73. [97]மயிலினங்கணடமாடமது கரங்கள் சுருதிசெய்யக் (எங)
குயிலினங்கள் குழலிசைப்பக்குளிர்[98] கவரிக முகசைப்பப்
பயிலிதழிபொன்னளிக்கப் பசுஞ்சோலைதலைதுளக்கக்
கயிலைமலை யிருந்தவளங்கவிதையுரைக்கடங்குமதோ.

மயில் இனங்கள் நடமாட,
மதுகரங்கள் சுருதி செய்யக்,
குயில் இனங்கள் குழல் இசைப்பக்,
குளிர்கவரி கமுகசைப்பப்,
பயில் இதழி பொன் அளிக்கப்,
பசும்சோலை தலை துளக்கக்,
கயிலைமலை இருந்த வளம்,
கவிதை உரைக்கு அடங்குமதோ.

பொருள் : மயில் இனங்கள் நடமாட, தேன்வண்டுகள் இசைமிளிற்ற, குயில் இனங்கள் குழல் இசைப்ப, அழகிய தண்ணளி பொருந்திய கவரி மான்கள் அவற்றைக் கண்டு - கேட்டு மகிழ்ந்து கமுகமரங்களை அசைக்க, அவற்றின் மலர்கள் இதழ்கள் விரிந்து பொன்போன்ற மரகந்தப் பொடிகளைச் சிந்த, பசுமை நிறைந்த சோலைகள் தம்தலைகளை அசைத்து மகிழ்ந்தன. இத்தகைய பெருமை மிகு திருக்கயிலையின் வளத்தினைக் கவிதையில் அடங்கிக் கூறுதல் இயலுமோ. இயலாதே.

74. [99] உரைத்தவளக்கோடுலவ வோதுகளுத்தாரமுற (எச)
நிரைத்துலவுகாலசைப்பநிறை யேரிதனியுலவ
வரைக்கலை வெண்மதியுடையாரனு தினமுமிருப்பமறை
இரைத்த பெருங் கோணைநகரிடப மெனவுரை செயலாம்.

உரைத்த வளக் கோடுலவ,
ஒது களுத்தாரமுற,
நிரைத்ததுலவு ^x^கால் அசைப்ப,
நிறை ஏரிதனியுலவ,
^0^வரைக்கலை, வெண்மதி உடையார்,
அனுதினமும் இருப்ப, மறை
இரைத்த பெருங் கோணைநகர்,
இடபமென உரை செயலாம்.

பொருள்: மேற்கூறிய வளங்களுடன், முத்துக்களை ஈன்று புறந்தரும் வெண்சங்குகள் கடலில் கரையிடத்துலவ, இன்னிசைகள் செய்யும் அவற்றின் கழுத்துக்களில் உள்ள வரை கோடுகள் அணிகள் போல் அழகு செய்யக் , கடல் நங்கை தன் அலைகளாகிய தன் காலினை அசைத்தாள். நீர் நிறைந்த தடங்கள் சூழ்ந்த இடங்களில் கஸ்த்துாரி மான்கள் உலவி மகிழ, மலைச்சாரலில் தெளிந்த அறிவுடையோர் நாளெலாம் நீங்காதிருப்பார். அதனால் வேதம் ஓதும் ஒலி திருமலையிடத்துச் செறிந்து பரவியது. இத்தகைய சிறப்புக்கள் பொருந்திய திருமலை நகரினை, இறைவனைத் தாங்கி ஊரும் மறையாகிய இடபமெனக் கூறலாம்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 97 குடைத்தலையமலர். என்ற பாடல்
98 கரும்பச்சை; வை.தே.ாதி 99 செய்விதழ் செங்குவளை என்ற பாடல்

[x]கால்=இளந் தென்றல் காற்று; கடல் அலைகளைத் தழுவி வர
[0]வரைக்:கலை வெண்மதி உடையர்; என்ற
இத்தொடர் பலபொருள் பட நின்றது. ஒன்று;
பொருள் விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது.
அடுத்துக் கொள்ளத்தக்கன

கோடுகளை யுடைய மானைக் கையில் தாங்கி , ஒளிபொருந்திய
சந்திரனைச் சடையில் தாங்கிய இறைவன் என்றும்;
எண்ணற்ற கலைகட்கும் பிறப்பிடமான
வேதத்தால் போற்றப்படும் அனைத்தையும் உடையவரான,
அனைத்துக்கும் உடையவரான இறைவன் என்றும்;

மலை மகளையும் பேரறிவினையும் உடைய இறைவன் என்றும்;

வரையறையற்ற பேராற்றலையும் பேரறிவினையும் கொண்ட
இறைவன் என்றும் பொருள் பட நின்றது.

75 .[100]உரை விரிந்த மறை யோர்க ளோமவனன் முன்னிருத்தி (எரு)
நிரைவிரிந்தகனன் மீது நிறைத்த பல வாகுதியால்
விரை விரிந்த மலர்க்காவின் மீதெழுந்தபுகைப்படலங்
கரை விரிந்த கடலருந்தக்கனம் விரிந்த தெனலாமே

உரை விரிந்த மறையோர்கள்,
ஓமவனன் முன்னிருத்தி,
நிரை விரிந்த கனன்மீது,
நிறைத்த பல ஆகுதியால்,
விரை விரிந்த மலர்க் காவின்,
மீதெழுந்த புகைப்படலம்,
கரை விரிந்த கடல் அருந்தக்,
[0]கனம் விரிந்தது எனலாமே.

பொருள்: உள்பொருள் தெளிந்த அந்தணர்கள் ஓமகுண்டத்தினிடையே தீக்கடவுளைத் திருநிலைப் படுத்தினர்.திருநிலைப் படுத்தப்பட்ட அவ்வோமகுண்டத்தின் முன்னே அவர்களிருந்து, ஓமகுண்டத்தில் எழுந்த தீக்கடவுளுக்குப் பல் வகைப்பட்ட படையல்களை வேட்டல் செய்தனர்.அதனால் எழுந்த புகைப்படலமானது, மலர்ச் சோலைகள் நிறைந்த அத்திருமலையிடத்தில் எங்கும் பரந்து பரவியது.அவ்வண்ணம் பரந்த புகைப்படலத்தினைப் பரந்த கரையினையுடைய கடல் தன்னுட் கொண்டது. அதனால் அதன் இயல்பு; பெருமையும் சிறப்புறப் பெற்றுப் பெருகிய தெனலாம்

ஏ.தேற்றேகாரம்.

[0]"கனம் விரிந்தது எனலாம்" என்பதற்கு கனதி கொண்டது எனவும் பொருள் கொள்ளலாம்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி.100; இனமினமுன்செல்லும் என்றபாடல்

76. [101]ஆமேயவிலை தேடியண்ணாந்து பலகூடிக் (எசா)
காமேவு மலர்ப் புன்னைக்கடி நிழல்சூழந் நேரம்
பூமேவுமதி லொருவன் புனிதனுளனதனாலுங்
கோமேதகமாலுங் குருந்து மடவாரு மொக்கும்

ஆமேய இலை தேடி,
அண்ணாந்து பலகூடிக்,
காமேவும் மலர்ப்புன்னைக்
கடி நிழல் சூழ் அந்நேரம்
பூமேவும் அதில் ஒருவன்,
புனிதன் உளன், அதனாலுங்
கோமேதகம், ஆலும், குருநதும்
மடவாரும், ஒக்கும்.

பொருள்:பசு நிரைகள்; மேய் வதற்காகப் பச்சிலைகளைத்தேடி அண்ணார்ந்து நோக்கும், உயர்ந்த மரங்களையுடைய நறுமணம் மிக்க மலர்கள் நிறைந்த அவ்விடத்தில், புனிதனான இறைவன் எழுந்தருளியிருக்கின்றான்.அதனால் திருமலையானது; இரத்தினங்களில் கோமேதகம் போன்றும் மரங்களில் ஆலமரம் போன்றும் குருந்த மரம் போன்றும் மக்களில் இளங்கன்னியர் போன்றும் விளங்கியது.

77. [102]குடத்தலையமலர்க் கோங்கின் குளிர்தாதை யறுதாளா (எஎ)
லுடைத்த வளியினஞ் சோலை யூடெழுந்து திரிவதெல்லாங்
கடைத்தலை யோர்தமை நீக்கிக் [103]காவலர்கண்ணலர்ந்தவர் பால்
விடுத்த பலதூத ரெழும் விரைவெனவுமுரை செயலாம்

குடத்தலைய மலர்க் கோங்கின்
குளிர்தாதை அறுதானால்,
உடைத்த வளி இனம் சோலையூடு
எழுந்து திரிவதெல்லாம்,
கடைத்தலையோர் தமை நீக்கிக்
காவலர்கண் அலர்ந்தவர்பால்,
விடுத்த பல தூதரெழும், விரைவு
எனவும் உரை செயலாம்.

பொருள்:குடங்கள் போன்று வடிவமைந்துள்ள பூங்கொத்துக்களைக் கொண்ட கோங்கமரங்களில்; குளிர்ச்சி மிக்க மரகந்தங்களைச் சிந்தும் மலர்களில், தேன் உண்ணும் அறுகாற் சிறுபறவைகளான வண்டினங்கள், சோலையின் ஊடே எழுந்து பறந்து திரிகின்றன.இக்காட்சியானது இழிந்தவர் வந்து புகாது, கண்விழித்துக் காவல் காக்கும் காவல் தூதுவரின் செயலினை ஒத்திருந்த தென்று கூறலாம்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 101 பூங்கதிலி கரும்பினஞ் சூழ் என்ற பாடல்
பா.வே.பா.பு.102பொ.வை.தே.பதி.மந்திரிதன்முகம் என்ற பாடல் 103 தண்ணலர்ந்த

78. [104]செய்யவிதழ்ச் செங்குவளைச் சிறுதாளின் மீதுயர்ந்த (எஅ)
துய்யமலர்க்காயா விற் சூழ் தோன்றியலர் சொரி தேன்
பையரவின்றுயின் மாயன் பங்கயச் செங்கரமதனா
னெய் பொழியுந்தழல் வேள்விநிகர்க்கும் மலர்க்காவினமே.

செய்ய இதழ்ச் செங்குவளைச்
சிறுதாளின் மீதுயர்ந்த,
துய்ய மலர்க் காயாவில் சூழ்
தோன்றி அலர் சொரிதேன்,
பையரவின் துயில்மாயன் பங்கயச்
செங்கரம் அதனால்,
நெய்பொழியும் தழல் வேள்வி,
நிகர்க்கும் மலர்க் காவினமே.

பொருள்:குவளைச் செடிகளின் தண்டுகள்; மீதுயர்ந்த செம்மை நலம் மிக்க காயாமரத்தில் படர்ந்து சூழ, காந்தள் மலர்ந்து விளங்க, அவற்றிலிருந்து தேன் சொரியும்.இவ்வண்ணம் சோலைகளில் தேன் சொரிவது ஆயிரம் படங்களையுடைய ஆதிசேடனில் அறிதுயில் கொள்ளும் திருமால்; தீவளர்த்து வேள்வி செய்யும் ஓமகுண்டத்தில் நெய் சொரிவது போன்றிருந்தது.

79. [105 106]இனமின்முன்செலும்பறவையிருங்கானில்விழுந்தரற்றத் (எகூ)
தனதன வென்றளிபாடத்தமர மறுத்தலைத்தபடி
கனகமுடி மனு வேந்தன் கடற் சேனைப்பல குலமும்
வினவு மெதிர் மொழிபோல விரவு மிளம் பூங்காவே

இனமின்முன் செலும் பறவை,
இருங்கானில் விழுந்து அரற்றத்
தனதன என்று அளிபாடத்,
தமரம் மறுத்து அலைத்தபடி
கனகமுடி மனுவேந்தன்,
கடற் சேனைப் பலகுலமும்,
வினவும் எளிர் மொழிபோல,
விரவுமிளம் பூங்காவே.

பொருள்:தன் இனப்பறவைகளுக்கு முன்னே செல்லும் பறவை பெரிய காட்டிடத்து விழுந்து துன்பப்பட்டுக் குரல் எழுப்ப, இனமரங்கள் கொண்ட பூங்காவில் தனதன என்ற ஓசையினை எழுப்பி வண்டுகள் இசையினை மிழிற்ற, கடல் இவற்றை மறுப்பது போல் அலை வீசி ஒலி செய்தது. இந்நிழ்வு ; பொன்முடி அணிந்த மனுவேந்தனின் கடல் போன்ற படையினங்கள், தம்முள் வினவுவது போலவும் எதிர் மொழி பகர்வது போலவும் இருந்தது.

---

பா.வே.பா.பு.பொ.வை.அத.பதி. 104 வேந்தரகுகாவலிட என்ற பாடல்

80. [107] பூங்கதலிக்கரும்பினஞ் சூழ் பொன் மாடத்திழையவெயி (அ0)
[108] றாங்கிய பின் சிறகோதித்தலை மடங்கும் பெடையன்னம்
பாங்கிருந்த வெகின மணம் பாவித்த தென்றெண்ணி
மாங்கனியின் சாறெறிந்து மஞ்சள் விளையாடு மந்தி

பூங்கதலிக் கரும்பினம் சூழ்,
பொன்மாடத்து இழைய வெயில்,
தாங்கியபின் சிறகு ஓதித்,
தலை மடங்கும் பெடை அன்னம்,
பாங்கிருந்த எகினம், மணம்
பாவித்தது என்று எண்ணி,
மாங்கனியின் சாறு எறிந்து,
மஞ்சள் விளையாடு மந்தி

பொருள்:பூமலர்ந்த சோலையும், கனிநிறைந்த வாழையும்,கரும்பும் சூழ்ந்த அழகு மிக்க பொன்மயமான மாடத்தில், இளவெய்பில் இழைபரந்து ஒளி செய்கின்றது. அவ்வொளியில் பெடை அன்னம் சிறகினைக் கோதித்தலையினைத் தாழ்த்திக் கழுத்தை மடக்குகின்றது.இதனைக் கண்ட குரங்கு, பெடையன்னத்திற்கு அருகில் இருந்த அன்னச் சேவல்; இணை விளைச்சுச் செய்தது என்று எண்ணி , மாங்கனி சாறு பிழிந்து மங்கல நீர் தெளிப்பது போல் எறிந்து மஞ்சல் தூவி விளையாடும்.

81. [109] மந்திரியின் முகம் கோடாமலர்த முகவரசனிடப் (அக)
புந்தி மகிழ்கவிபாடிப் புகும் புலவ ரெனலாமால்
[110] முந்த மலர் முகந் தோற்றாமுது பலவிற் செல்லாது
கந்த மலர் முகங்காட்டுங் கமுகிலளி செல்வனவே.

மந்திரியின் முகம் கோடா
மலர்ந்த முக அரசனிடைப்,
புந்திமகிழ் கவிபாடிப் புகும்
புலவர் எனலாமால்,
முந்தமலர் முகம் தோற்றா
முது பலவில் செல்லாது,
கந்தமலர் முகம் காட்டும்
கமுகில், அளி செல்வனவே.

பொருள்:தனது அமைச்சனின் முகம் வாடது அரசு இயற்றும் மலர்ச்சி கொண்ட முகத்தினையுடைய அரசனிடம், அவன் மனமும் புத்தியும் மகிழும்படிக் கவிபாடி புலவர்கள் புகுவர். ஈயாத வஞ்சரிடம் அவர் எத்தகையவராய் இருப்பினும் செல்லார். அது போன்று; முத்திக்கனிந்து தன்முகம் மலர்ந்த கனிகளையுடைய பலாமரத்திற்கு வண்டுகள் சொல்லாது மணம்மிக்க பூக்களை மலர்ந்து தன்முகம் காட்டி நிற்கும் கமுக மரத்திற்கு வண்டுகள் சென்றன.

---

பா.வே.பா.பு.பொ.தேவை.பதிப்பு 105;காப்பிட்டலர்வாய்,என்ற பாடல்
106 இனமினமுன், தேவை.பதிப்பு 107 காட்டுங்கதலிக்கொழுங்கனி;என்ற பாடல் 108 தாங்கியபின்.109 நாடுங்குழக்கன்றினை என்ற பாடல்.110 முந்துமலர்.

82. [111]வேந்தருங்காவலிட வேண்டேமியாங்கமனென்றும் (அஉ)
தேய்ந்தவிளம்பிறை முடித்ததிருவடிக்காமலரென்றும்
வாய்ந்த குயிற் சின்னமுந்தன் மலர்ப்படையும் வைத்ததனுட்
போந்த பெருஞ் சோலை யெங்கும் [112]புகுந்து மதன் காப்பிடுவன்

வேந்தர் அருங் காவல் இடவேண்டேம்,
இயாம் காமன் என்றும்,
தேய்ந்த இளம்பிறை முடித்த
திருவடிக் காமலரென்றும்,
வாய்ந்த குயிற்சின்னமும், தன்மலர்ப்
படையும் வைத்தனுட்
போந்த பெருஞ் சோலை எங்கும்,
புகுந்து மதன் காப்பிடுவன்.

பொருள்: மன்னர்களின் அரியகாவல் எமக்கிட வேண்டாம்.நாம் இன்ப உணர்வுக்குரிய காதலர்கள். மூன்றாம் பிறைச் சந்திரனைச் சடையில் கொண்ட இறைவனின் திருவடிகளை வணங்கி அத்திருவடிகளைக் காதலித்திருக்கும் மலர்க்குலங்கள் நாம். நாம் வாழும் இச் சோலையிடத்து,என்றும் பொருந்தி வாழும் குயில்களைக் காமன் தன் சின்ன மாகக் கொண்டு, மலர்ப் படைகள் தாங்கிச் சோலைகள் அனைத்தும் புகுந்து காவலிட்டுள்ளான்.

## வேறு

83. [113]காப்பிட்டலர்வாயளியினங்கள்களிகொண்டசோகின்மலர்பாய (அங)
[114]மீப்பட்டன் மேற் பாய்ந்து வெடிக்கும் பலவின் சுளைத்தேனும்
பூப்பிட்டொழுகும் பசுந் தேனும் பொழிந்து பதைக்கும் வானரங்கள்
கூப்பிட்டயலார்க் குரைப்பவர் போற் குயிலு மயிலுங்குரல் காட்டும்

காப்பிட்ட அலர்வாய் அளியினங்கள்,
களிகொண்டு அசோகின் மலர்பாய,
மீப்பட்டன்ன மேற்பாய்ந்து, வெடிக்கும்
பலவின் சுளைத் தேனும்,
பூப்பிட்டொழுகும் பசுந் தேனும்
பொழிந்து பதைக்கும் வாரனங்கள்,
கூப்பிட்டு அயலார்க்கு உரைப்பவர் போல்,
குயிலும் மயிலும் குரல்காட்டும்.

பொருள்: தேன் மாந்தி மயங்கிய வண்டினங்கள் அம்மலர்களில் உறங்கிவிட, மாலை வந்ததும், மலர்கள் வண்டினங்களைத் தம்முள் அடக்கிக் கூம்பின .அதனால் அவை மலர்களிடைக் காப்பிட்டிருந்தன. காலையில் சூரிய ஒளிகண்டு

பா.வே. 111 வானுமிளிருமுடுவினமும் என்ற பாடல்.112 புரந்து
113விளங்குமினங்காவனம் என்ற பாடல். 114 மீப்பட்டழ்மேற்பாய்ந்ததென.

கூம்பிய மலர்கள் .விரிந்த பொழுது வண்டினங்கள் மகிழ்ச்சி கொண்டு அயலில் நின்ற அசோக மரங்களில் மலர்ந்த பூக்களில் பாய்ந்தன. பலாவில் இருந்த கனிந்த பழங்கள் வெட்டித்து விரிய அதனிடத்தில் மலர்களில் மிகுதிப்பட இருந்த தேன் சொரிகின்றது. அதனால் பலவின் சுளைத் தேனும் பூவின் பசுந்தேனும் ஒன்றாய்க் கலக்கின்றன. அதனை யுண்ட குரங்கினங்கள் களிமயக்கங்கொண்டு பதைக்கின்றன. வெறியாட்டு ஆடுகின்றன. இதனை அயலார்க்குக் கூறுவது போல் குயில்களும் மயில்களும் குரல் எழுப்புகின்றன.

84. [115]காட்டுங்கதலிக் கொழுங் கமுகின் கனியுங் மாங்கனியுங் (அச)
கோட்டின் பலவின் சுழைக்கனியுங் கூட்டிக்கறியின் கொடி வீழ்ந்து
நாட்டின் கரும்பின்பணை யொடித்து நறுநீர் வாவி தொறுஞ்சிதறித்
தோட்டின் கமல மலர்ப் பொகுட்டுத்துயில் வண் டெழுப்புந் திருநாடு

காட்டும் கதலிக் கொடுங்கனியும் ,
கமுகின் கனியும், மாங்கனியுங்,
கோட்டின் பலவின் சுளைக்கனியும்,
கூட்டிக் கறியின் கொடி வீழ்ந்து,
நாட்டின் கரும்பின் பணை ஒடித்து,
நறு நீர் வாவி தொறும் சிதறித்,
தோட்டின் கமல மலர்ப் பொகுட்டுத்,
துயில் வண்டு எழுப்பும் திருநாடு.

பொருள்:வாழைகளில் காணப்படும் மிகக்கனிந்த பழங்களும் கமுகிடைப் பழுத்த பழங்களும் மாங்கனிகளும் கொம்பர்களில் பழுத்துத் தொங்கும் பலாக்கனிகளுடன் ஒன்று பிணைந்து , மிளகுக் கொடிகளின் மேல் வீழ்கின்றன. அவ்வண்ணம் வீழ்பவை ; நாட்டகத்து நாட்டி வளர்க்கப்பட்ட கரும்பின் தண்டுகளை உடைத்து, அங்குள்ள நன் நீர்த்தடங்கள் தோறும் சிதறிப் பரவுகின்றன. அவ்வண்ணம் சிதறிப் பரவுவதனால் எழும் ஒலியினாலும் சிதறிப் பரவுந் துளிகள் , மலர்களில் பட்டு அசைத்து ஊசலாடச் செய்வதனாலும்,மலரின் மகரந்தம் நிறைந்த பொகுட்டின் மேல் உறங்கும் வண்டினங்கள் துயில் எழுகின்றன . இத்தகைய பெருவளமும் உயர் சிறப்புங் கொண்டது திருமலை நாடு.

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி.115 அன்னாணண்ணாளென்னாளுமாக என்ற பாடல்

85, [116] நாடுங்குழக்கன்றினைநினைந்துநடந்து குறுந்தாட்கருமேதி (அரு)
யோடுங்கழிபிற்சுரந்து முலையொழுகும்பாலிற்புதுவெள்ள
மேடுங்குவளைக்குழியினமும்விரவிப்பாயக்கயல்குதிகொண்
டாடுமுயரங்கண்டுவெருண்டகலுமுகிலும்வானெல்லாம்

நாடும் குழக்கன்றினை நினைந்து
நடந்து குறுந்தாள் கருமேதி,
ஓடும் கழியில் சுரந்து முலைஒழுகும்
பாலில் புதுவெள்ளம்,
ஏடும் குவளைக் குழியினமும்
விரவிப்பாயக் கயல்குதிகொண்டு,
ஆடும் உயரங்கண்டு, வெருண்டகலும்
முகிலும் வானெல்லாம்

பொருள்: குறுகியதாள்களையுடைய கருமை கொண்ட கன்றீன்ற எருமைகள், மேய்விடம் விட்டுத் தம் கன்றுகளை நினைந்து விரைந்து வரும்பொழுது, தாய்மையுணர்வின் மீதூர்ந்த நிலையினால் அவற்றின் முலைகளிலிருந்து பால் சொரிகின்றன. இது புது வெள்ளமாகப் பெருக்கெடுத்து அழகிய இதழ்களையுடைய குவளைமலர்களின் விரிந்த உள்ளிடங்களில் உள்ள குழிகளில் நிறைந்து, நிலத்திடைப்பரந்து, அவற்றிடையேயுள்ள குழிகளையும் நிரப்பிப் பாய்கின்றது. அதனால் குழிகளில் உள்ள கயல்மீன்கள், மகிழ்ச்சி கொண்டு உயரப் பாய்ந்து விளையாடும். இத்தன்மையினைக்கண்டு வானத்தில் உள்ள முகில்கள் அச்சங்கொண்டு அகலும்.

86. [117] வானுமிளிருமுடுவினமும் மதியும் போலப் புதியதளர்க் (அசா)
கானுமலரும் பளிக்கறையுங்கலந்து வசந்தப் பசுந்தென்ற
றேனுந் தோடும்புளினமுறச் சிதறுஞ் செவ்வித்திரிகூடந்
தானுமருச்சித்தடியிறைஞ்சுந்தகைமைத்தென்னவிளங்கியதே

வானும் மிளிரும் உடுவினமும்,
மதியும் போலப், புதிய தளிர்க்
கானும் மலரும் பளிக்கறையும்,
கலந்து வசந்தப் பசுந்தென்றல்,
தேனும் தோடும் புளினமுறச்,
சிதறும் செவ்வித் திரிகூடம்,
தானும் அரிச்சித்து அடியிறைஞ்சும்,
தமைத்தென்ன விளங்கியதே.

பொருள்: பரந்த வானமும் அதில் ஒளிர்கின்ற வெள்ளியினங்களும் (நட்சத்திரங்கள்) சந்திரனும் போல, புத்தம் புதியதளிர்களையுடைய சோலைகளும்,

---

பா.வே பா.பு.பொ.வை.தே. பதி 116 பா.வே.பா.பு. பொ. வை. தே. பதி 116 எழுந்தானதற்காமிடநோக்கி, என்றபாடல் 117 எழுதுமுழுவைக்கொடி என்றபாடல்

அவற்றிடையே மலர்ந்து மணம் பரப்பும் மலர்களும், பளிங்கு மண்டபமும் இருந்தன. இத்தகைய செழுமை கொண்ட சோலையினிடத்தில், வசந்தகாலத்தின் குளிர்ந்த இளந்தென்றல் புகுந்து, தேனினையும் தேன்நிறைந்த மலர்களின் இதழ்களையும், அவற்றிடையேயுள்ள மரகதப் பெடிகளையுஞ் சிந்துகின்றது. இச் செவ்விய இயல்பு, திரிகூடம் எனப் பகரப்படும் திருமலையினை வணங்கியது போன்றிருந்தது

87. [118] விளங்குமிளங்காவனஞ்சூழ்ந்த வெயிலின்கிரணம்படாதபுவி (அஎ)
தளங்கும்படி வெண்ணிலவெறிக்குந்தனிவெண்குடையான்மனுவேந்தன்
களங்கமடியார்க்கிலையாக்குங்கயிலைப் பெருமானடி பணிந்து
வளங்கொளிலிங்[119]கந்தமக்கொன்று வைத்துப்பணியும்மந்நாளில்

விளங்கும் இளம் காவனம் சூழ்ந்து,
வெயிலின் கிரணம் படாதபுவி,
தளங்கும்படி வெண்ணிலவு எறிக்கும்
தனிவெண் குடையான் மனுவேந்தன்,
களங்கம் அடியார்க்கு இலையாக்கும்
கயிலைப் பெருமான் அடி பணிந்து,
வளம்கொள்இலிங்கம் தமக்கொன்று
வைத்துப் பணியும் அந்நாளில்

. பொருள்: தண்மைமிகு இளமை கொண்ட சோலைகள் திருமலையிடத்தில் செழுமை கொண்டு விளங்குகின்றன. அவ்வண்ணம் சூழ்ந்திருப்பதால் கதிரவனினின் ஒளி உட்புகுதல் இல்லை. இத்தகைய செழுமை கொண்ட நாட்டினை மனுவேந்தன், தன் ஆணைக்குட்படுத்தித் தண்ணொளி வீசும் சந்திரவட்டக் குடைதாங்கி நல்லாட்சி புரிகின்றான். இவன் தென்கயிலைப் பெருமானை என்றும் மறவாது வழிபடும் இயல்பினன். வழிபடும் அடியவர் இடர்தனைக் கடிந்து நிறையன்பு நல்கி, அனைத்துச் சிறப்புக்களையும் கொடுக்கும் இலிங்கத் திருவடிவினைவைத்துப் பூசித்து வந்தனன்.

88. [120] அந்நாணன்னாளெந்நாளுமாகப்புவனி வளஞ்சிறப்பப் (அஅ)
பொன்னாரிதழிக்கயிலாயர்பூசைக்குதவும் பொருட்டாக
விந்நாடனைத்தும் விளைவதற்குக்குளமொன்றியற்றியிருப்பமென
மன்னாவது நன்றெனப்பலரும்வழுத்தமன்னன் கடிதெழுந்தான்

அந்நாள் நன்னாள் எந்நாளுமாகப்
புவனி வளம் சிறப்பப்,
பொன்னார், இதழிக் கயிலாயர்,
பூசைக்குதவும் பொருட்டாக,
இந்நாடு அனைத்தும் விளைவதற்குக்,
குளம் ஒன்று இயற்றி இருப்பமென,
மன்னா அதுநன்றெனப், பலரும்,
வழுத்த மன்னன் கடிதெழுந்தான்,

118 திருந்து மவனிவ்வண்ண, என்றபாடல் 119 லிங்கம் தானுமொன்று என்ற பாடல் பா.வே.பா.பு.தே.பதி 120 கானிருந்ததாதகித்தார் என்ற பாடல்

பொருள்: மன்னா, எல்லாநாட்களும் இறைபணி செய்துவழி பாடியற்றும் நல்ல நாளாக இருத்தல் வேண்டும். மண்ணுலகனைத்தும் வளஞ் சிறத்தல் வேண்டும். அந்நாளே மிகவுயர்ந்த நன்னாள்.

பூசனை, நெறிப்பட இயல்வதற்கு, அழகிய மெல்லிதழ்கள் கொண்டமலர்கள் வேண்டும். அம்மலர்கள் கொண்டு மாமைநிறங்கொண்ட அழகிய உமையொருபாகற்கு வழிபாடு இயற்றல் வேண்டும். நாடெலாம் சிறக்க, வயலும் பூஞ்சோலையும் உட்பட்ட அனைத்தும் வளம் பெற நீர்த் தடமொன்று ஆக்கம் பெறுதல் வேண்டுமெனச் சான்றோர்பலரும் வேண்டினர். அவ்வேண்டுதலையேற்ற மன்னன் செயலாக்கம் காண்பதற்கு விரைந்தெழுந்தான்.

89. [121] எழுந்தானதற்காமிடநோக்கியெறிநீர்நதிபோய் மலைதாக்குங் (அகூ)
கொழுந்தாமனேகங்காதவழிகோலிப்படிக்கற்கரை திருத்தி
விழுந்தாரையினீர் மதகினுக்கு விடுத்தல் பிடித்தலுறுப்பியற்றிச்
செழுந்தாரையினீர்க்குளங்கயிலைச்சிவனார்க்கெனக்கல் வெழுதிவைத்தான்

எழுந்து ஆனதற்காம் இடம் நோக்கி,
எறிநீர் நதி போய் மலைதாக்கும்
கொழுந்தாம் அநேகம் காதவழி
கோலிப், படிக்கற்கரை திருத்தி,
விழும் தாரையின் நீர், மதகினுக்கு
விடுத்தல் பிடித்தல் உறும்பியற்றிச்,
செழும் தாரையின் நீர்க் குளம், கயிலைச்
சிவனார்க்கெனக் கல் எழுதி வைத்தான்.

பொருள்: விரைந்து எழுந்த மன்னன் நீர்த்தடத்தினை அமைபதற்கான இடம் நோக்கிச் சென்றனன். நீர்த்தடத்தினை; மலையடிவாரத்தில் நதிசென்று மறித்துத் திரும்பும் இடத்தில் அமைக்க விரும்பினான். அவ்விடத்தில் பல காதவழிகொண்ட நிலப்பரப்பில் நிலத்தைக் குடைந்து கோதிக் கரைகள் அமைத்துப் படிகள் கண்டினான். அத்தடத்தில் வந்து விழும் நீரினை விடுதல் - தடுத்தல் போன்ற செயல்கட்கு ஏற்றவண்ணம் மடை அமைத்து, இந்நீர்த்தடம் தென்கயிலைச் சிவனார்க்கு உரியது எனக் கல்லில் எழுதி வைத்தான்.

90. [122] எழுதுமுழுவைக்கொடிபடருமிமையம்பொதியநடுவிட்ட (கூ0)
முழுதுந்தனதுகுடைநிழற்று முதல்வன்கயிலைப்பதிமீண்டு
பொழுதங்கவமேபோகாமற்புனிதன் கயிலைப் பெருமானைத்
தொழுதும்புகழ்ந்தும்புராணகதைசொற்றுங்கற்றுமிருந்தான்.

எழுதும் உழுவைக் கொடி படரும்,
இமயம் பொதிய நடுவிட்ட
முழுதும், தனது குடைநிழற்றும்
முதல்வன், கயிலைப் பதிமீண்டு,
பொழுது, அங்கு அவமே போகாமல்,
புனிதன் கயிலைப் பெருமானைத்,
தொழுதும் புகழ்ந்தும் புராணகதை,
சொற்றும் கற்றும் இனிதிருந்தான்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 121 காவலனை முன்னுதைத்த, என்ற பாடல் 122 விளம்பு மொழி யினையுணர்ந்து என்ற பாடல்

பொருள்: இடபம் எழுதப்பட்ட கொடியின் ஆணைசெல்லும் இமயமும் பொதியமும் உள்ளடங்கிய நிலப்பரப்பனைத்தையும், தன்வெண்கொற்றக் குடையின்கீழ் ஆளும் மன்னன்; திருக்கயிலைப்பதிமீண்டு தன் வாழ்நாளினை வீணே கழிக்காது, புனிதனான கயிலாய நாதனை வணங்கியும், புகழ்ந்தும், புராணக்கதையினைச் சொல்லியும் படித்தும் மகிழ்வுடன் இருந்தான்.

## வேறு

91. [123] திருந்துமவனிவ்வண்ணநெடுநாள்வாழ்ந்துதிருப்புதல்வற்கரசளித்துச்சிவன்பொற்பாதத் (கூக)
தருந்துணையேதுணையெனச்சென்றடைந்தானன்னவன்மரபிலொருநிருபனறிவிலாமை
பொருந்தியனுராசபுரியென்னும்பேரூர்புகுந்துகயிலையை மறந்து புவனியாண்டு
மருந்தனையசிவசமயந்தணந்துபுத்தமார்கமெனும்பெரும்பாவவழியிற்புக்கான்

திருந்துமவன் இவ்வண்ணம் நெடுநாள்வாழ்ந்து,
திருப்புதல்வற்கு அரசுஅளித்து, சிவன் பொற்பாதத்து
அருந்துணையே துணையெனச் சென்றடைந்தான்.
அன்னவன் மரபில் ஒருநிருபன் அறிவிலாமை
பொருந்தி, அனுராசபுரியென்னும் பேரூர்புகுந்து,
கயிலை மறந்து புவனியாண்டு,
மருந்தனைய சிவசமயம் தணந்து, புத்தமார்கமெனும்
பெரும்பாவ வழியிற் புக்கான்.

பொருள்: திருவருள் நலன் புரப்பதனையே தன் வாழ்வாகக் கொண்ட மன்னவன்; நீண்டகாலம் வாழ்ந்திருந்தான். பின் தனது அருமை பெறுமகனுக்கு அரசினைக் கொடுத்துச்சிவனது திருவடியே துணையெனக் கொண்டு அவன் திருவடியினைச் சென்றடைந்தான். இம்மன்னன் மரபு வந்த மன்னன் ஒருவன், அறியாமையால் அனுராதபுரியெனப் பெயர் கொண்ட பேரூர் சென்று, கயிலையை மறந்து அந்நாட்டை ஆண்டான், அவன் பிறவிக் கருமருந்தாய் அமைந்த சிவநெறியினை மறந்து புத்த சமயப் பெரும்பாவ நெறி புகுந்தனன்.

92. [124] கானிருந்ததாதகித்தார்கமழுமார்பன்கயவாகுமென்னுமந்தக்கழற்கால்வேந்தன் (கூஉ)
நானிருந்நெறியடைவேயிலங்கையெங்குந்தனிக்குடைக்கீழ்ப்புரக்குமந்தத்தகைமைநோக்கி
வானிருந்துவருந்தவளவரசுதன்னைமணியிருந்தபொற்கரத்தால்வாங்கிவைத்துத்
தேனிருந்தசிறீசங்கபோதியென்னுந்திருநாமந்தரித்தரசுசெலுத்துங்காலம்

கானிருந்த காதகித்தார் கமழுமார்பன்,
கயவாகு என்னுமந்தக் கழற்கால் வேந்தன்,
தானிருந்த நெறியடைவே இலங்கை யெங்கும்,
தனிக்குடைக்கீழ்ப் புரக்கும் அந்தத் தகைமைநோக்கி,
வானிருந்து வரும்தவள அரசுதன்னை, மணியிருந்த
பொற்கரத்தால் வாங்கி வைத்துத்,
தேனிருந்த சிறீசங்கபோதி என்னும்,
திருநாமம் தரித்து அரசு செலுத்தும் காலம்.

பொருள்: தண்மைமிகுந்த சோலைகளிடத்து, மரகதந்தப் பொடிகளைச் சிந்தி தேனினைச் சொரிந்து மணம்பரப்பும் அன்றலர்ந்த மலர்களால்

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 123 நின்றகலாக் கண்ணி ருள என்ற பாடல்
124 அம்பரத்திற்கதிரிரவி என்ற பாடல்

புனையப்பட்ட, மாலைகளை அணிந்த புகழ்பரப்பும் மார்பினையும் வீரக் கழலினையும் அணிந்த கயவாகு என்னும் மன்னன்; தான் கொண்டசமய நெறியினைத் தன் ஆணைக்கு உட்பட்ட இலங்கையனைத்தும் பரவச் செய்ய எண்ணினன். அவன் தேவர்களால் கொடுக்கப்பட்ட செழுமை மிக்க அரசங்கன்றினைத் தன் அழகிய கையினால் வாங்கி அனுராதபுரியில் நாட்டினன். தன் பெயரையுஞ் சிறீசங்கபோதியெனக் கொண்டு அரசு செய்தனன். அக்காலத்தில்;

93. [125]காலனைமுன்னுதைத்தகறைக்கண்டர்கோயிற்கயிலைமலைக்கெதிர்[126]மலையிற்கணமுண்டாக்கிச் (கூரு)
சீலமிகும்புத்தரைச்சித்திரித்து வாழ்நாட்சிவனடியார் பூவெடுத்துச் செல்லுங்காலைப்
[127]பாலருந்தச்சீவகர்கள்பலருங்கூடிப்பறிப்பதனாற்பாசுபதர்பலரும் போந்து,
வேலைதனிலவரைவிழவிட்டாரந்தவெம்மொழியைவேந்தனுக்கு விளம்பினாரே

காலனை முன் உதைத்த கறைக்கண்டர் கோயில்
கயிலை மலைக்கு எதிர்மலையில், கணமுண்டாக்கிச்
சீலமிகு புத்தரைச் சித்தரித்து வாழ்நாள்,
சிவனடியார் பூ எடுத்துச் செல்லுங்காலைப்,
பாலருந்தச் சீவகர்கள் பலரும் கூடிப்,
பறிப்பதனால், பாசுபதர் பலரும் போந்து,
வேலைதனில் அவரை விழவிட்டார்,
அந்தவெம்மொழியை வேந்தனுக்கு விளம்பினாரே.

பொருள்: காலனைக்காலால் உதைத்தவரும் ஆலகாலநஞ்சினைக் கண்டத்தில் அடக்கியவருமாகிய சிவன்; திருவோலக்கங் கொண்டு எழுந்தருளியிருக்கும் தென்கயிலை மலைக்கு எதிர்மலையில், பௌத்தத் துறவியர் கூட்டம் சீலம் மிகுந்த புத்தபகவானின் படிமத்தைத் தீட்டி வாழ்ந்தனர். அப்படி வாழ்ந்த காலத்தில் ஒருநாள், அவ்வழியால் சிவனடியால் பூசனைக்கு மலர் எடுத்துச் சென்றனர். அவ்வேளையில் புத்த துறவியர் ஒன்று கூடி சிவனடியார் கொண்டு சென்ற பூசனைப் பொருட்களைப் பறித்தனர். இதனால் சினங் கொண்ட பாசுபதர் என்ற சிவநெறியாளர் பலரும் ஒன்று சேர்ந்து, புத்தத் துறவியரைக் கடலிடைத் தள்ளிவிட்டனர். இக்கொடுஞ் செயலை, அனுராதபுரியில் இருந்து அரசாண்ட மன்னனுக்குப் புத்த நெறியாளர் தெரிவித்தனர்.

94. [128]விளம்புமொழியினையுணர்ந்துவேந்தன்பொங்கிவிழியிரண்டுங்கனல்பொழியவெகுண்டுவேணிக் (கூச[1])
களங்கமதிக்கபாலிகயிலையெங்கோன்[129]கணமாகவகுப்பனெனக்கருத்திலுன்னித்
துளங்கலிலாச்சதுரங்கப்படையினோடுந்தொடருதலுங்கயிலைமலைச்சோதிநோக்கி
யுளங்கனிவில்லாவரசன்கண்ணிற்சோதியொளியிருளத்திருவுள்ளத்திலெண்ணிநின்றான்.

விளம்பு மொழியினை உணர்ந்து வேந்தன் பொங்கி
விழி இரண்டும் கனல் பொழிய வெகுண்டு, வேணிக்
களங்கமதிக் கபாலி கயிலையெங்கோன்
கணமாக வகுப்பனெனக் கருத்தில் உன்னித்,
துளங்கலிலாச் சதுரங்கப் படையினோடும்,
தொடருதலும் கயிலைமலைச் சோதி நோக்கி,
உளம்கனிவில்லா அரசன் கண்ணிற் சோதி
ஒளி இருளத், திருவுள்ளத்தில் எண்ணிநின்றான்.

---

பா.வே.பா.பு.பொ. வை.தெ.பதி 125 நோக்கியதன்கண்
126 எதிர்மலையாக்கணமுண்டாக்கித் 127 பாலருந்தாச்சீவகர் 128 சூழ்ந்திடுமக்கயிலை என்ற பாடல் 129 கணையாக

பொருள்: புத்தநெறியாளர் கூறிய செய்தியினைக்கேட்ட மன்னவன்; சினந்து எழுந்தனன். அவனது கண்கள் இரண்டும் சினத்தீயினை வெளியிட்டன. கறைகொண்ட மூன்றாம்பிறைச் சந்திரனைச் சடையில் தரித்தவனும், மண்டையோட்டினைக் கையில் ஏந்தியவனுமான கயிலைநாதன் திருமலையெங்கும், புத்ததுறவிகள் தங்கும் பள்ளிகள் அமைப்பேனென எண்ணி நிலைதளரா நால்வகைப் படையுடன் தென்கயிலை நோக்கி வந்தனன். அவ்வேளையில் அன்பற்ற மன்னனின்; கண்ணின் ஒளி குன்றும்படி கயிலைச் சோதியாகிய சிவன் தன்திருவுள்ளத்தில் எண்ணினான்.

95. [130] நின்றகலாக்கண்ணிருளேநிருபனெஞ்சுநினைவுமறந்தவசமுறுநேரங்கோணைக் (கூரு)
குன்றிறையோனொருமறையோன்போன்முன்னெய்திக்கொடுத்திடவத்திருநீற்றைக்கோமான்வாங்கித்
தன்றகையநெறிபேர்ந்து சிவசிவாயசங்கரவென்றுரைத்துநுதற்றரித்தகாலை
யன்றருகுநின்றபுத்தர்பலருமா[131]னித்தறிவழியவொருவிழிநன்றாயதம்மா.

நின்ற காலக் கண்ணிருளே, நிருபன் நெஞ்சு சினைவு மறந்து
அவசமுறும் நேரம், கோணைக்
குன்றிறையோன் ஒருமறையோன் போல் முன்னெய்திக்,
கொடுத்திட அத்திருநீற்றைக்கோமான் வாங்கித்,
தன்தகைய நெறி பேர்ந்து சிவசிவாய சங்கரவென்று
உரைத்து நுதல் தரித்தகாலை
அன்று அருகுநின்ற புத்தர் பலரும் மானீத்து
அறிவழிய ஒருவிழி நன்றாயதம்மா

பொருள். மன்னன் கண்ணிரண்டும் ஒளிகுன்றியதனால் மனத்தடுமாற்றமுற்றான். நினைவும் மறந்தனன். இவ்வேளையில் திரிகோணமலையிறைவன் ஒரு அந்தணன் வடிவுகொண்டு மன்னன் முன் தோன்றித் திருநீற்றினை அவன்கையில் கொடுத்தான். அதனை வாங்கியமன்னன், தன் புத்தநெறியின் நின்றும் விலகிச் சிவசிவாய சங்கர என்றுரைத்து, நெற்றியில் இட்டனன். அதனால் அவனது ஒரு வழி நன்றாக ஒளிபெற்றது. அவ்வேளை மன்னன் பக்கல் நின்ற புத்தநெறியாளர் மானம் இழந்து அறிவு அழிந்தனர்.

96. [132] அம்பரத்திற்கதிரிரவியுதிக்குங்காலையலர்மதியமழுங்குதல்போலரியநாட்டஞ் (கூசா)
செம்பதுமமுகத்தொன்று விளங்கவொன்று செறியிருளாய்நின்றது தெய்வீகமென்று
கும்பிடுதல்செய்தரனார் திருவெண்ணீற்றைக்குழைத்திடுதல் செய்தெவருங்கொண்மினென்றான்
பம்புபுனல்வளநாட்டிற்பாயமுன்னாட்பார்த்திபன்செய்குளநோக்கிப்பரவாநின்றான்.

அம்பரத்தில் கதிர்இரவி உதிக்கும் காலை,
அலர்மதியம் மழுங்குதல் போல் அரியநாட்டம்
செம்பதும முகத்தொன்று விளங்க, ஒன்று
செறி இருளாய் நின்றது தெய்வீகம் என்று,
கும்பிடுதல் செய்து, அரனார் திருவெண்நீற்றைக்,
குழைத்து இடுதல் செய்து எவரும் கொண்மின் என்றான்,
பம்புபுனல் வளநாட்டில் பாய, முன்னாள்
பார்த்திபன்செய் குளம்நோக்கிப் பரவாநின்றான்.

பொருள்: காலையில் ஒளிமிக்க கதிர்களுடன் சூரியன் தோன்றிய வேளையில், வானிடத்தில் தோன்றிய நல்லொளிபோல் முகத்தில் ஒளிபடர, மன்னனின் செம்மைசான்ற முகத்தில் அருமைமிக்க கண்களில் ஒன்று, ஒளிபெற்று

---

பா.பொ.பு.பொ.வை.தே. பதி 130 கண்ணிரண்டும் என்றபாடல் 131 நாணி என்றபாடல் 132 என்றுமரன் என்ற பாடல்.

விளக்கமுற்றிருந்தது. மற்றைய கண்; வானிடத்து- முழுமதிநீங்க இருள்பரவியதுபோல் ஒளியிழந்து இருளாய் இருந்தது. மன்னன் இது தெய்வீகம் என்று கும்பிட்டு; இறைவனின் திரு நீற்றினைக் குழைத்து அனைவரும் உங்கள் உடல்களில் அணிந்து கொள்ளுங்களென்று பகர்ந்தனன். பின் நீர் வளம் நிறைந்த நாட்டின் செழுமையினைப்பேண, அன்று சோழமன்னனால் அமைக்கப்பட்ட பெரு நீர்த்தடத்தினை நோக்கி வணங்கி நின்றான்.

97. [133]நோக்கியதன்கண்டழைத்தகாரணத்தானுவல்பெருங்கண்டழையென்றதற்குணாட்டி (கூஎ)
யாக்கினனித்திருக்குளமுநகருநாடு மரனார்க்குக்குளக்கோட்டனவன்முன்செய்த
பாக்கியநன்றெனமன்னனுவந்தானந[134]தப்பாசுபதர்பவுத்தரது குற்றமெல்லா
நீக்கியொருதிரிகோணப்பெருமான் மேனிநிருமலத்தி[135]னொருமையெனுநெறியிழந்சூழ்ந்தார்.

நோக்கிய தன் [0]கண் தழைத்த காரணத்தால்,
நுவல்பெரும் கண்டழையென்று அதற்கு நாட்டி,
ஆக்கினன் இத்திருக்குளமும் நகரும் நாடும்
அரனார்க்குக் குளக்கோட்டன், அவன் முன்செய்த
பாக்கியம் நன்றெனா மன்னன் உவந்தான்,
அந்தப் பாசுபதர் பவுத்தரது குற்றம் எல்லாம்,
நீக்கி ஒரு திரிகோணப் பெருமான் மேனி,
நிருமலத்தின் ஒருமையெனும் நெறியில் சூழ்ந்தார்

[0]கண்தழை = கந்தழாய்= கந்தளாவ

பொருள்: மன்னன் சிறீசங்கபொதி தன் கண்- மீண்டும் பார்வையினைப் பெற்று மலர்வதற்குக், குளக்கோட்டன் அமைத்த புனிதநீர்ப் பெருந்தடம் ஏதுவாக அமைந்ததனால, அதற்குக் கண்டழை யெனப் பெயர் சூட்டி மகிழ்ந்தனன். அவ்வண்ணம் மகிழ்ந்த சங்கபோதி, இத்திருநீர் நிலையினையும், நகரத்தினையும், நாட்டினையும் சிவனார்க்கு அமைத்துத் திருப்பணி செய்த குளக்கோட்டனின் பேற்றினைப் புகழ்ந்து மகிழ்ந்தான். பாசுபதர்- பவுத்தர் செய்த குற்றங்கள் அனைத்தையும் மன்னித்து அவர்களைத் தண்டனையிலுமிருந்து விடுத்தனன். திரிகோணப் பெருமானின் திருவடி வழிபாடே மும்மல நீக்கத்தினைச் செய்து, ஆத்மனைத்தளையிலிருந்து விடுவிக்குமெனவுணர்ந்து அவ்வொருமை நெறியினை அனைவரும் போற்றிப் பின்பற்றினர்.

98. [136] சூழ்ந்திடு மக்கயிலையினாற்புறமும்வேலைசுழித்தெறிந்ததிவலைமலைச்சுற்றுமுற்றும் (கூஅ)
வீழ்ந்தவர்தம்முடலெடுத்துக்கடவுட்டீர்த்தம்விரவுதலு மன்னிலைமைவினவிவேந்த
னாழ்ந்தபெருந்துயராகியுருகிமெய்சோர்ந்தரகரவென்றழுதரற்றி[137] யார்வ மோடுந்
[138]தாழ்ந்தசடைமுடித்தவர்சந்நிதிபோய்வீழ்ந்தான்சங்கரர்[139] மற்றிருகண்ணுந்தந்தாரங்கண்

சூழ்ந்திடும் அக்கயிலையின் நாற்புறமும், வேலை
சுழித்து எறிந்த திவலை, மலைச் சுற்றுமுற்றும்,
வீழ்ந்தவர்தம் உடல் எடுத்துக், கடவுள் தீர்த்தம்
விரவுதலும், அன்னிலைமைவினவி வேந்தன்
ஆழ்ந்த பெரும் துயராகி உருகி, மெய்சோர்ந்து,
அரகரவென்று அழுது அரற்றி, ஆர்வமோடும்,
தாழ்ந்தசடை முடித்தவர் சந்நிதிபோய் வீழ்ந்தான்,
சங்கரர் மற்றிருகண்ணும் தந்தார் அங்கண்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 133 வைத்ததொருவர் புதைத்த; என்ற பாடல் 134 பாசுபதர்பவுத்தரைக் கொல்பயத்தலாவி 135 ஒமைபெறூ நெறியிற்சூழ்ந்தார்.
பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 136 ஆகமநூனெறியே, என்றபாடல் 137 யரவமோடி, 138 தாழ்ந்தசடைமுடி யிறை, 139 மற்றொருகண்.

பொருள்: தென்கயிலையைச் சூழ்ந்திருந்த கடலின் அலை; சுழித்தெறிந்த திவலை; மலையினைச் சுற்றி அணைத்திடத்தும் சிந்திப்பரந்து, அதன் சுற்றுப்புறத்தில் வீழ்ந்தவர்களின் உடல்களை புனித நீரின் அலைகள் கரையிடத்தே கொண்டுவந்து சேர்த்தது. அதனைக்கண்ட மன்னன் நிகழ்தனவற்றை ஆராய்ந்து அறிந்தனன். அதனால் மிக்க துயரம் கொண்டு நைந்து உடல் சோர்ந்து அரகர என்று அழுது புலம்பினன். பின்மிக்க விருப்புடன்; தாழ்ந்து தொங்கும் திருச்சடையை முடியாகக் கொண்ட இறைவன் சந்நிதி சென்று வீழ்ந்து வணங்கினான். இறைவன் மற்றைக் கண்ணினையும் ஒளிபெறச் செய்து இருகண்களும் நலம் பெறச் செய்தனன்.

99. [140] கண்ணிரண்டுமொருபரமஞானக்கண்ணுங்கயவாகுபெற்றுபயகரங்கள் கூப்பி (கூகூ)
யெண்ணிரண்டு கலைமேலு மிரண்டாயொன்றாயிருந்தபராபரப்பொருளையிறைஞ்சியேத்தி
யண்ணவருச்சனைக்கென்றேயயருங்காலைத்தலைகடலைக்கடந்திருவரந்தணாளர்
நண்ணினரென்றனரவரைக்கொணர்மினென்றானாதனருச்சணைக்கிவரேநலலோரென்றான்

கண்ணிரண்டும் ஒருபரமஞானக் கண்ணும்,
கயவாகு பெற்று உபயகரங்கள் கூப்பி,
எண்ணிரண்டு கலை மேலும் இரண்டாய் ஒன்றாய்,
இருந்த பராபரப் பொருளை இறைஞ்சி ஏத்தி,
அண்ணல் அருச்சனைக்கென்றே அயரும் காலத்து,
அலைகடலைக் கடந்து இருவர் அந்தணாளர்
நண்ணினர் என்றனர், அவரைக் கொணர்மின் [0]என்றான்,
நாதன் அருச்சனைக்கு இவரே நல்லோர் என்றான்.

பொருள்: கயவாகு வேந்தன்; தன்னிருகண்களுடன் தெளிவுடைய அறிவார்ந்த கண்ணினையும் இறையருளால் பெற்றனன். இறைவனைத் தன் இருகைகள் கூப்பி வணங்கினன்.

மேதாகலை, அர்ச்சீசகலை, விகடகலை, விந்துகலை, அர்த்த சந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, . வியாபினிகலை, வியோமரூபிணிகலை, அநந்தகலை, அநாதைகலை, அநாசிருதகலை, சமனோகலை, உன்மானகலை என்ற கலைகள் பதினாறினையுந்தன்னகத்தே கொண்டு, அக்கலைகள் சிவசத்தியென இரண்டாய் இயங்கி ஒடுக்ககாலத்தில் தானே யொன்றாய் சுத்த சிவமாசி நிற்கும் பரம்பொருளை வணங்கி வாழ்த்தி, இறைவற்குப் பூசனை செய்யயாருளர் எனக் கவலையுற்று இருந்த வேளையில், அலைகள் முழங்கும் கடல்கடந்து இரு அந்தணர்கள் வந்தனர். அச்செய்தியினைக் கூறக் கேட்ட மன்னவன் அவர்களைக் கூட்டி வருகவெனப் பணித்தான். அவர்களைக் கண்ட மன்னவன் இவரே ஒளிவடிவான சிவனாற்குப்பூசனை செய்வதற்கு ஏற்ற நல்லோரென்றான். [0] என்றானாதனருச்சனைக்கு என்ற தொடரை என்றான், ஆதன் எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். ஆதன் = ஒளி வடிவானவன்.

100. [141] என்றுமரனருச்சனைக்குமிக்கோரெனனாவிப்பதியின்முதன்மைஇருவோர்குமீந்து (க00)
வெண்றிதுநமது குலக்குரவோராகி விளங்குமெனக்குருவரிசைமிகவுநல்கிக்
கன்றுலவுவெருகுநதிதருப்பையாறுங்கரம்பகநீர்க்கடலளவுங்கணித்தெவெல்லை
துன்றுதிசைநான்குமரன்றனக்கேயென்னச்சொல்லுமவன்கல்லெழுதித்துலங்கவைத்தான்

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 140 நடனவிதந்தருபாதநனினத்தால் என்ற பாடல் 141 செய்தோறுநிரம்புமுத்தம் என்ற பாடல்

என்றும் அருச்சனைக்கு மிக்கோரென்னா,
இப்பதியின் முதன்மை இருவோர்க்கும் ஈந்து,
வென்றிதரும் நமது குலக் குரவோராகி
விளங்குமெனக் குருவரிசை மிகவும் நல்கிக்,
கன்றுலவு வெருகுநதி தருப்பை ஆறும்,
கரம்பக நீர்க் கடலளவும் கணித்த எல்லை,
துன்று திசை நான்கும் அரன்தனக்கே என்னச்,
சொல்லும் அவன் கல் எழுதித் துலங்கவைத்தான்.

பொருள்: சிவனாருக்குப் -பூசனை செய்வதற்கு இவ்விரு அந்தணரும் உரியவரெனக் கூறிய மன்னன் அவ்விருவருக்கும் முதன்மையளித்தான். அவர்களை நோக்கி வெற்றித் திருவணைந்த எமது மரபில் உள்ளவர்கட்கு நீரே குலகுருவாக இருங்களெனக் கூறினன். குலகுருவாக இருப்பதற்குரிய அனைத்தும் நல்கினன். கன்றுகள்மேயும் பசுந்தரை கொண்ட பெருநிலப் பரப்பினைத் தென்கயிலைப் பெருமானுக்கு அறக்கொடையாக நல்கி அதற்குரிய எல்லைகளாக; வெருகல் நதி, தருப்பையாறு, பெருநீர்த்தடம், கடல் என்பவற்றை நான்கு திசைக்கும் வகுத்தான். இதனைக் கல்லில் எழுதி உறுதி செய்து துலங்கவைத்தான்.

101. [142] வைத்தொருவர்புதைத்தநிதிமுழுதுங்கோணமலையரற்கேயுரிமையிந்தவளநாட்டுள்ள (கOக)
கத்துகடல்வளமுமலைவளமுமற்றைக்கரைவளமுங்கழிவளங்கான்வளமுமெல்லாம்
பத்தினிலெட்டுங்கயிலைப்பரற்குமிக்கபங்கிரண்டுமுங்களுக்கேபகுதியாமென்
றெத்திசையும்புகழுனுரைவேந்தன் செப்பேடெழுதியவர்கைக்கொடுத்தானின்பமாக

வைத்தது ஒருவர் புதைத்த நிதி முழுதும் கோணமலை
அரற்கே உரிமை, இந்த வளநாட்டுள்ள
கத்துகடல் வளமும், மலைவளமும் மற்றைக்கரை வளமும்,
கழிவளம், கான்வளமும் எல்லாம்,
பத்தினில் எட்டும் கயிலைப் பரற்கும், மிக்க பங்கிரண்டும்,
உங்களுக்கே பகுதியாமென்று,
எத்திசையும் புகழ் அனுரை வேந்தன், செப்பேடு எழுதி,
அவர் கைக்கொடுத்தான் இன்பமாக.

பொருள்: தனியொருவர் புதைத்துவைத்தநிதி முழுதும் திரிகோணமலை இறைவனுக்கே உரியது. இந்தச் செழுமை கொண்ட நாட்டின் ஒலிமிக்க கடல்வளமும் மலைமடு வளமும், கரைகளில் உள்ள வளமும், உப்பங்கழிவளமும், காட்டுவளமும் உட்பட்ட அனைத்து வருவாயில் பத்தில் எட்டுப்பங்கு தென்கயிலை நாதருக்குரியது. மிகுதி இரண்டு பங்கும், உங்கட்கே உரியது. அதனை நீங்கள் சரி பங்காகப் பங்கிட்டுக் கொள்ளுதல் வேண்டுமென வரையறை செய்த அனுரதபுரி மன்னன் செப்பேட்டில் தன் கூற்றினை எழுத்திக் கொடுத்தான்.

102. [143] ஆகமநூநெறிமுறையேயுதயமுச்சியத்தமய்[144]மாமபரமத்தயாம (கOஉ)
மோகைதருநாற்குலமுமினிமைகூரவுவமையிலாவரன்றனக்குமுவகைசேர
மாகவளப்புழைப்பணைக்கைமுக்கணால்வாய்மதகளிற்றைமுன்பூசைவழுத்தியந்த
நாகநதிமதிமுடித்தகயிலைநாதர்நயந்தசிவார்ச்சனைநியதிநடத்துவித்தான்.

---

பா.வே.பா. பு.பொ.வை.தே. பதி. 142 தன்னிகரில்லாததிருமலை என்றபாடல் 143 அந்த மொழிகேட்ட, என்ற பாடல் 144 நிறையுமத்தயாமம் என்றபாடல்

ஆகம நூல் நெறிமுறையே, உதயம் உச்சி,
அத்தமயம், ஆம் அபரம் அத்தயாமம்,
ஒகைதரும் நாற்குலமும், இனிமை கூர,
உவமையிலா அரன்தனக்கும், உவகைசேர,
மாகவளப் புழைப் பணைக்கை முக்கணால்
வாய் மதகளிற்றை முன்பூசை வழுத்தி, அந்த
நாகநதி மதிமுடித்த கயிலை நாதர்,
நயந்த சிவார்ச்சனை நியதி நடத்துவித்தான்.

பொருள்: ஆகமநூல் விதித்த முறைப்படி, உயிர்கள் அனைத்திற்கும் ஆக்கத்தைத் தரும், அதிகாலை ( ஆம் = வெள்ளார்ப்பு- காலை- உச்சி) மாலை முன்னிரவு ( அபரம்) நள்ளிரவு, ஆகி ஆறுகாலங்களிலும், மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்காக- அந்தணர் அரசர் வணிகர்- உழைக்கும் மக்கள் அனைவரும் நல்வாழ்வு பெறுவதற்காக, ஒப்பற்ற சிவபெருமானுக்கும், துவாரம் கொண்டமைந்த துதிக்கையில், விளாங்கனியினை ஏந்திய, முக்கண்ணினையுடைய - ஞான மதங்கொண்ட கணபதிக்கும் பூசனைக்குரிய நெறிமுறைகளை மன்னன் வகுத்தனன். வகுத்த நெறிமுறையே கணபதிக்கு முதற் பூசையும், நாகத்தை அணியாகப்பூண்டு கங்கையைச் சடையில் தரித்த சிவனார்க்குச் சிவபூசனையும் செய்வித்தான்.

103. [145] நடனவிதந்தருபாதநளினத்தாற்கு நமனையுதைத்தெமையாளநயந்தநீலக் (கOங)
கொடியிடதுபுறமாகப்படருமேனிக்கோணமலைநாதருக்குங்கொண்டல்போலுங்
கடகலுழிக்கரிமுகன்முன்போகக்காளக்கடலொலிப்பப்பங்குனிஉத்திரநாட்கன்னி
மடமகளிர்கவரியிடமறையோர் வாழ்த்தவயங்குதிருநாளுலகம்வாழச் செய்தான்.

நடன விதம்தரும் பாத நளினத்தாற்கு
நமனை உதைத்து எமையாள நயந்த நீலக்
கொடி இடது புறமாகப் படரும் மேனிக்,
கோணமலை நாதருக்கும், கொண்டல் போலும்
கடகல் உழிக் கரிமுகன் முன்போகக், காளக்
கடல் ஒலிப்பப் பங்குனி உத்திரநாள், கன்னி
மடமகளிர் கவரியிட, மறையோர் வாழ்ந்த,
வயங்கு திருநாள், உலகம் வாழச் செய்தான்.

பொருள்: பல்வகைப்பட்ட நடத்தினைச் செய்யும் அழகிய திருவடிகளையுடையவரும், எமனை உதைத்து எம்மைக்காப்பவரும், உயிர்களனைத்தினதும் நலன்பெருக, ஆலகாலநஞ்சினை யுண்டதால் நீலமிடற்றைப்பெற்றவரும், நீலவண்ணம் கொண்ட உமையைத் தன் இடப்பாகமாகக் கொண்டவருமான திரிகோணமலை நாதருக்கும், ஞானமதங்கொண்ட ஓங்காரப் பொருளான கணபதிக்கும், பங்குனி உத்தரநாளில்; மன்னன் விழாவினைச் செய்தனன். அவ்விழா, யானையில் கணபதி முன் செல்லக், கயிலை நாதர் அதனை அடுத்துச் செல்லத், திருமலையினைச் சூழ்ந்த கடல்போல், அடியவர்கள் அரகர சிவனேயென்று ஒலிஎழுப்பக், கன்னிப் பெண்கள் கவரி வீச, அந்தணர் வேத ஒலி எழுப்பி வாழ்த்தச் சிறப்புற நடந்தது. இதன்மூலம் நாடு விளக்க முற, உலகனைத்தும் வாழ மன்னவன் பணிசெய்தான்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி. 145 வைத்தசிவகங்கை என்றபாடல்

104. [146]செய்தோறுநிரம்புமுத்தங்குரம்புதோறுந்திரண்டிருளைதுரத்துதிரிகோணநாதர் (க0ச[1])
பைதோறுமணிக்கிரணம்பரந்துபாயும் பாந்தண்முடித்திருமேனிப்படிவநோக்கி
மெய்தோறுங்கண்படைத்தாற்போலநின்றுவிழிதோறும்புனறுளிக்கவிழுந்துபோற்றிக்
கைதோறுமேந்திமலரீசன்செம்பொற்கழறோறுஞ்சொரிந்துநின்றான்கருணைவேந்தன்.

செய்தோறும் நிரம்பு முத்தம், குரம்புதோறும்
திரண்டு இருளைத் துரத்து திரிகோணநாதர்,
பைதோறும் மணிக்கிரணம் பரந்துபாயும்
பாந்தள்முடித்திருமேனிப் படிவ நோக்கி,
மெய்தோறும் கண் படைத்தாற்போல நின்று,
விழிதோறும் புனல்துளிக்க விழுந்துபோற்றிக்,
கைதோறும் ஏந்தி மலர் ஈசன் செம்பொற்
கழல்தோறும் சொரிந்து நின்றான் கருணைவேந்தன்.

பொருள் : திரிகோணநாதர் எழுந்தருளியிருக்கும் திருமலையிலுள்ள நன்செய் வயல்களில், சங்கீன்ற முத்துக்கள் வரம்புகளாக அமைவுபெற்று இருளை நீக்குகின்றன. கயிலைநாதரின் அணியாக அமைந்த நாகங்களில் அமைந்த மணிகளின் செவ்வொளி எங்கும் பரந்து வீசுகின்றது. இத்திருக்கோல வடிவினைக்கண்ட மன்னவன்; உடல் அனைத்தும் கண்படைத்த இந்திரன் போல நின்று, விழிதோறும் கண்ணீர் சொரிய விழுந்து வணங்கினான். கைகளில் மலர்களை ஏந்தி இறைவன் திருவடிகளில் அவற்றையிட்டு வணங்கிய அன்பு கொண்ட மன்னவன்; கயிலை நாதர் அருள் வேண்டி நின்றனன்.

105. [115]தன்னிகரிலாதிருமலையினூடேதகையதொருபெருமுழக்கந்தமரித்தோங்க (க0ரு)
மன்னனிதுபெருமுழக்கமென்கொலென்று[118]மறைமுதன்மையிருவரையும்வதனநோக்க
வின்னதிருத்தென்மலைக்குக்கீழேபெம்மானினிய[149]திருக்கங்கைநதியிருப்பச்செய்தா
னந்நதியிற்றீர்த்தஞ்சேர்ந்தயன்மால்வானோரருமுனிவர்துதிப்பதென்றாரந்தனாளர்

தன்னிகர் இலாத் திருமலையின் ஊடே,
தகையதொரு பெருமுழக்கம் தமரித்தோங்க,
மன்னன் இது பெருமுழக்கம் என்கொல் என்று
மறை முதன்மை இருவரையும் வதனம் நோக்க,
இன்னதிருத் தென்மலைக்குக் கீழே, பெம்மான்
இனிய திருக்கங்கைநதி இருப்பச் செய்தான்,
அந்நதியில் தீர்த்தம் சேர்ந்து, அயன் மால்
வானோர் அருமுனிவர் துதிப்பதென்றார் அந்தணாளர்.

பொருள்: ஒப்பற்ற திருமலையிடத்தில் பேரோசை ஆர்ப்பரித்துக்கேட்டலும், இப்பெருமுழக்கம் யாது என்று அந்தணர் இருவரது முகங்களையும் நோக்கிக் கேட்டான் மன்னன். அதற்கு அவ்வந்தணர்கள்; இத்திருமலையின்கீழே, இனிமையும் தெய்வீகமும் பொருந்திய கங்கையினைகயிலை நாதர் இருக்கச் செய்தனர். அந்நதியிடத்துப், புனித நீராடப் பிரமன், திருமால்- தேவர்கள் அருந்தவமுனிவர்கள் வந்து கூடுவர். அவர்கள் அனைவரும் புனித நீராடியபின் கயிலை நாதரைப் போற்றி வணங்குவர் அவ்வண்ணம் போற்றி வணங்கும் ஒலியே இங்கு கேட்கின்றதெனப் பகர்ந்தனர்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 146 சுருதி மனுநெறி தவறா என்ற பாடல் 147 பாற்கடலுளிருந்த என்ற பாடல் 148 சைவமறைமுதன்மையிருவரையும் 149 இனிய சிவகங்கை

106. [150]அந்திமொழிகேட்டரசனருணகாலத்தலர்கமலமெனமுகமன்பொழுகநோக்கிச் (க0சா)
சுந்தரமாமறைமுதல்வீரிங்கேகங்கைதோன்றியதொல்கதையெமக்குச் சொல்வீரென்னக்
கந்தவடகயிலையிற்பண்டெம்பிரானைக்[151]கவுரியவிர்சடைக்கரத்தாங்வகிரக்கங்கை
சிந்தைவெருவிடக்கடவுளிரங்கித்தன்கைச்சிறுநகத்தால்வாங்கியிங்கியிங்கேதிகழவைத்தான்

அந்தமொழிகேட்ட அரசன்; அருணகாலத்து
அலர் கமலமென முகம் அன்பொழுக நோக்கிச்,
சுந்தர மாமறை முதல்வீர்! இங்கே கங்கை
தோன்றிய தொல்கதை எமக்குச் செல்வீர் என்னக்
கந்த வடகயிலையில், பண்டு எம்பிரானைக்
கவுரி அவிர்சடைக் கரத்தால்வகிரக், கங்கை
சிந்தை வெருவிடக், கடவுளிரங்கித் தன்கைச்
சிறு நகத்தால் வாங்கி இங்கே திகழவைத்தான்.

பொருள்: மறையோதும் அந்தணர்கள் கூறியவற்றைக்கேட்டமன்னவன், காலைக் கதிரவனைக் கண்ட தாமரைபோல் முகம் மலர்ந்து அந்தணரை அன்பு பொலிய நோக்கினன். அவ்வண்ணம் நோக்கிய மன்னன்; அருமழகு நிறைந்த திருமறையோதும் அந்தணச் சான்றோரே! இவ்விடத்தில் கங்கைநதி தோன்றிய பழைய கதையினை எனக்குச் சொல்வீர்களாக என வேண்டினன். அதற்கு அவர்கள்; அன்றொருநாள் மணம்கமழ சோலை சூழ்ந்த மாண்பு மிகு வடகயிலையில், கயிலை நாதர் உமையோடு திருவோலக்கஞ் செய்திருந்த வேளையில், உமை சிவனாரின் ஒளிபொருந்திய திருச்சடையினைத் தன்கையினால் கூறிட்டு வகிர்ந்தனள். அதனால் சடையிடத்திலிருந்த கங்கை மனதில் அச்சம் கொண்டாள். அதனைக் கண்ணுற்ற கயிலை நாதர், மனம் நெகிழ்ந்து அக்கங்கையினைத் தன் சிறிய நகத்தினால் எடுத்து, இத்தென்கயிலையின் அடிவாரத்தில் வைத்தனன் எனப் பகர்ந்தார்.

107 [152]வைத்தகங்கை[153]யரன்பதமீதோங்கியேந்துமலையருவிபரவிமாவலியுஞ்சூழ்ந்து (க0எ)
முத்தமெறிகாவிரியின்[154] முகமுமாயமுதியகடனடுவினிதுமுழங்குங்காலை
யுத்தரவான்கயிலை முடியுடன்வந்தீசனுலவுமிதனிடைத்திருத்தாளூன்றிநின்றான்.
சுத்தமிதுகதைதென்பாற்கயிலையென்றேசொல்வரென்றார்சைவச் சுருதிவல்லோர்

வைத்த கங்கை; அரன்பதம்மீது ஓங்கி ஏந்தும்
மலை அருவி பரவி, மாவலியும் சூழ்ந்து,
முத்தம் எறி காவிரியின் முகமுமாய முதியகடல்,
நடுவினிது முழங்கும் காலை
உத்தர வான்கயிலை முடியுடன் வந்து, ஈசன்
உலவும் இதனிடைத் திருத்தாள் ஊன்றி நின்றான்;
சுத்தம் இதுகதை, தென்பால் கயிலை என்றே
சொல்வரென்றார், சைவச் சுருதி வல்லோர்.

பொருள்: அவ்வண்ணம் வைத்த கங்கைநதியானது, அரன்திருவடியினைத் தாங்கிநிற்கும் தென்கயிலையிடத்துப்பரவிப்பாய்ந்தது. அவ்வணம் பரவிய கங்கை, மாவலியுடன் கலந்தது. கலந்த கங்கையும் - மாவலியும்; முத்துக்களைச் சிந்தும் காவிரியின் முகமாக அமைந்த கடலிடத்தின் நடுவில் சென்று இனிய ஒலி எழுப்பி முழங்கிய வேளையில் - வானளாவி நிற்கும் உயர்ந்த கயிலைமலையின் முடியுடன் வந்து இவ்விடத்தில் தன் திருவடியினை ஊன்றி நின்றனன். இதுவே இதன் உள்பொருள் வரலாறு. இதனைத் தென்கயிலாயம் எனச் சைவ மறைநெறி வல்லவர்கள் பகர்வர்.

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி. 150 சேர்ந்தநதித்துளிமுடிமேல் என்ற பாடல் 151 அம்மை ,152வாழ்ந்துநீடூழிகாலம்என்றபாடல் 153அரன்பதமீதேந்துமலையருவி 154 முகமும்பாய

108. [155] சுருதிமனுநெறிதவறாப்பரிதிவேந்தன்றொல்குலத்துமுழுமுதல்வீர்தொன்னாள்வந்த (கOஅ)
திருநதியிற்புனன்முகந்துபெருமான்றிங்கட்சென்னியுறவபிடேகஞ்செய்வீரென்ன
வருமறையோர்திருமலையிற்பிலத்துளேகியந்தநதித்தீர்த்தமெடுத்தன்பாலெய்தி
மதிமுடி யிலபிடேகஞ்[156] செயக்கண்டமன்னவர்கோனுளமகிழ்ச்சிமதிகற்பாற்றோ!

சுருதி மனுநெறி தவறாப் பரிதி வேந்தன்,
தொல்குலத்து முழுமுதல்வீர், தொன்னாள் வந்த
திருநதியில், புனல் முகந்து பெருமான்
திங்கட் சென்னியுற அபிடேகம் செய்வீர் என்ன,
வருமறையோர் திருமறையில் பிலத்துள் ஏகி,
அந்த நதித்தீர்த்தம் எடுத்து அன்பால் எய்தி,
மதிமுடி யில் அபிடேகம் செய்யக் கண்ட
மன்னவர்கோன், உளமகிழ்ச்சி மதிக்கற் பாற்றோ.

பொருள்: மனுநீதி தவறாத சூரியகுலத்து உதித்த மன்னன்; அந்தணரை நோக்கி பழைமைமிகு குலத்து உயர் சிறப்புடைய முதல்வர்களே ! எம்குலக்குரு முதல்வீர்!! முன்னாளில் இவ்விடம் வந்து வளஞ் செய்த இக்கங்கையில் புனிதநீர் மொண்டு, சந்திரன் தங்கும் இறைவனின் திருமுடி தோயும் வண்ணம், திருநீர் ஆட்டுங்கள் எனக்கூற, வேதம்வல்ல அவ்வந்தணர்; திருமலையின் அடிவாரத்தமைந்த குகையிடத்துச் சென்று அந்நதியில் புனிதநீர் எடுத்து வந்தனர். அவ்வண்ணம் வந்த அந்தணர், பேரறிவே திருமுடியாகக் கொண்ட இறைவனைப் புனிதநீராட்டினர். அதனைக் கண்ட மன்னவர் தலைவன் அடைந்த மனமகிழ்ச்சியினைக் கூறுதல் இயலுமோ? இயலாது.

109 [157] பாற்கடலுளிருந்ததிருமாலோவல்லன்பரிமளத்தேன்சொரிபதுமத்தயனோவல்ல (கOகூ)
னாற்கவர்வெண்கோட்டயிராவதத்தோனல்லனராதிபனோவல்லனெனும்பெருமைநண்ணிக்
காற்குலவுங்கமலத்தன்சென்னிக்கீசன் கவித்தமுடி யெனப்பெரிதுங்கருதிப்போற்றி
மேற்பிறப்புக்கொருமருந்தாய்ப்புனிதன்தீர்த்தமிகவேந்தியகத்துரைவிந்தஞ்சேர்ந்தான்.

பாற்கடலுள் இருந்த திருமாலோ அல்லன்,
பரிமளத் தேன்சொரி பதுமத்து அயனோ அல்லன்,
நாற்கவர் வெண்கோட்டு அயிராவதத்தோன் அல்லன்,
நராதிபனோ அல்லன் எனும் பெருமை நண்ணிக்,
காற்குலவும் கமலத்தன் சென்னிக்கு, ஈசன்
கவித்த முடி யெனப், பெரிதும் கருதிப் போற்றி,
மேற்பிறப்புக்கு ஒரு மருந்தாய்ப், புனிதன்
தீர்த்தம் மிகஏந்தி, அகத்துளர[0] விந்தம் சேர்ந்தான்.

பொருள்: பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமாலல்லன்; மணம்பொருந்திய தேன்சொரியும் தாமரைமலர்வாழ் நான்முகனுமல்லன்; நான்கு வெண்மையான கொம்புகளைக் கொண்ட அயிராவதம் என்ற வெள்ளையானையை ஊர்தியாகக் கொண்ட இந்திரனுமல்லன்; நரர்கள் தலைவனும் அல்லன் எனப்பகரப்படும் பெருமைக்குரியவனான மன்னன்; புனிதனான சிவபெருமானுக்குத் திருநீராட்டிய புனித நீரினைத்தன் தலையிட்டு ஏத்தினன். அதனை; நறுமணம் கமழும் தாமரைவாழ் பிரமன் திருத்தலைக்கு இறைவனால் சூட்டப்பட்ட முடியெனப் போற்றித் தன் உயர்பிறப்புக்கு இன்ப நல்வாழ்வுக்கு அருமருந்தென விந்தை கொள் உளத்தோடு திருவடியினை நினைந்து மகிழ்ச்சி மேலிட நின்றான்.

([0] விந்தம் என்பது விந்திய மலையைக் குறிக்குமேனும் அக்கருத்து இவ்விடத்திற்குப் பொருந்துமுற அமையாததனால் 110ம் பாடலை நோக்கி 'விந்தை கொள்' எனவும்திருவடி எனவும் கொள்ளப்பட்டது.)

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 155 அம்புயத்துதரத்தண்ணல் என்ற பாடல் 156 செய்தார். 157 தோன்றியகாலை வேதம்

110 [158]சேர்ந்தநதித்துளிமுடிமேற்சேர்த்து மீண்டுஞ்சிவனடியைவணங்கியுளந்தியானித்தன்று(கக0)
நீர்த்தமறுத்தெழுமுகிலுங்கனகம்பெய்யுநிலைமையெனத்தசதானநிதமுஞ்செய்து
பார்த்ததிருவருட்பார்வையெம்பிரானைப்பணிந்துவிடைகொண்டனுரைப்பதியுட்புக்கான்
பூத்தரணிநிருபரெல்லாமதனைக்கேட்டுப் பூசனைவெவ்வேறுபயம் புரிந்து வாழ்ந்தார்

சேர்ந்த நதித் துளிமுடிமேற் சேர்த்து, மீண்டு
சிவன் அடியை வணங்கி, உள்ளம் தியானித்து, அன்று
நீர்த்தம் மறுத்து எழுமுகிலும் கனகம் பெய்யு
நிலைமையெனத், [0]தசதானம் நிதமும் செய்து,
பார்த்த திருவருட்பார்வை எம்பிரானைப்
பணிந்து, விடைகொண்டு, அனுரைப் பதியுள் புக்கான்;
பூத்தரணி நிருபரெல்லாம் அதனைக் கேட்டுப்,
பூசனை வெவ்வேறு உபயம் புரிந்து வாழ்ந்தார்.

பொருள்: மகிழ்சிமேலிட நின்ற மன்னன்; திருமுடி யணிந்த தன் தலைமீதில் மீண்டும் புனித நீரைக்கொண்டு சிவபொருமானை வணங்கினன். உள்ளம் ஒருமைப்பாடு கொண்டு சிவனின் தண்ணருளினைச் சிந்தித்தான். ஏழுமுகில்களும் நீர்பொழிவதற்குப் பதிலாகப் பொன்மாரிபெய்வது போல், பத்து வகைஅறச் செயல்களையும் திருமலையில் தினமும் செய்தனன். பின், என்றுமே திருவருள் நோக்குடன் எழுந்தருளியிருக்கும் கயிலை நாதனைப்பணிந்து விடை பெற்றுத் தன் ஆட்சித் தலைநகரான அனுரதபுரிசென்றடைந்தான். இச்செய்தியினைக்கேட்ட மண்ணாளும் வேந்தர்கள் அனைவரும் தத்தமக்குரிய பணியாக, முறைவகுத்துப் பூசனைகளையும் திருவிழாக்களையுஞ் செய்து வாழ்ந்தார்.

01 தசதானம் = இயல்புடைய மூவர்,
துறந்தார் துவ்வாதவர்- இறந்தார்; தென்புலத்தார்- தெய்வம்
விருந்து- ஒக்கல், எனத்திருக்குறள் கூறும்.

| | |
|---|---|
| இயல்புடையமூவர்: | உள்பொருள் கற்பவர் (பிரமச்சரியம்பேணுபவர்)<br>கற்பிப்பவர் (ஊர்ப்புறத்தே தன்மனைவியோடு இருந்து மக்கள் நலன் பேணிவாழ்பவர்- வானப்பிரசித்தர்)<br>பேரறிவாளர் (துறந்தோர்) |
| துறந்தார்: | அனாதைகள் ( பிறரால் ஒதுக்கப்பட்டவர்) |
| துவ்வாதவர்: | வாழ்வினை அனுபவிக்க வாய்பற்று அல்லலுறும் வறியவர்கள் |
| இறந்தார்: | நடைப்பிணமாய்- மனம்புத்தி என்பவற்றின் செயலற்று அல்லலுற்று வாழும் பித்தர், மரணம் அடைந்தவர் என்பாரும் உளர். |
| தென்புலத்தார்: | சான்றோர்.இனியபண்புடையாளர் பிதிரர்கள் என்பாரும் உளர். |
| தெய்வம் : | தாய் தந்தை ஆசிரியன் தெய்வநிலையடைந்தோர் |
| விருந்து: | வீடுதேடி வருபவர் |
| ஒக்கல் : | சுற்றம் - உறவு |

02 தசதானம்: கல்வி, உணவு, உடை, உறையுள், விருந்து மருந்து இன்சொல், அனைத்துயிர்பேணல், ஒப்புரவு- சமநோக்கு என்பவையும் கொள்ளப்படும்.

---

பா.வே.பொ.பு.பொ.வை.தே. 158 போனதுவணங்கார் என்றபாடல்

## வேறு

111. [159] ஆக்கலா மழிக்கலாமண்டம் யாவையுங் (கககக)
காக்கலாங்கடையுகங்கடந்துநிற்கலா
மேக்குலாந்தென்கயிலாய மேவினார்
பூக்குலாந்திருவடி[160] புகழ்ந்து வந்தித்தால்

ஆக்கலாம் அழிக்கலாம்
அண்டம் யாவையும்,
காக்கலாம் கடையுகங்
கடந்து நிற்கலாம்,
மேக்குலாம் தென்கயிலாயம்
மேவினார்,
பூக்குலாம் திருவடி
புகழ்ந்து வந்தித்தால்.

பொருள்: மேன்மைமிகு தென்கயிலையில் எழுந்தருளி- அருள்செய்யும் சிவபெருமானின் மலர்திருவடிகளைப் புகழ்ந்து வணங்கினால், ஆக்கல்- அழித்தல்- அண்டமனைத்தையுங் காத்தல் என்பவற்றைச் செய்வதோடு ஊழியின் இறுதி கடந்தும் வாழலாம்.

112. [161] வருந்தருதென்கயிலாயமன்னிய (கககஉ)
நிரந்தரன்றாளினைநினைந்துது வாழ்த்துவார்
புரந்தரனிமைய வர்போற்றநீள்வினை
துரந்தரனாவதுஞ்சொல்லவேண்டுமோ

வரம்தரும் தென்
கயிலாய மன்னிய,
நிரந்தரன் தாள்இணை
நினைந்து வாழ்த்துவார்,
புரந்தரன் இமையவர்
போற்ற நீள்வினை,
துரந்து அரன் ஆவதும்
சொல்ல வேண்டுமோ.

பொருள்: நல்வரந்தரும் தென்கயிலையாகிய திருமலையில் எழுந்தருளியிருக்கும், என்றும் உள்ளவனான சிவனின் திருவடிகளை, உள்ளத்தில் மறவாது- நினைந்து, வாழ்த்தி வணங்குபவர்கள், பிரமனுள்ளிட்ட தேவர்கள் போற்ற - தொடரும் பிறவிப்பிணி நீங்கிக் கடவுள் நிலையினை அடைவர். இதனைச் சொல்ல வேண்டியதில்லை.

113. [162] வேண்டியமுத்தியின் விருப்பமீக்கொள (கககங)
வீண்டொருபுராணம்[163]தென்றிசைத்தனன்
காண்டரு முணர்விலிக்கவிதையேனுமின்
னாண்டகைக்கன்பினாலருத்தியாவதே.

பா.வே.பா.பு.பொ.தேவை. 159 நாடுறுமிலங்கைநாடு என்ற பாடல் 160 புகழ்வரத்தினால் 161 விளக்கியகவிதை என்ற பாடல் 162 ஆக்கலாம் அழிக்கலாம் என்ற பாடல் 163 இசைத்தகாதலேன்காண்டகுபொருளிலாக்கவிகள் யாவும்

வேண்டிய முத்தியின்
விருப்பம் மீக்கொள,
ஈண்டு ஒரு புராணமது
என்று இசைத்தனன்,
காண்டரும் உணர்வில்
இக்கவிதை யேனும், மின்
ஆண்டகைக்கு, அன்பினால்
அருத்தி ஆவதே.

பொருள்: முத்தியின்பத்தில் விருப்பம் மிகுதிகொள்ள, இன்றுதென் கயிலையின் புராதன பெருமையினை உணர்ந்தேன். என் உணர்வு வழிகண்டவற்றைற இக்கதையில் அமைவுபெற உரைத்துள்ளேன். இதனைப் பேரொளி வடிவினனான தென்கயிலை நாதனான சிவனுக்கு என் அன்பின் படையலாகப் படைக்கின்றேன்.

114. [164]தேனெனவமுதெனச் சிறக்குங்கல்வியு (ககச[1])
மானநாற்கவிதையு[165]மறனுமோங்குக
ஞானமுஞ்சுருதியுநலனுநீதியுந்
தானமுந்தருமமுந்தழைத்துண்டாகவே

தேனென அமுதெனச்
சிறக்கும் கல்வியும்,
ஆனநாற் கவிதையும்
அறனும் ஓங்குக,
ஞானமும் சுருதியும்
நலனும் நீதியும்,
தானமும் தருமமும்,
தழைத்து உண்டாகவே.

பொருள்: தேன்சுவைபோன்றும், அமுதினால் ஆக்கம் பெற்ற வாழ்வு போன்றும் கல்வி சிறந்து ஓங்குதல் வேண்டும். நற்கவிதைகளால் ஆக்கப்பட்ட நான்மறைகளும், ஆசிரியப்பா வெண்பா- வஞ்சிப்பா- கலிப்பா ஆய பாவினங்களால் ஆக்கப்படும் இன்தமிழ்க் கவிதைகளும், அவற்றின் வழி நிலைப்படுத்தப்படும் அறநெறியும்; சிறப்புற்று ஓங்குக. பேரறிவும் பேரறிவுக்கு வித்தான ஓங்கார நாதமும் அதன் நெறிப்பட்ட பெருநலனும் மனு நீதியும் கொடைமடமும் அறநெறியும் இந்நாட்டகத்துச் செழுமையுடன் திகழ்க.

115. [166] ஆகம நெறிகளுமந்தணாளரும் (ககரு)
யோகமும் வளருக வுலகநீடுக
மேகமுஞ்சைவமும் மேவியோங்குக
போகமும் [167] திருவொடுபொலிந்து வாழ்கவே

---

பா.வே.பா.பு.பொ.வை.தே.பதி 164 வருந்தரு தென்கயிலாயமன்னிய என்ற பாடல் 165 மற்று 166 வேண்டியமுத்தியின் என்ற பாடல் 167 திருவுமண்பொலிந்து

ஆகம நெறிகளும்,
அந்தணாளரும்,
யோகமும் வளருக,
உலக நீடுக,
மேகமும் சைவமும்
மேவி ஓங்குக,
போகமும் திருவொடு,
பொலிந்து வாழ்கவே.

பொருள்: ஆகமத்தில் கூறப்பட்ட ஒழுக்க முறைகளும், மறைவல்ல அந்தணர் வாழ்வும், யோக நெறியும் நாட்டகத்தில் சிறப்புற்று ஓங்குக. அதன்பயனைப் பெற்று உலகமும் நீடு வாழ்க மழைவளஞ்சுரக்குக மேன்மை கொள் சைவ நீதி ஓங்குக. மக்களின் இன்ப வாழ்வு நலம் பெருகிச் சிறந்தோங்குக. அருளும்- பொருளும் எங்கும் பொலிந்து நாடு நலம் பெறுக.

116. [168] வாழிய தென்கயிலையம் பொருப்பும்வையகமும் (கககசா)
வாழிய [169] வன்பர்தங்கணமும் [170] வானமும்
வாழியஞ்[171] செழுந்தொடுவளமுநீதியும்
வாழிய தொண்டர் சீர்வாழிவாழியவே

வாழிய தென்கயிலையம்
பொருப்பும் வையகமும்
வாழிய அன்பர் தம்
கணமும் வானமும்
வாழி அஞ்செழுத்தொடு
வளமும் நீதியும்
வாழிய தொண்டர் சீர்
வாழி வாழியவே

பொருள்: அருளும் செழுமையுங்கொண்ட தென்கயிலை மலை வாழ்க. உலகனைத்தும் வாழ்க. இறைவன் அடியவர்கள் கூட்டம் வாழ்க. தேவர்கள்- உருத்திரர்களாகிய கணத்தவரும் வாழ்க. திருவஞ்செழுத்தாய மறைமொழி உலகெலாம் பரவிச்செழுமையூட்டுக. அதன்பயன் கொண்டு பெருவாழ்வு வாழ்க. அனைத்துலகும் வளம் பொலிந்து நீதி நிலை பெற்று வாழ்க இறைபணிபுரியும்சிவனடியார் கூட்டம் வாழ்க.

திருநகரச்சருக்கம் முற்றிற்று
திருவிருத்தம் 116

பாயிரம் 15; ஈழமண்டலச்சருக்கம் 39, திருமலைச்சருக்கம் 94 புவனோற்பத்திச்சருக்கம் 39; அர்ச்சனாவிதிச்சருக்கம் 86, மச்சாவதாரச்சருக்கம் 48; தருசனாமுத்திச்சருக்கம் 195 திருநகரச்சருக்கம் 116; ஆக - திருவிருத்தம் 632.

---

பா.வே.பா.பு.பொ.வை.தேபதி. 168 தேவையின்மன்செகராசசேகர, என்ற பாடல் 169 மெய்யன்பர் 170 வண்மையும் 171 அஞ்செழுத்தினில்

# 8
# திருநகரச் சருக்கத்தில்
## கூடுதலாக இடம்பெற்ற பாடல்கள்

1. *வாழ்ந்துநீடூழிகாலம் வருங்கயவவாகுவென்பான்* (107)
*சூழ்ந்தபேருலகங்காத்துப் பரகதிதொழுது சேர்ந்தான்*
*றாழ்ந்த வார்சடையானீறுஞ்சமயவஞ்செழுத்துமெஞ்ச*
*வீழ்த்தபல்சமயம்யாவும் பின்னரும்விரவிற்றம்மா*

-

2. *அம்புயத்துதரத்தண்ணலமைத்தவாரியர்தங்கோமா* (108)
*னும்பர்வந்திறைஞ்சுஞ்சேதுவுயர்கரைக்காவல்வேந்தன்*
*செம்பொன்மாமவுலிச்சென்னிச்செகராசசேகரேசன்*
*றும்பையஞ்சடையான்சைவந்தோன்றிடத்தோன்றினானால்*

-

3. *தோன்றியகாலைவேதந்தொனித்தனசிவனூற்சைவ* (109)
*மான்றமர்வெள்ணீறள்ளியணிந்தனரலங்கல்வாகை*
*வான்றனிச்சிங்கைகாவலன்மன்னனோர்சிங்கந்தோன்ற*
*வேன்றபல்சமயமெல்லாங்கரியெனவிரிந்துபோன*

-

4. *போனதுவணங்கார்செல்வம்புகுந்ததுபுகுந்தோர்க்கின்ப* (110)
*மானதுசிவனூலோசையழிந்தது பிறநூலகந்த*
*மானதனடத்தும்பூசைவயங்குதென்கயிலைச்சென்னி*
*ஞானமாமூர்த்திகொள்ளச்சிறந்ததுநன்னாடெங்கும்*

-

5. *நாடுறுமிலங்கைநாடுநாற்றறிசைநாடுமன்னா* (111)
*னீடுறுகவிகைத்திங்கணிநிழலிடைப்படிந்ததெங்கும்*
*வாடுறுகலியுமில்லைமனத்துறுதுயருமில்லை*
*யாடுறுபதாகைச்சேவுமனுதினம்விளங்குமாதே*

-

6. *விளக்கியகவிதையிவ்வகையின்மேவிய* (112)
*களக்கடுவுடையவன்கயிலைமால்வரை*
*துளக்கிலாச்சதுர்மறைச்சுருதிவண்டென*
*வளக்கர்வெண்கமலமொன்றலர்ந்த*

-

7. *தேவையின்மன்செகராச சேகரக்* (116)
*கோவையினுதித்தசீர்க்குமாரசூரிய*
*னாவியுமுடலுமொத்தளித்தகல்வியின்*
*மேவியகாப்பியம்விமலர்க்காயதே*

மூலம்: பு.பொ.வைத்திலிங்க தேசிகர் பதிப்பு
கி.பி. 1916. நள ஆண்டு சித்திரை

